# Precious Stone Jewellery

***Blue Saphire / Zircon Collections :-***
***Total Cost : Rs. 22, 300/-***
*(Including making charges of Rs. 1500/-)*

SWARNALAYA
S
Jewellery

5, Bazulla Road, T.Nagar, Chennai - 17 Tel : 8156386, 8157787 Cell : 9841035305
e-mail : asukumaran@eth.net www.swarnalayajewellery.com

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
புதிய ஈ மெயில் முகவரிகள் : எடிட்டோரியல் : kalki@kalkiweekly.com
சந்தா : subscription@kalkiweekly.com பிற தகவல்கள் : info@kalkiweekly.com



யுகபாரதி

எழுதும் **கவிதை** தொடர்

# காதல் பிசாசே!



**கல்கி**

தீபாவளி ரிலீஸ்



# A for ACTION

**-பிரசாந்த்**

"தமிழ் சினிமா வரலாற்றில் இதுவரை வெளிவந்த படங்களிலேயே அதிக பொருட்செலவில் தயாரிக்கப்பட்ட படமாக 'ஜெய்' இருக்கும். எனது சினிமா வாழ்க்கையின் ஆக்ஷன் கனவு இந்தப் படம். இதற்கென்று கடந்த மூன்று மாத காலமாக கடுமையான உடற்பயிற்சி மூலம் எனது உடலை இரும்பாக்கியிருக்கிறேன். சினிமாவில் இதுவரை நான் யாரையும் போட்டியாக நினைக்கவில்லை. ஆனால், இனி யாராவது என்னுடன் போட்டிப் போட நினைத்தால் தயார்'' என்று தனது புதிய சைஸ் புஜத்தை மடக்குகிறார் பிரசாந்த்.

படத்தில் ஹாலிவுட்டிற்கு இணையான சண்டைக்காட்சிகள் இடம் பெற வேண்டி, ஜாக்கிசானின் சண்டைப் பயிற்சியாளர்கள் சாமோவங்க் குழுவினரையும் ஆஸ்கர் விருது பெற்ற 'கிரவுச்சிங் டைகர் ஹிடன் டிராகன்' படத்தின் ஸ்டண்ட் மாஸ்டர் யூன்-வோ- மங்க் குழுவினரையும் 'ஜெய்' படத்திற்காக கோடம்பாக்கத்திற்கு அழைத்து வருகிறார்களாம்.

"ஒரு போர்க்காலச் சூழலில், கார்கில் எல்லையில் வாழும் குடும்பங்கள் இடம் பெயர்ந்து செல்வது போலவும், அப்போது பாகிஸ்தான் குண்டுவீச்சில் பலர் இறப்பது போலவும், தத்ரூபமான காட்சிகளைப் படம் பிடிக்க இந்திய ராணுவத்திடம் அனுமதி கோரியிருக்கிறோம்'' என்னும் பிரசாந்த், ஜெய் படம் தமிழ் சினிமாவைத் தொழில் நுட்ப ரீதியாக உலகத் தரத்திற்கு எடுத்துப் போகும் என்று நம்புகிறார்.

-விஜய்

# B for BACKDROP



“கதைக்களம் என்றாலே அதில் ஹாலிவுட்டை அடிச்சுக்க முடியாதுன்னு சொல்லலாம். போர்க் களத்தைக் கதைக்களமாக வைத்து எடுக்கப்பட்ட ஹாலி வுட் படங்கள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். நம்மையும் போர்க்களத்துக்கே கூட்டிக் கொண்டு போற மாதிரி ஹாலிவுட் போர்ப்படங்களில் அவ்வளவு தத்ரூபமாக கதைக்களம் இருக்கும். சமீபத்தில் மனோஜ் நைட் ஷ்யாமளன் இயக்கி உலகம் முழுக்க கலக்கிக் கொண்டிருக்கும் ‘சயின்ஸ்’ படத்தின் கதைக்களம் என்னை உலுக்கிடுச்சு. பறக்கும் தட்டு, ஏலியன் ஸ்பேஸ் கிராப்ட் பத்தி ஹாலிவுட்டில் நிறையப் படம் வந்திருக்கு. ஆனால் சயின்ஸ் படத்திலே ஒரு இடத் திலே கூட பறக்கும் தட்டைக் கண்ணில் காட்டாமல் ஒன்றரை மணி நேரம் நம்மைப் பயமுறுத்திவிடுகிறார். அந்தப் படத்தில் கிராமப்புற அமெரிக்கப் பகுதியில் தனிமையாய் ஒரு பண்ணை வீடு. அந்த வீட்டைச் சுற்றி கடல் மாதிரி சோளப் பயிர் தோட்டம். இதுதான் கதைக் களம். இங்கே வெளிக்கிரகவாசிகள், பறக்கும் தட்டில் வந்து இறங்கி, பண்ணை வீட்டுக் கூரையில் ஏறி ஓடுகிற மாதிரி அறிகுறிகள்தான் படம் முழுக்க... நாமும் அந்த வீட்டிற்குள் மாட்டிக் கொண்டு தவிக்கிற மாதிரி ஓர் உணர்வு.

நான் இப்போ நடித்துக் கொண்டிருக்கும் ‘பகவதி’ படத்தில் ஒரு நீதிமன்றமும், சைதாப்பேட்டை மாதிரி, நடுத்தர மக்கள் அதிகம் வாழும் ஒரு நெருக்கடியான தெருவும்தான் கதைக்களம். இந்தப் படத்தில் ஒரு சாதாரணத் தொழிலாளியாக நடிக்கிறேன். என்ன தொழிலாளி என்பது இப்போ சஸ்பென்ஸ்!

-சூர்யா

# C for CHARACTER



“கொஞ்சம் நெருப்பு, நிறைய நிலவு என்பதுதான் நிஜத்தில் எனது கேரக்டர். அத்தனைச் சீக்கிரம் எனக்குக் கோபம் வராது. ‘பூவெல்லாம் கேட்டுப் பார்’ படம் வரையிலும், நிஜ வாழ்க்கையில் நான் எப்படியிருப்பேனோ அதே மாதிரிதான், எனக்குக் கேரக்டர்கள் அமைந்தன. இதிலிருந்து என்னை வேறுபடுத்திக் காட்டிய முதல் படம் ‘ப்ரெண்ட்ஸ்’. இதில் சந்துரு என்கிற முரட்டு இளைஞனாக நடித்திருந்தேன். ‘சூர்யாதான் இத்தனை ஆக்ரோஷமாய் நடித்திருக்கிறாரா’ என்று ஆச்சர்யமாய்ப் பார்த்தார்கள். அடுத்து என்னைத் தலைகீழாகத் திருப்பிப் போட்டது ‘நந்தா’ பாத்திரம். எனக்கு முதல் ரசிகர்கள் அம்மா, அப்பா, தங்கை மூவரும்தான். அண்ணனென்கிறதையே மறந்து போய் ‘உன்னை நந்தாவாகத்தான் பார்க்க முடிந்தது’ என்று தங்கை முதல்முறையாகப் பாராட்டினாள். நந்தாவில் கிளிசரின் போட்டுக் கொள்ளாமல் அழுதேன். அந்த அளவுக்கு என்னை ஒன்றிவிட வைத்துவிட்டது அந்தப் பாத்திரம். நந்தாவில் நடித்தபோது வீட்டில் யாரோடும் பேசவில்லை. பேசவும் தோன்றவில்லை. அப்படி என்னை நந்தா பாத்திரம் ஆக்கிரமித்துக் கொண்டது. பயந்து போன அம்மா, படம் முடியும்வரை பொறுமையாக இருந்துவிட்டு, ‘இனி இந்த மாதிரி கேரக்டர் எல்லாம் நடிக்காதேடா’ என்று அழுதே விட்டார்கள்.

“நந்தா’வுக்குப் பிறகு மீண்டும் தலைகீழ் திருப்பமாக ‘உன்னை நினைத்து’ படம் அமைந்துவிட்டது. இதில் மென்மையான, துரோகம் செய்கிற காதலிக்கே உதவி செய்வதுபோல, ஒரு பாசிட்டிவ் இளைஞன் கேரக்டர். இந்தப் பாத்திரம்தான் என்னை சாதாரண ரசிகரிடமும் கொண்டு போய்ச் சேர்த்திருக்கிறது. அப்பாவுக்கு சிந்து பைரவி எப்படியோ, அதே போல் பெண்களைக் கவரும் பாத்திரமாகவும், மக்கள் மனத்தில் நிற்கும் பாத்திரமாகவும் அமைந்துவிட்டது.

“இப்போது ‘காக்க காக்க’ படத்தில் எனக்கு அன்புச்செல்வன் என்கிற இளம் போலீஸ் அதிகாரி பாத்திரம். இதிலும் ஒரு மாறுபட்ட சூர்யாவை நீங்கள் பார்க்கலாம்.”

**–விக்ரம்**

# D for DIRECTOR



பெரும்பாலான டைரக்டர்கள் அதிகம் உணர்ச்சிவசப்படுகிறவர்களாக இருப்பார்கள். அவர்களின் கோபம் நியாயமாக இருக்கும் பட்சத்தில், அதைப் பெரிது படுத்தக் கூடாது. பெரிதுபடுத்தினால் ஈகோ வெடிக்கும். ஈகோவெடித்தால், உங்கள் நடிப்பில் செயற்கைத்தனம் ஒட்டிக் கொள்ளும், இயக்குனரின் ஈடுபாடு குறையும். படம் முழுவதும் முடிந்து அதைப் போட்டுப் பார்க்கும்போது, இருவருக்குமான இடைவெளியைப் படத்தின் தரம் காட்டிக் கொடுத்துவிடும். ஒரு நடிகன் தனது பாத்திரத்தை நேசிப்பது போல, அந்தப் பாத்திரத்தை உருவாக்கிய இயக்குனரையும் நேசிக்க வேண்டும் என்பது நான் கற்றுக் கொண்ட அனுபவப்பாடம்.

"சமீப நாட்களில் என்னை வியக்க வைத்த இளம் இயக்குனர்களில் முக்கியமானவர் பாலா. சின்னச் சின்ன ரியாக்ஷன்களைக் கூட, நல்லபடி வெளிப்படுத்த வைப்பார். காட்சியை விளக்கி, நடித்தும் காட்டி அழுதுவிடுவார். அந்தக் கணமே நமக்கு காட்சிக்கான மனநிலை வந்துவிடும். படப்பிடிப்புத் தளத்திற்கு வந்த பிறகுதான் காட்சிகளை இம்புரூவ் பண்ணுவார். படத்தில் இடம்பெறும் முக்கியப் பாத்திரங்கள் தான் என்றில்லை... சிறு பாத்திரத்தைக்கூட நன்றாக நடிக்க வைத்து விடுவார். இவரிடமிருந்து வர வேண்டியது நிறைய இருக்கிறது. பாலாவின் இயக்கத்தில் 'பிதாமகன்' படத்தில் மீண்டும் நடிக்க இருக்கிறேன்.

தொகுப்பு : விஷுவல்தாசன்




# அல்லயன்ஸ்



# நூற்றாண்டு விழா

## நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்

**18.10.2002 நாரத கான சபா, 314, T T K சாலை, சென்னை - 18**

**மாலை 6.00 மணி**

**பங்கேற்பவர்கள்**

சோ, கவிஞர் வாலி, எம். கோபாலகிருஷ்ணன், திலகவதி IPS, சிவகுமார் (நடிகர்), Dr. U. ஸ்ரீநிவாஸராகவன், லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி

**நூற்றாண்டு வெளியீடுகள்**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூஜ்யஸ்ரீ மஹா ஸ்வாமிகள் வரலாறு - சாம்பமூர்த்தி ஸாஸ்திரிகள், பி.என். பரசுராமன் | | | ரூ. 500 /- |
| 2. | நம்மவர் செய்த விந்தைகள் | - 100 | என். ஸ்ரீநிவாஸன் | ரூ. 100 /- |
| 3. | அவர்கள் செய்த விந்தைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 4. | உலக மகா கொடுங்கோலர்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 5. | உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 6. | விந்தை உயிரினங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 7. | அரண்மனை ரகஸியங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 8. | உலகப் புகழ் பெற்ற கட்டடங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 9. | நம்ப முடியாத உண்மைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 10. | வியப்பூட்டும் உண்மைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 11. | தாவர உலகிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 12. | விந்தைத் தாவரங்களும் மூலிகைத் தாவரங்களும் | - 100 | " | ரூ. 100 /- |
| 13. | யார் என்ன சொன்னார்கள் ? | - 100 | " | ரூ. 100 /- |
| 14. | நீருலகிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 15. | பாலூட்டிகள் வரிசையிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 16. | தமிழ் வளர்த்த பெருமக்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| | (இவை 100 தலைப்புகள் வரை வெளிவர உள்ளது.) | | | |
| 17. | கு.ப.ரா. எழுத்துக்கள் (எட்டு தொகுதிகள்) (அல்லயன்ஸ் கு.ப.ரா. நூற்றாண்டு வெளியீடு) | | கு.ப.ரா. | ரூ. 700 /- |

**எங்களை வளர்த்தவர்களையும், வளர்த்து வளர்ந்தவர்களையும் பாராட்டுதல்**

1. ராஜாஜி, 2. சோ, 3. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, 4. கி.வா.ஜ., 5. த.நா. குமாரசாமி, 6. கா.ஸ்ரீ.ஸ்ரீ., 7. எஸ்.வி.வி., 8. பி.ஸ்ரீ., 9. த.நா. சேனாபதி, 10. கு.ப.ரா., 11. தேவன், 12. என். ஸ்ரீநிவாஸன், 13. பி.என். பரசுராமன், 14. சிவன், 15. இந்தியன் வங்கி.

**விழா அரங்கில் மாலை 5.00 மணி முதல் அல்லயன்ஸ் புத்தகங்கள் கண்காட்சி**

## சிறப்புத் தள்ளுபடி 20%

(விழா அரங்கில் மட்டும்தான்)

நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குபவர் : சுதாங்கன்

**அனைவரும் வருக !**

சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

வால்மீகி ராமாயணம் பிற நூல்கள்

மெரீனா எழுதிய சிரிப்பு நாடகங்கள்

தேவன் எழுதிய துப்பறியும் சாம்பு பிற நூல்கள்

கி.வா.ஜ.வின் தமிழ்ப் பழமொழிகள்

சிவன் எழுதிய உலக இலக்கிய வரிசை

எஸ்.வி.வி., அநுத்தம்மா, எண்டமூரி
வீரேந்திரநாத், யத்தன்னபூடி
சுலோசனாராணி, கோட்டயம் புஷ்பநாத்,
பி.எஸ். ராமையா, கு.ப.ரா., பி.ஸ்ரீ. – நூல்களும்

பி.என். பரசுராமன் எழுதிய நூல்கள்

என். ஸ்ரீநிவாஸன் எழுதிய
இந்த நாளில் அன்று... – மற்றும் பிற நூல்களும்

நூற்றாண்டு விழாவில் வெளியிடப்படும் நூல்கள்
அனைத்து அல்லயன்ஸ் நூல்களும்
(கையிருப்பில் இருப்பது மட்டும்)
18.10.2002 அன்று விழா அரங்கில் கிடைக்கும்.

## மணியன்

# மதமாற்றத் தடைச்சட்டம்!

**அ.தி.மு.க., பா.ஜ.க. தவிர அனைத்துக் கட்சிகளும் எதிர்க்கும் மத மாற்றத் தடை சட்டத்தைப் பற்றி விவாதிக்கிறார்கள் விச்வ ஹிந்து பரிஷத்தின் தமிழக துணைத் தலைவர் ஆர்.வி.பி.எஸ். மணியன் மற்றும் பேராயர் எஸ்றா சற்குணம்.**



**மணியன்:** மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா, அருணாசல பிரதேசம் ஆகிய மாநிலங்களில் இது போன்ற சட்டங்கள் ஏற்கெனவே இருக்கின்றன. அந்தச் சட்டங்களில் உள்ள ஷரத்துக்களை உள்ளடக்கித்தான் தமிழகச் சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது. ஒருவருக்கு மதத்தை பரப்ப, பிரசாரம் செய்ய அனுமதி உண்டு; ஆனால் இன்னொருவரை மதம் மாற்ற, குறிப்பாக ஆசை காட்டுவதோ அச்சுறுத்துவதோ அல்லது மோசடி செய்வதோ, தண்டனைக்குரியது என்று கூறப் பட்டுள்ளது. உண்மையாகவே ஒருவர் மதம் மாற விரும்பினால் அதற்கு எந்தத் தடையும் இல்லை. அவர் மாஜிஸ்ட்ரேட் முன்பு சென்று மாறிக் கொள்ளலாம். இந்தச் சட்டம் வந்ததாலேயே மத மாற்றம் நின்று விடும் என்று சொல்ல நான் முட்டாளல்ல. அப்பாவி தலித் மக்கள், ஆசை காட்டி மதமாற்றம் செய்யப்படும்போது இந்துக்கள் இந்தச் சட்டத்தின் துணையை நாட முடியும். இனி அவர்களை ஏமாற்றி மதம் மாற்றும் கொடுமை குறையும்.

**எஸ்றாசற்குணம்:** முதலில் ஒரு விஷயத்தைத் தெளிவு படுத்துகிறேன். கட்டாய மதமாற்றத்தை கிறிஸ்துவம் ஒருபோதும் அங்கீகரித்ததில்லை. கட்டாயப்படுத்தியோ பயமுறுத்தியோ வழங்கப்படும் ஞானஸ்நானம் கிறித்துவ சட்டப்படி செல்லாததாகிறது. எனவே கட்டாய மதமாற்றம் என்பது பொய், பித்தலாட்டம், கற்பனை!

# எஸ்றா சூடான விவாதம்

**மணியன்:** 1982ல் குமரி மாவட்டத்தில் மண்டைக்காட்டில் இந்துக்களுக்கும் கிறித்துவர்களுக்கும் மோதல் நடந்தது. இதை விசாரித்து அறிக்கை கொடுத்த நீதியரசர் வேணுகோபால், "மத மாற்றத் தடைச் சட்டம் கொண்டு வரப்படவேண்டும்" என்று சொல்லியிருக்கிறார். இருபது வருடங்களுக்குப் பிறகுதான் அந்தச் சட்டம் கொண்டு வரப் பட்டிருக்கிறது. இப்போது அதை ஜெயலலிதா அரசு கொண்டு வந்தற்கு காரணம், சமீப காலங்களில் தொடர்ச்சியாக நடந்து வரும் மதமாற்றும் நிகழ்ச்சிகள்தான்.



**எஸ்றா:** அரசியலமைப்பு சட்டம் 25ன் கீழ் ஒவ்வொரு இந்தியனும் மனப்பூர்வமாக அவன் விரும்பும் மதத்திற்கு மாறும் உரிமை இருக்கிறது. அப்படிப்பட்ட உரிமை தவறாகப் பயன்படுத்தப் பட்டால் இ.பி.கோ 420ன் கீழ் கைது செய்து விசாரணை நடத்தலாம். இதுபோன்று சட்டப் பாதுகாப்பு ஏற்கெனவே இருக்கையில் எதற்காக இந்த அவசரச் சட்டம்?

இது தவிர மதம் மாறியவர்கள் மீண்டும் பழைய மதத்துக்கே செல்வது பற்றி (reconversion) இதில் ஒன்றுமே சொல்லப்படவில்லையே, அப்படியென்றால் இது சிறுபான்மையோருக்கு எதிராகக் கொண்டு வரப்பட்ட சட்டம்தானே! ஒருவர் ஏன் மதம் மாறுகிறார். தான் சார்ந்துள்ள சமூகத்தில் தன்னை ஏற்றுக் கொள்ளாதபோது புறக்கணிக்கப்படும்போது, அலட்சியப்படுத்தப்படும்போதுதானே மதம் மாறுகிறார். உங்கள் ஜாதி அமைப்பில் தலையில் பிறந்தவர், உந்தியில் பிறந்தவர் என்றெல்லாம் சொல்கிறீர்கள். ஆண்டவர் படைப்பில் வேறுபாடுகள் உண்டா?



**உங்கள் ஜாதி அமைப்பில் தலையில் பிறந்தவர், உந்தியில் பிறந்தவர் என்றெல்லாம் சொல்கிறீர்கள். ஆண்டவர் படைப்பில் வேறுபாடுகள் உண்டா?**

**மணியன்:** ஜாதியில்லை என்று சொல்லும் கிறிஸ்துவத்திலும் தலித் கிறிஸ்துவர், நாடார் கிறிஸ்துவர் என்று எத்தனை பிரிவுகள். எல்லா கிறிஸ்துவர்களும் ஒருவருக்குள் ஒருவர் திருமண சம்பந்தம் வைத்துக் கொள்கிறீர்களா? அங்கும் அவர்கள் நசுக்கத்தானே படுகிறார்கள். எதையோ எதிர்பார்த்து போன பலர் மீண்டும் இந்து சமூகத்துக்கே திரும்பி விட்டார்கள்.

**எல்லா கிறிஸ்துவர்களும் ஒருவருக்குள் ஒருவர் திருமண சம்பந்தம் வைத்துக் கொள்கிறார்களா? அங்கும் அவர்கள் நசுக்கத்தானே படுகிறார்கள்.**

**எஸ்றா:** கிறிஸ்துவ மிஷினரிகளைப் பற்றித் தவறாகச் சொல்கிறார்கள். They came and touched the untouchables இதுதான் உண்மை. ஒரு சாப்பாட்டுக்கு ஒருவரை மதம் மாற்றியிருந்தாலோ அல்லது, ஒரு பள்ளி அட்மிஷனுக்கு மதம் மாற்றியிருந்தாலோ, இந்த நாட்டில் கிறிஸ்துவர்கள்தான் மெஜாரிட்டியாக இருந்திருப்பார்கள். தலித்துகளை நீங்கள் புறக்கணித்தீர்கள். கிறிஸ்துவம் அவர்களை அணைத்துக் கொண்டது!



**மணியன்:** தாழ்த்தப்பட்டவர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள். கொடுமைப்படுத்தப் படுகிறார்கள் என்பதால்தான் நாடு விடுதலையானதும் அவர்களுக்குப் பல சலுகைகளும் அவர்களுக்கெதிரான குற்றங்களைத் தடுக்க சட்டங்களும் போடப்பட்டன. அரசியல் சட்டத்தில் பாதுகாப்பும் வழங்கப்பட்டது.

**எஸ்றா:** சலுகைகள் கொடுத்ததே இந்து சமயத்தில் அவர்கள் இருக்க வேண்டுமென்பதற்காகத்தானே. இதுவும் ஒருவகை ஆசை காட்டல் தானே!

**மணியன்:** சந்தேகமே வேண்டாம். இந்த நாட்டுக்காக பாடுபட்டவர்கள் – அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் இந்தத் தேசத்தின் பண்பாட்டில், தர்மத்தில் நம்பிக்கை கொண்டிருந்த ஹிந்துக்கள். எனவேதான் அப்பாவி தலித்துகள் கிறிஸ்துவர்களால் exploit செய்யப்பட்டு மதம் மாற்றப்படுவதை ஒழிக்கத்தான் பாதுகாப்பு கொண்டு வந்தார்கள். மதம் மாறிச் சென்றவர்களின் கதி என்ன? இதே சலுகைகளைத்தானே மதம்



ஆர்.எஸ்.எஸ். கைப்பாவையாக செயல்படும் ஜெயலலிதா, அரசியல் ஆதாயங்களுக்காக இது போன்று அடிப்படை உரிமையைப் பறிக்கும் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்.

மாறிய தலித் கிறிஸ்துவர்களும் கேட்கிறார்கள்! இது எதைக் காட்டுகிறது? அவர்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் இல்லை என்பதும், அங்கும் அவர்களுக்கு அதே நிலை தொடர்கிறது என்பதையும்தானே!

**எஸ்றா:** அம்பேத்கர் உருவாக்கிய சட்டத்தில் சலுகைகள், பாதுகாப்பு, எல்லாம் அனைத்து தாழ்த்தப்பட்டவர்களுக்கும் என்றுதான் இருந்தது. ஆனால் ஆரிய சூழ்ச்சி காரணமாக ஒரு ஜனாதிபதி உத்தரவு மூலம் தாழ்த்தப்பட்ட இந்துக்கள் என்று இடைச்செருகல் செய்யப்பட்டு விட்டது.

**மணியன்:** அதில் என்ன தவறு? கிறிஸ்துவத்தில்தான் ஜாதிகள் கிடையாதே!

**எஸ்றா:** இப்படிக் கொடுமைகள் இழைக்கப்படுவதால்தான், தலித்துக்களும், மலைவாசிகளும் தங்களை இந்துக்கள் என்று அழைத்துக் கொள்வதில்லை.

**மணியன்:** அது மற்ற மதத்தவரின் சூழ்ச்சி.

**எஸ்றா:** 'இந்து' என்றால் என்ன? யார்?

**மணியன்:** இந்தத் தேசத்தின் பாரம்பரியத்தில் வந்திருக்கக் கூடிய பல்வேறு ஞானிகள், மகான்கள், அவர்களுடைய வழித் தோன்றல்கள், மற்றும் அவர்கள் காட்டும் பாதையைப் பின்பற்றுபவர்கள்தாம் இந்துக்கள்.

**எஸ்றா:** இந்தத் தேசத்தைச் சேர்ந்தவர்கள்தான் இந்துக்கள் என்றால் ஆரியர்கள் யார்? அவர்கள் வெளியிலிருந்து வந்தவர்கள்தானே!

**மணியன்:** ஆரிய – திராவிட வாதம் உளுத்துப் போன தேய்ந்த வாதம்.

**எஸ்றா:** இது ஒரு பெரிய குழப்பம்! கிறித்துவர்கள், முஸ்லீம்கள் அல்லாத மற்றோருக்கு வெள்ளைக்காரன் 'இந்து' என்று பெயர் வைத்து விட்டான். இதிலும் தாழ்த்தப்பட்டவர்களை வேறு ஒரு பெயரில் குறிப்பிட வேண்டுமென்று பிராமணர்கள் சொன்னார்கள்.

**மணியன்:** மாற்ற வேண்டாம். அவர்களை வேறு பெயரில் போடக் கூடாது. 'இந்து' என்று போட வேண்டும் என்று சண்டை போட்டவர்கள் நாங்கள்தான்.

**கல்கி:** ட்ராக் மாற வேண்டாம். கிறித்துவர்கள் மீதுதான் மத மாற்றம் பற்றி பெரிய குற்றச்சாட்டு வைக்கப்படுகிறது!

**எஸ்றா:** தலித்துகளுக்கும், மலைவாசிகளுக்கும் மதமே கிடையாது.

**மணியன்:** இது சரியல்ல–ஒவ்வொரு தலித்தும் மலைவாசியும் தன்னை இந்து என்றே அழைத்துக்கொள்கிறான். அதன்படி அரசிடமும் பதிவு செய்து கொள்கிறான். உங்கள் வாதம் தவறு!

**எஸ்றா:** உண்மையிலேயே மதமாற்றம் என்பது கிடையாது. மனமாற்றம்தான். புறக்கணிக்கப்பட்டவன், மற்ற சமயத்தில் இணையும்போது கடும் கோடை வெய்யிலிலிருந்து ஏ.ஸி. அறைக்கு வந்ததைப் போல உணர்கிறான்.

*(இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த மணியனின் மனைவி: "கரண்ட் போய் விட்டால் போய் விடுவானா?" என்றார் சிரிப்புக்கிடையே..)*

**எஸ்றா:** (தொடர்கிறார்)... ஏன் வருகிறான். "கடவுள் நமது தந்தை. நாம் அவரது பிள்ளைகள்" என்று சமத்துவத்தைப் போதிப்பது கிறிஸ்துவம்தான். "நீங்கள் அரவணைக்கவில்லை...

அரவணைக்கும் இடத்துக்கு அவன் செல்கிறான்" என்று விவேகானந்தர் சொல்லியிருக்கிறார்.

**மணியன்:** அதே விவேகானந்தர், "கத்தியில்லாமல் கிறிஸ்துவ மதம் எந்த இடத்தில் வெற்றியடைந்தது" என்றும் கேட்டுள்ளார். கிறிஸ்துவர்கள் எப்படிப்பட்ட கொடுமைகளைச் செய்து மதம் மாற்றியிருக்கிறார்கள் என்பதையும் அவர் சொல்லியிருக்கிறர்.

**எஸ்றா:** ஆதிக்க சமுதாயம் தனது கட்டுப்பாட்டை தக்க வைத்துக் கொள்ளத்தான் இது போன்ற சட்டங்களை ஆதரிக்கிறது. 'ஒடுக்கப்பட்டவனின் கடைசி நம்பிக்கை மதமாற்றம்' என்று விடுதலைச் சிறுத்தை திருமாவளவன் சொல்லியிருக்கிறாரே!

**மணியன்:** முதலில் அவர் மாறுகிறாரா பார்க்கலாம்!

**எஸ்றா:** அம்பேத்காரும் இதே கருத்தைத் தானே சொன்னார்.

**மணியன்:** நான் கிறிஸ்துவனாக மாற மாட்டேன். கிறிஸ்துவர்கள் தேச துரோகிகள் என்று சொல்லித்தான் பௌத்த மதத்துக்குச் சென்றார் அவர்.

**நான் கிறிஸ்துவனாக மாறமாட்டேன். கிறிஸ்துவர்கள் தேச துரோகிகள் என்று சொல்லித்தான் பௌத்த மதத்துக்குச் சென்றார் அம்பேத்கர்.**

**எஸ்றா:** மனிதன் சுதந்திரமாக இருந்தால் தான் சிந்திக்க முடியும். என் தாத்தா ஜாதிக் கொடுமையிலிருந்து தப்பித்து கிறிஸ்துவராக மாறியதால் தான் இன்று நான் சுதந்திரமாக இருக்கிறேன். "நீ எனக்கு நிரந்தர அடிமையாக இருக்கணும்" என்று மடக்கிப் போடத்தான் இது போன்ற சட்டங்கள் ஆதிக்கச் சமூகத்தினரால் கொண்டுவரப்படுகின்றன. ஒரு காலத்தில் அவர்களைக் கல்விகற்க கூட அனுமதிக்கவில்லை.

**மணியன்:** மதம் என்பது மனிதனின் லௌகிகத் தேவைகளைப் பூர்த்தி செய்வது அல்ல. அதற்கு அரசு இருக்கிறது. அது நிறைவேறாத போது மதத்தை மாற்றக்கூடாது. அரசைத்தான் மாற்றணும். சமூகக் கொடுமைகளிலிருந்து தீர்வு பெற கல்வி, சட்டங்கள் உதவி செய்யும். மதம் உதவாது. எனவே மதமாற்றம் தவறு.

**கல்கி:** இந்த மதமாற்றத் தடை சட்டத்துக்கு கிறிஸ்துவர்கள் மத்தியில் கடும் எதிர்ப்பு உள்ளது. ஆனால் முஸ்லீம்களிடமிருந்து அவ்வளவு இல்லையே!

**மணியன்:** அவர்கள் மறைமுகமாகச் செயல்படவில்லை. நேருக்கு நேராக மோதுபவர்கள் அவர்கள்.

**எஸ்றா:** அகிம்சை மதமான பௌத்தமத விகாரங்களை அழித்து கோயில்களாக மாற்றியவர்கள் நீங்கள்தானே!

**மணியன்:** அந்த அகிம்சையான மதம்தான் இன்று இலங்கையில் தமிழர்கள் மீது கொடுமையிழைத்து வருகிறது. அரசியல் கட்டமைப்பில் உருவான மதம் அது.

**எஸ்றா:** திருஞானசம்பந்தர் எத்தனை பேரை சமணத்திலிருந்து சைவத்துக்கு மாற்றினார். மாறாதவர்களைக் கழுவேற்றிக் கொன்றார்களே!

**மணியன்:** கூன் பாண்டியன் நோயைக் குணப்படுத்தினார் சம்பந்தர். வாதத்தில் தோற்றார்கள் சமணர்கள். அவர்களே கொடுத்த உறுதிமொழியின் அடிப்படையில் சைவத்துக்கு மாறாமல் தற்கொலைக்குத் தயாரானார்கள். உண்மையை மறைத்துத் திரிக்க வேண்டாம்.

**எஸ்றா:** இன்றும் மேல் நாட்டவரை மதம் மாற்றும் முயற்சியில் இறங்கியிருக்கிறார்களே!

**மணியன்:** பலர் இந்து தர்மத்தின் சிறப்பை உணர்ந்து வருகிறார்கள். வெளிநாட்டில் சர்ச்சுகளே விலைக்கு வருகின்றன. அங்கு இந்தச் சட்டம் மூலம் ஒட்டுமொத்த மதமாற்றம் தடுக்கப்படும். இதை எதிர்க்கும் கிறிஸ்துவ அமைப்புகள் கல்வி நிலையங்களை மூடப் போவதாகச் சொல்கின்றன. அப்படி மூடினால் அரசாங்கம் அதற்குக் கொடுக்கும் மானியங்களை உடனே நிறுத்த வேண்டும்.

**எஸ்றா:** அன்னதானம், கோயில்களில் சமயக் கல்வி என்று உள்நோக்கத்தோடு ஆர்.எஸ்.எஸ். கைப்பாவையாக செயல்படும் ஜெயலலிதா, அரசியல் ஆதாயங்களுக்காக இது போன்று அடிப்படை உரிமையைப் பறிக்கும் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார். யாரும் யாரையும் மதம் மாற்றவில்லை. christ realisation தான் செய்து கொண்டிருக்கிறோம். உலகத்தார் எல்லோரும் கிறிஸ்துவரே. அதை உணரச் செய்யும் பணிதான் எங்களுடையது.

**மணியன்:** அது சரி! அப்படியென்றால் இந்தச் சட்டத்தை எதிர்ப்பது ஏன்.

தொகுப்பு: **ப்ரியன்**
படங்கள்: **ராஜன்**

# கம்பராமாயணம்

மூலமும் தெளிவுரையும்-5000 பக்கங்களில் 9 தொகுதிகள்

விலை 1000.00 **சலுகை விலை 600.00**

இலவச நூல் : **உத்தர காண்டம்**

மூலமும் தெளிவுரையும்-800 பக்கங்களில் 2 தொகுதிகள் ரூ.200

**அடுத்த பதிப்பு தற்போது இல்லை ! வாய்ப்பினை இப்போதே பயன்படுத்துக !!**

---

## கம்பர் அருளிய இராமாயணம், ஒட்டக் கூத்தர் அருளிய உத்தரகாண்டம் நூல்களைப்பற்றிய ஒரு குறிப்பு

இந்தியாவில் எத்தனை மொழிகள் உண்டோ அத்தனை மொழிகளிலும் இராமாயணம் உண்டு. இது தவிர, ஒரே மொழியிலேயும் பல இராமாயண நூல்கள் தோன்றியிருக்கின்றன. இதிலிருந்தே இந்திய மக்கள் மீது இராம கதைக்கு உள்ள செல்வாக்கைப் புரிந்து கொள்ளலாம். எத்தனை இராமாயண நூல்கள் இருந்தாலும் அவை அத்தனைக்கும் ஊற்றாக இருப்பது வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணம் தான் !

அந்த மாமுனிவரின் கதையை அடிப்படையாகக் கொண்டே பிற்காலப் புலவர்கள் தங்கள் தங்கள் மொழி மரபுக்கேற்ப, பண்புக்கேற்ப நிகழ்ச்சிகளைக் கூட்டியும், குறைத்தும், மாற்றியும் இராம கதையை வகுத்தனர். இந்த வகையில் கம்பரின் காப்பியத்தில் கவிதைப் பிரவாகத்தையே காணலாம் ! பார காவியம் பாடிய அம் மாபெரும் புலவர் ஓர் எல்லையில் இராமபிரானின் கதையை நிறுத்திக் கொண்டார். இராவணனை வீழ்த்தி அயோத்தி சென்று ஆட்சிப் பொறுப்பை ஏற்ற இராமபிரான், அனுமன் முதலானோர்க்கு விடை கொடுத்த னுப்புவதோடு கம்பராமாயணம் முடிகிறது. இராகவனின் பிற்கால நிகழ்ச்சிகளைப் பற்றிக் கம்பர் எதுவும் கூறவில்லை.

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் அந்தப் பணியைச் செய்து முடிக்கிறார். மகாகவி கம்பர் குறிப்பாகச் சொல்லிவிட்டுப் போகும் பல நிகழ்ச்சிகளை உத்தர காண்டம் விரிவாகப் பேசுகிறது. சில நிகழ்ச்சிகளை இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

இராமபிரானின் ஆட்சியின் மாட்சி (இராம ராஜ்யம்) உத்தரகாண்டத்தில் தான் கூறப் படுகிறது.

இராவணனின் பிறப்பு, தவம், அவன் பெற்ற வரங்கள், சாபங்கள் ஆகியவை இவ்வுத்தர காண்டத்தில் விரிவாக இடம் பெற்றுள்ளன. இராவணன் தவம் உடையவன்; மூன்று கோடி ஆண்டு வாழ்நாளையுடையவன்; சில சாபங்களும் அவனுக்கு உண்டு என்ற செய்திகள் கம்பராமாயணத்தில் கூறப்படுகின்றன என்றாலும் இவை பற்றிப் படலம் படலமாகப் பாடுவது உத்தர காண்டம் தான்! பல கன்னியரை, திருமணமான மகளிரைக் கற்பழித்த கொடியவன் இராவணன். இந்தக் கொடுமையில் அவன் பெற்ற பயிற்சிதான் சீதையைக் கவர்ந்து செல்லும் அளவுக்கு அவனைக் கொண்டு போய் நிறுத்தியது. வேதவதியும், அரம்பையும், பல கன்னியரின் தாயரும் இட்ட சாபக் கணைகள் அவன் மீது எந்த நேரத்திலும் பாயக் காத்திருந்த செய்தியை உத்தரகாண்டம் தெரிவிக்கிறது.

இராமபிரான் வைகுண்டம் அடைவதுடன் உத்தர காண்டம் நிறைவு பெறுகிறது.

இந்நூலினைத் தபாலில் பெற,**9.11.2002**க்குள் கடிதம் எழுதுக. **11** தொகுதிகளையும் V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை, தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.**675** மட்டும் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். நேரில் **9.11.2002**க்குள் ரூ.600 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை. இடைவேளையின்றி.

ஞாயிறு மற்றும் தமிழக அரசு விடுமுறை நாட்களில் விற்பனை இல்லை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி :

**வர்த்தமானன் பதிப்பகம்**

15, சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை-17.

(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)

☎ : 435 0561.

**இச்சலுகை 9.11.2002 வரை மட்டுமே !**

**கோயமுத்தூர் விஜயா பதிப்பகத்திலும்** இதே சலுகை விலை ரூ.600யினை மட்டும் (நேரில் 9.11.2002க்குள்) ரொக்கமாகச் செலுத்தி நூலினைப் பெறலாம். **விஜயா பதிப்பகம், கோவை.** ✆ : 394614, 382614.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

# கிருஷ்ணாவை நோவதா? வாஜ்பாயை நோவதா?

மீண்டும் மீண்டும் உச்சநீதிமன்றத்திடம் முறையிட வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியிருக்கும் கர்நாடகா அரசு, நாட்டின் தலைமை நீதி அமைப்பை மதிக்கத் தயாராயில்லை. 'உச்சநீதி மன்றத்தின் ஆணையைச் செயல்படுத்தமாட்டோம்' என்று கர்நாடகா அமைச்சரவை கூடித் தீர்மானமே நிறைவேற்றியிருக்கிறது! இதன் மூலம் காவிரி நதி நீர் ஆணையத்தின் அதிகாரத்தையும், பிரதமரின் மேலாண்மையையும் கூட கேலிக்குள்ளாக்கியிருக்கிறது அவ்வரசு!

இத்தனையையும் செய்துவிட்டு 'அமைதி விரும்பி' என்று தம்மைப் பிரகடனப்படுத்திக் கொண்டு பாதயாத்திரை கிளம்பியிருக்கிறார் எஸ்.எம். கிருஷ்ணா!

கிருஷ்ணாவின் முடிவையும் அவரது அமைச்சரவையின் பிடிவாதத்தையும் காங்கிரஸ் மேலிடம் தட்டிக்கேட்க முயற்சிகூட செய்யவில்லை.

சோனியா காந்தியின் பிரஜா உரிமையையும்

2002 அக்டோபர் 20
சித்ரபானு ஐப்பசி 3
மலர் : 61
இதழ் : 12




தேர்தலில் நிற்பதற்கான உரிமையையும் உறுதி செய்த அதே உச்சநீதிமன்றம் தான், இன்று காவிரி நீர் தொடர்பான ஆணையைப் பிறப்பித்திருக்கிறது. ஆனால், தமிழக முதல்வருடன் நல்லுறவு இல்லாத காரணத்தால், காங்கிரஸ் மேலிடம் கர்நாடகா முதல்வரைத் தட்டிக் கேட்பதில் துளியும் ஆர்வம் காட்டவில்லை.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வரும் உரிமைகள், இன்றையச் சட்டங்கள், நீதி, ஜனநாயகப் பண்புகளைக் காட்டிலும், தனிநபர் விருப்பு வெறுப்புகளும் அரசியல் நோக்கும்தான், காவிரிப் பிரச்னையின் போக்கை நிர்ணயித்து வருகின்றன.

எஸ்.எம். கிருஷ்ணா விஷய ஞானம் உள்ளவர் என்றபோதிலும் இப்பிரச்னையில் தமது எதிர்க்கட்சியினருக்குப் பயந்துதான் இயங்குகிறார். இதையாவது ஓரளவு புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், ஒரு மாநில அரசு, உச்சநீதிமன்ற ஆணையை அவமதிப்பதைக் கண்டும் மத்திய அரசு ஏன் மௌனமாக இருக்க வேண்டும் என்பதுதான் விடுபடாத புதிர்!

கர்நாடகத்துக்கு ராணுவத்தை அனுப்பி அணைப்பகுதிகளுக்குப் பாதுகாப்பு அளித்து, தண்ணீர் திறந்துவிட மத்திய அரசு வழி செய்திருக்க வேண்டும். 356ஐப் பிரயோகிக்காமலேகூட வேறு சில சட்டபூர்வமான நடவடிக்கைகள் மூலம் கர்நாடகத்தின் சில பகுதிகளை மட்டும் தனது கட்டுப்பாட்டில் கொண்டுவர வாய்ப்பிருக்கிறது.

இவையெதையும் செய்யாதது மட்டுமின்றி, எஸ்.எம். கிருஷ்ணாவை அழைத்துப் பேசக்கூட முயற்சி செய்யவில்லை பிரதமர். 'வழக்கு உச்சநீதிமன்றத்தில் இருக்கிறது; பிரச்னைக்குச் சுமுகமான தீர்வு பிறக்க வேண்டும்' என்று வாய்ப்பந்தல் போட்டுவிட்டு சைப்ரஸ் போய்விட்டார். துணைப் பிரதமரும் உள்துறை அமைச்சருமான அத்வானியாவது செயல்படுவார் என்று பார்த்தால், அவர் இப் பிரச்னை குறித்து வாயே திறக்கவில்லை.

இவ்விஷயத்தில் தமிழக முதல்வரின் பேச்சும் அறிக்கைகளும் ஆரம்பம் முதலே ரசக் குறைவாகவும் பிரச்னையையும் உணர்ச்சிகளையும் மேலும் தூண்டும் வண்ணமும் இருந்தன என்பது வேதனைக்குரிய உண்மை.

எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பைப் பெற்று தமிழக அரசு ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்வதும்,




திரைப்படத் துறையினர் நெய்வேலியில் போய் போராட்டம் நடத்துவதும் ஒற்றுமையை வேண்டுமானால் பறைசாற்றலாம்; ஆனால் பிரச்னைக்குத் தீர்வு பிறக்காது. கடையடைப்பினால் ஏராளமான நஷ்டமே ஏற்பட்டிருக்கிறது. நடிகர்கள் போராட்டமும் கேபிள் ஆபரேட்டர்கள் கன்னட சானல்களை இருட்டடிப்புச் செய்வதும், இப்பிரச்னையின் விளைவான உணர்ச்சிப் பெருக்கை சாமானிய மக்களிடையே காட்டுத் தீ போல் பரவச் செய்யும். கர்நாடகத்தில் வாழும் தமிழர்களுக்கும் தமிழகத்தில் வாழும் கன்னட மக்களுக்கும் அபாயம் ஏற்பட்டுவிடக்கூடாது; அவர்களுடைய உடைமைகள் சேதப்படக் கூடாது என்பதில் இரு அரசுகளும் கவனமாய் இருக்க வேண்டும். இல்லையேல், பிரச்னையோடு நேரடித் தொடர்பில்லாத சாமானிய மக்கள் அநியாயமாய் அவதிக்குள்ளாக நேரிடும்.

புதுப்புது அணைகளைக் கட்டி தனது விவசாய நிலப்பரப்பை விஸ்தரித்துக் கொண்ட கர்நாடகம், தமிழகமும் அதே மாதிரி விவசாய நிலப்பரப்பை விஸ்தரித்துக் கொண்டிருப்பதாகக் குற்றம் சாட்டுகிறது.

நமது மாநிலத்தில் சாகுபடிப் பரப்பு விரிவடைந்திருப்பது உண்மைதான். ஆனால் நமது உரிமை கர்நாடகத்தினுடையதைக் காட்டிலும் மிக மிகத் தொன்மையானது. கபினிக்கு இரண்டாயிரம் ஆண்டுகள் முன்னரே கல்லணை கட்டப்பட்டுவிட்டது.

அந்த ஆயக்கட்டு உரிமையைத்தான் மதிக்கவில்லை; இன்று நடக்கிற ஜனநாயக ஆட்சியின் நீதி நிர்வாகத்தையாவது கர்நாடகா மதிக்க வேண்டாமா? விஸ்தரிக்கப்பட்ட விவசாய நிலத்துக்குத் தமிழகம் கூடுதல் தண்ணீர் கேட்கவுமில்லை; அவ்வாறு வழங்கும்படி காவிரி நதிநீர் ஆணையமோ, உச்சநீதிமன்றமோ நியாயமற்ற தீர்ப்பு வழங்கவுமில்லை. இருக்கிற குறைவான நீரை, நேர்மையாகப் பங்கிட்டுக் கொள்ளவே வழி கூறப்பட்டுள்ளது; ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. தேசத்திலேயே மிகச் சிறந்த முதலமைச்சர் என்று தேர்வு செய்யப்பட்ட எஸ்.எம். கிருஷ்ணாவுக்கு இது புரியாதா? தெரியாதா? அரசியல் சகதியில் சிக்கிக் கொண்டு நீதியையும் நேர்மையையும் காற்றில் பறக்கவிட்டு விட்டவர், மிகத் தவறானதொரு முன்னுதாரணத்தை உருவாக்கியிருக்கிறார் – உச்சநீதிமன்ற ஆணைக்குக் கீழ்ப்படியாது தப்பலாம் என்ற முன்னுதாரணம்!

இதற்காக கிருஷ்ணாவை நோவதா அல்லது அவரைக் குற்றமிழைக்க அனுமதித்துவிட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் மத்திய அரசை நோவதா! ○


மலர்களில்
தலை சிறந்த
மலர்
பார்க்க, படிக்க, பாதுகாக்க
அட்டகாச பொக்கிஷம்!
தயாராகிறது
கல்கி
தீபாவளி
மலர் - 2002
விலை ரூ.70/-
உடனே உள்ளூர் ஏஜெண்டிடம்
பதிவு செய்து கொள்ளுங்கள்.
கூரியர் அல்லது தபாலில் பெற
ரூ.100 அனுப்பவும்
















என்ன செய்வது
இந்த வாழ்க்கையை?
கவி ஆற்றாமையில்
கேட்கிறாய் நீ
செய்வதற்கு ஒன்றுமில்லை
சும்மாயிருப்பதே சுகம்
புலிப்பசியுடன்
அடித்துச் சாப்பிடக்
காத்திருக்கிறது வாழ்க்கை

சப்பாணிகளை, சோனிகளைத்
தின்றுவிட்டு
நாக்கைச் சுழற்றும் புலியின்
குணம்
தெரியாதா உனக்கு?
சுற்றிச் சூழ விழித்துப் பார்
புதர் மறைவில்
சிதறிக்கிடக்கும்
எலும்புக்குவியல்கள்
மந்திரம் போட்டு உயிர்ப்பித்தால்
மகாகதைகள் கிடைக்கும்
வாழ்க்கை
விட்டுவைத்திருக்கிறதா உன்னை,
இன்னமும்
தப்பிப்
பிழைத்திருக்கிறாயா நீ,
இவ்வளவுக்குப் பிறகும்?
விதி வலிது
விதி வலிது
எங்கே
ஓடி ஒளிந்து கொள்ள முடியும்?
தேடிக் கொண்டிருக்கும்
புலியின் கண்களை
மறைத்துக் கட்டிவிட முடியாது

நவீன ஐயப்பன்கள்
வேண்டுமானால் புலிமேலேறி
நகர்வலம் வரலாம்
நீயும் நானும் பாவம்
நவீன கவிஞர்கள் தாமே
என்ன செய்ய முடியும்
ஒளிந்து கொள்ள முடிந்தவர்கள்
பேறு பெற்றவர்கள்
தானே தீரும் நோய்க்கு
தேவையில்லை ராஜ வைத்தியம்

— விக்ரமாதித்யன் நம்பி




உப்பும் இரும்புச் சத்தும் கலந்த நீரைக் குடிநீராக மாற்றுவதில் பல ஆண்டுகளுக்கு முன்பே வெற்றி கண்டிருக்கிற நிறுவனம் டீம் (TEAM). இதன் தலைவர் சி.எச். கிருஷ்ணமூர்த்திராவ், இவர்களில் ஒருவர்.

முதல்முறையாக, மெரீனா கடற்கரையில், கடல் நீரைக் குடிநீராக்க முடியும் என்று காண்பிக்க, தம் சொந்தச் செல விலேயே கருவிகளை அமைத்து, பிறகு மாநில அரசிடம் அவற்றை ஒப்படைத்திருக்கிறார் கிருஷ்ண மூர்த்தி ராவ். (ஆனால் அரசு அலட் சியமாக இருந்துவிட்டது வேறு விஷயம்!)




சுத்திகரிக்கப்பட்ட குடிநீரை டீம் நிறுவனம், முதன்முதலாக, சாதாரண மக்களுக்கும் சென்றடை யக் கூடிய வகையில், சிறிய பாலித்தீன் பைகளில் அடைத்து விற் பனை செய்தது.

"சுத்திகரிக்கப்படும் நீரின் விலை அதிகமாக இருக்கும் என்று பலர் தவறாகக் கணக்கிடுகிறார்கள். பாட் டில் _ லேபில் வகையறாவுக்கு ஐந்து ரூபாயும், விற்பனையாளருக்கு மூன்று ரூபாயும், வரிகள் இரண்டு ரூபாயும் ஒரு லிட்டர் தண்ணீர் பாட்டிலுக்கு ஆகிறது. தண்ணீர்

தயாரிப்புக்கு வெறும் இரண்டு ரூபாய்தான் என்கிறார் இவர்.

"நீரைக் காய்ச்சிவிட்டால் அதிலுள்ள கிருமிகள் இறந்து போய் விடும் என்று சிலர் நம்புகிறார்கள். இது தவறு. இதற்கு மாற்றாகத்தான் நாங்கள் UF - KRISH அல்ட்ரா ஃபில்ட்ரேஷன் தானியங்கி சுத்திகரிப்புக் கருவி உருவாக்கி இருக்கிறோம்.

"டீம் – நில் – பி கருவியை வீடுகளில் எளிதாகப் பொருத்தி விடலாம். நூறு சதவிகிதச் சுத்தமான நீருக்கு இதுவும் உத்தரவாதம். இதில் பாக்டீரியாக்கள் அகற்றப்படுகின்றன. ரசாயனப் பொருள் (கெமிக்கல்ஸ்) எதுவும் இதில் சேர்ப்பதில்லை. மின்சாரம் அறவே தேவையில்லை!" என்கிறார் ராவ்.

உவர் நீரை உடனுக்குடன் சுத்திகரித்துச் சேமித்து விநியோகிக்கும் வசதி கொண்ட இயந்திரம், டீம் நிறுவனத்தின் புதிய கண்டுபிடிப்பு. அதாவது டூ – இன் – ஒன் அமைப்பு. இதற்குள் ஒரு மினி தண்ணீர் சுத்திகரிப்பு நிலையமே இயங்குகிறது! கார்பன் ஃபில்ட்டர், கேட் ரேட்ஸ் ஃபில்ட்டர் ஆகிய இரண்டு சல்லடைகள் வழியாக நீர் சுத்திகரிக்கப்பட்டு, மறுபடி 'மெம்ப்ரேன்' எனப்படும் மெல்லிய சவ்வு வழியாக அனுப்பப்பட்டு, ஓசோன் மூலம் செறிவூட்டப்பட்டு, சுத்தமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரத்தில் நிரப்பப்படுகிறது. பெட்ரோல் பங்கில் இருப்பது போல நீண்ட குழாய் வழியே தண்ணீரைப் பிடித்துக் கொள்ளலாம்! ஆனால் ஐந்து ரூபாய் நாணயத்தைப் போட வேண்டும்!





• கிருஷ்ணமூர்த்தி ராவ்

இன்னொரு தூய நீர் தரும் கருவியையும் இவர்கள் உருவாக்கி இருக்கிறார்கள். இதில் மேலை நாட்டுக் கொள்கலன் பயன்படுத்தப்படுகிறது. இதன் கொள்ளளவு ஆயிரம் லிட்டர்.

மெரீனாவில் சுத்திகரிப்பு ஆலை அமைத்த பிறகு, அது போல குடிநீர்த்தட்டுப்பாடுள்ள நாற்பது இடங்களில் அமைக்க அரசு அன்று உத்தரவு பிறப்பித்ததாம். வறண்ட பகுதியான ராமநாதபுரம் கிராமம் ஒன்றில், மக்கள் இந்தத் தண்ணீரைக் கண்டு மகிழ்ந்து போய், இவர்களைத் தெய்வமாக மதித்துக் கும்பிட்டார்களாம். கடலூரிலும் கூட இத்தகைய சுத்திரிப்பு நிலையங்களை இவர்கள் நிறுவியிருக்கிறார்கள்.

ஆனால் தண்ணீருக்காகத் தவிக்கும் இன்றைய சூழ்நிலையில், கடல் நீரைக் குடிநீராக மாற்றும் திட்டங்களை இவர்கள் அரசுக்குக் கொடுத்தபோது, அரசு அவற்றை நிராகரித்து விட்டதாகத் தெரிகிறது.

"இதில் நஷ்டம் ஏற்பட வாய்ப்பு இல்லை" என்கிறார் கிருஷ்ணமூர்த்தி ராவும், அவரது இஞ்சினீயரிங் நிபுணர்களும். "தொழிற்சாலைகள் இந்த நீரைப் பயன்படுத்தும் பட்சத்தில், அவர்களிடமிருந்து ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் ராயல்ட்டி பெற்றுக் கொள்ளலாமே?" என்கிறார்கள்.

மணலியை அடுத்து இருக்கும் பெரிய தொழிற்சாலைகள் பல, உபயோகித்த நீரையே 'ரிவர்ஸ் ஆஸ்மோஸிஸ்' முறையில் சுத்திகரித்து, மறுபடி உபயோகிக்கத் தொடங்கியபோது, இவர் இன்னும் ஒரு படி மேலே போய், 'ஸீரோ டிஸ்சார்ஜ்' என்னும் அதிநவீன சிங்கப்பூர் தொழில்நுட்பத்தை அறிமுகப்படுத்தி, மிக மிகச் சுத்தமான நீராக மாற்றிக் கொடுத்திருக்கிறார். சென்னை பெட்ரோலியம் கார்ப்பரேஷனின் தொழிற்சாலையில், இவர் பதினெட்டு மாதங்கள் உழைத்து நிறுவிய இந்தப் பணிக்காக, தில்லியிலுள்ள பிரபல சுற்றுச் சூழல் அமைப்பு, சமீபத்தில் இவரைப் பாராட்டிக் கௌரவித்திருக்கிறது.

— சித்தார்த்

படம்: ஸ்ரீஹரி

–சபாநாயகர் கா.காளிமுத்து



# புரியாத இலக்கியம் எதற்கு?

**ச**பாநாயகர் காளிமுத்துவை அரசியல் ரீதியாக அரைமணி நேரம் திட்டுபவர்கள் கூட, அவருடைய இலக்கியத் தமிழைப் பல மணி நேரம் ரசிப்பார்கள். எந்தவித அரசியல் தந்திரங்களும் தெரியாத ஓர் அரசியல்வாதியாக, கலைஞர், எம்.ஜி.ஆர், இப்போதைய முதல்வர் ஜெயலலிதா மனங்களில் அவர் இடம் பிடிக்க, அந்த இலக்கியத் தமிழ் தான் காரணமென்பார்கள்.

'தொல்காப்பிய இலக்கிய கொள்கைகளுக்குள் குறுந்தொகை' என்ற தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றுள்ள அவரிடம், கொஞ்சம் இலக்கியம் பேசினோம்.

**சங்க இலக்கியங்களில் இருக்கிற அகம், புறம் இன்றைய நவீன காலங்களில் எப்படி ஒத்துப் போகுதுன்னு நினைக்கிறீங்க?**

மனித வாழ்க்கையை அகம், புறமென இரண்டு விதமாகத்தான் பிரிக்க முடியும். அலுவலகம், தொழில், முயற்சிகள், கோபம், பகை, சோர்வு உள்ளிட்ட எல்லாமே புறம். குடும்பவாழ்க்கை, காதல் அகம். இது காலத்தை வென்று எல்லாக் காலத்துக்குமாக இருக்கக் கூடியது. வாழ்வை இதைத் தவிர வேறு எப்படியும் பார்க்க முடியாது.

**இலக்கியச் சுவை அப்படீன்னு எதைச் சொல்லுவீங்க?**





சொல் நயம் பார்க்கலாம், எதுகை மோனை பார்க்கலாம், கருத்து நயம் இப்படி நிறைய இருக்கு. அதியமான் நெடுமானஞ்சியைப் பற்றி ஒளவை பாடிய,

களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போர் எதிர்ந்து
எம்முளும் உளன் ஒரு பொருநன் வைகல்
**எண்தேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த காலனோனே.**

பாடல் சங்கப் பாடல்களுக்கே எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். ஒரு நாளைக்கு எட்டு தேர் செய்யும் தச்சன் ஒரு மாதம் கூடிச் செய்த தேர்க்காலைப் போன்ற வலிமையுடையவன் அதியமான் என்ற பொருள்படும் இப்பாடலில் கருத்துச் செறிவு இருக்கிறது; அடர்த்தி இருக்கிறது.



குறுந்தொகையில் வருகிற,

கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை உய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே.

ஆண் குரங்கு இறந்து விடுகிறது. கைம்மை அடைந்த பெண் குரங்கு, தன் குட்டியைக் கிளைக்கு அடியில் சேர்த்துவிட்டு, உயர்ந்த மூங்கிலையுடைய மலையிலிருந்து கீழே பாய்ந்து உயிரை விடும் நாடையுடையவனே! நள்ளிரவில் வந்து தோழியைச் சந்திக்காதே என்கிற பாடல் இது. இதில் உள்ளுறையாகச் சொல்லப்பட்டிருக்கிற விஷயம் சுவையான ஒன்று. புகழ்பெற்ற இம்மாதிரியான வரிகளை இலக்கியங்களில் மட்டுமே ரசிக்க முடியும்.



**அறுபதுகளில், திராவிட இலக்கிய எழுத்தாளர்களான மதியழகன், அண்ணா, பி.கே. சீனிவாசன் கதைகளைப் படிச்சிருப்பீங்க. உங்களுடைய ஆதர்ச எழுத்தாளர் யார்?**

பேரறிஞர் அண்ணாதான். அவருடைய நாவல்களாகட்டும், சிறுகதைகளாட்டும், நாடகமாகட்டும், தம்பிக்குக் கட்டுரையாகட்டும், என் மீது பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது அவரது எழுத்துக்கள்தான்.

புதுமைப்பித்தன், நா.பா. போன்ற பல படைப்பாளிகள் படைப்புகளால் சாதனையாளரானார்கள். ஆனால் அண்ணா, இலக்கியத்தைச் சாதனமாகக் கொண்டவர். அவரது எழுத்தில் உணர்ச்சி இருந்தது. குறிக்கோள் இருந்தது. அந்தக் குறிக்கோளை வலி



யுறுத்துவதற்காகவே எழுதியவர் அண்ணா.

**நீங்கள் படித்த நாவல்களில் மறக்க முடியாத பாத்திரங்கள்...**

நிறைய. கல்கியின் நாவல் பாதிப்பில்தான் அருள்மொழித்தேவன் என்ற பெயரை என் மகனுக்கு வைத்தேன். நா. பார்த்தசாரதியின் நாவல்களில் பூரணி, அரவிந்தன்; மராட்டிய எழுத்தாளர் காண்டேகரின் 'கிரௌஞ்ச வதம்' நாவலில் வரும் திலீபன் கேரக்டர், இவை என்னால் மறக்க முடியாத பாத்திரங்கள்.

**நவீன இலக்கியவாதிகளின் கதைகள், படிப்பதுண்டா? காலச்சுவடு, தீம்தரிகிட, கவிதாச்சரண், பன்முகம் போன்ற சிற்றிதழ்களை வாசிப்பதுண்டா?**

நவீன இலக்கியத்தைத் தொடர்ந்து படிக்கிறேன். சுந்தர ராமசாமியின் கதைகளைப் படித்தால் புரிகிறது. ஆனால் அவரே பசுவய்யா என்ற பெயரில் எழுதும் கவிதைகளைத் தான் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏன் இப்படி எழுதுகிறார்கள் என்பதும் கேள்விக்குறியாக இருக்கிறது. ஒரு கவிதை என்பது வெளிப்படையாகப் புரிவதுதான். ஆனால் சிற்றிதழ் கவிதைகளைத் திரும்பத் திரும்ப படிக்கிறேன். புரியவில்லை. இது எப்படி மக்களிடையே செல்லும் என்பதும் தெரியவில்லை. மக்களைச் சேராத இலக்கியம் எதற்கு? புரியாமல் எழுதி என்ன செய்வார்களோ?

**ஓர் இலக்கியம் என்ன செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?**

இலக்கை இயம்புவதுதான் இலக்கியம். ஒரு குறிக்கோளுக்குள் இனிமையாக அழைத்துச் செல்ல வேண்டும் இலக்கியம்.

வண்ணத் தாமரை கண்டு
வாயில் மதுரராகம் பாடிக் கொண்டு
மதி மயங்கி பேட்டினொடு
முயங்கியே கிடக்கும் வண்டு
தேனடை உண்டு...

என்று சொல்லும் அண்ணாமலைச் செட்டியாரின் காவடிச் சிந்துவில் தமிழ் இனிமையைப் பார்க்க முடிகிறது. நயமிருக்கிறது.

பாரதிதாசன் பாடலான 'பாக்கியம் செய்தவன் நீதான்' என்ற பாடலை எடுத்துக் கொண்டாலும் ஒரு குறிக்கோள் சொல்லப் படுகிறது. ஒரு கருத்தை, சமூக அவலத்தை, துன்பத்தை இப்படி ஏதாவதொன்றைச் சொல்ல வேண்டும்.

**ஒரு காலத்தில் தமிழிலக்கியம் படிக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் பலர் இருந்தனர். இன்று நிலைமை தலைகீழ். இது ஏன்னு நினைக்கிறீங்க?**

இப்போதும் தமிழ் மீதான ஈடுபாடு அதிகமாகத்தான் இருக்கிறது. நான் படிக்கிற காலத்தில் தமிழ் படிக்கப் போட்டி இருந்தது. அந்தக் காலம் தமிழ் மறுமலர்ச்சியின் ஆரம்பக் காலம். அதனால் அது பெரிய விஷயமாகத் தெரிந்தது. மொழிப்போர், இந்தி எதிர்ப்பு போன்ற விஷயங்கள் தமிழ் மீதான ஆர்வத்தை அதிகப்படுத்தின என்பதை மறுக்க முடியாது. இன்றைய காலகட்டத்தில் அறிவியல், தொழில் தொடர்பான மற்றும் கணினி படிப்புக்கான முக்கியத்துவம் அதிகரித்து விட்டது. ஆனாலும் இப்பவும் தமிழ் படிக்க போட்டி இருக்கிறது என்பது வெளி உலகுக்குத் தெரியவில்லையே தவிர, அதுதான் உண்மை. காதலி மனைவியான பின் ஏற்படும் நிலைமைதான் இது.

**கலைஞரின் இலக்கியம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

சங்க இலக்கியப் பாடல்களை அவரின் நடையில் சங்கத்தமிழ், குறளோவியம் என்று எழுதியிருப்பது சிலப்பதிகாரத்தை பூம்புகார் படமாக்கியதெல்லாம் பாராட்டப்பட வேண்டிய ஒன்று. இதற்கான மூலம் அறிஞர் அண்ணாதான்.

**தொல் காப்பியத்துக்கு கலைஞர் உரை எழுதப் போகிறார்...**

தொல்காப்பிய இலக்கணத்தில் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று உண்டு. இந்த மூன்றில் பொருளதிகாரத்தை விரிவாக எழுதுவார் என்று நினைக்கிறேன்.

**உங்களின் சிறப்புத் தன்மையாக மனனத்தைச் சொல்வார்கள். எப்படி சாத்தியமாயிற்று?**

அது ஒரு பெரிய விஷயமல்ல! ஈடுபாட்டோடு படித்தால் மனத்தில் தங்கும். இந்தி எதிர்ப்புப் போராட்ட காலத்தில் மேடையில் பேசும் போது தமிழ்ச் சிறப்பைச் சொல்ல சில சிறப்பான, செழிப்பான, இனிமையானப் பாடல்களைச் சொன்னால் கைதட்டல் கிடைக்கும். கபிலரின் குறிஞ்சிப்பாடலில் தொண்ணூற்றி ஒன்பது மலர்களைப் பற்றிச் சொல்வார். இதை அப்படியே அடுக்கிக் கொண்டே போனால் கூட்டம் அதிசயந்தாங்கிப் பார்க்கும். அதே நேரத்தில், 'சங்க இலக்கியத்தில் இவ்வளவு மலர் இருக்கா?' என்ற ஆர்வத்தை மக்களிடையே ஏற்படுத்தும். இலக்கியத்தின் மீது ஈடுபாட்டை உண்டாக்கும். திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் நதியைப் பற்றிச் சொல்வது நதி செல்வது போலவே இருக்கும். குற்றாலக் குறவஞ்சியில் பெண்கள் பந்து விளையாடும் பாட்டு, போன்ற பல ரெடிமேட் சரக்குகள் கைவசம் இருக்கின்றன.

— செ. ஏக்நாத்

படங்கள் : யோகா

# இந்தியாவின்

# No.1

# இன்ஸ்டிட்யூட்



# வழங்கும்

# ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்

## சரளமாக இங்கிலீஷ் பேச, சுலபமான பயிற்சி !

இங்கிலீஷில் சரளமாகப் பேச வேண்டும் என்ற விருப்பமுடையவரா நீங்கள்?

பலவழிகளில் முயன்றும் பல புத்தகங்களைப் படித்தும், உங்களால் இங்கிலீஷில் பேச முடியவில்லையா? கவலையை விடுங்கள்.

ஸ்பீச் ஜெனரேட்டிங் ஃபார்முலா SGF™ அடிப்படையில் நாங்கள் உருவாக்கியுள்ள ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர்ந்து நீங்கள் எளியாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டு எங்களது பாடங்களை ப்ராக்டிஸ் செய்தால் போதும். மடை திறந்த வெள்ளம் போல் மடமட வென இங்கிலீஷில் பேச ஆரம்பித்து விடுவீர்கள்.

**பயிற்சி விவரம்**

★ இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுத படிக்கத் தெரிந்தவர்கள் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர்ந்து, இலக்கணப் பிழையின்றி வாக்கியங்களை அமைக்கக் கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

இலக்கணம் மற்றும் உரையாடல் பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக் கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ.395/- மட்டுமே.

★ இங்கிலீஷ் வார்த்தைகளை எழுத, படிக்க இயலாதவர்கள் அடிப்படையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத, படிக்க கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

அடிப்படை மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ.525/- மட்டுமே.

என்ன, பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா? அப்படியானால், கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள்.

கோர்ஸ் பாடங்கள் V.P.P. மூலம் உங்களது வீடு தேடி வந்து விடும். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

பாடங்களை அனுப்புவதுடன் எங்களது பணி முடிந்து விடுவதில்லை. பயிற்சியினை நீங்கள் நிறைவு செய்யும் வரை எங்களது வழிகாட்டுதல் தொடரும்.

**இதோ கூப்பன்**

☐ நான் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.525/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

தேவையான கட்டத்தில் ☑ குறியிடுங்கள்.

பெயர் : ..............................................................................

முகவரி : ..............................................................................

.............................................................. பின்கோடு ..............................

KLI

**VIVEKANANDA INSTITUTE**

9, மேட்லீ ரோடு, தி.நகர், சென்னை-600 017.

கூப்பனை 15 நாட்களுக்குள் அனுப்புவோருக்கு 416 பக்கங்கள் கொண்ட இங்கிலீஷ்-தமிழ் [illegible] இலவசம்.

E-Mail : vinglish@vsnl.com Visit us at : www.vivekin.com

05/NAGA/[illegible]/TAM

# வசமா மாட்டிக்கிட்டேன்!

**ஏதாவது ஒரு விஷயத்துலே வசமா மாட்டிக்கிட்டு முழிச்ச அனுபவம் எல்லோருக்கும் இருக்கும். அப்படி மாட்டிய சம்பவத்தைச் சில வி.ஐ.பிங்ககிட்ட கேட்டோம்.**

**பா. விஜய்:** ப்ளஸ் டூ படிச்சிட்டு இருக்கும்போது கோவை குற்றாலத்துக்கு நண்பர்கள் எல்லாரும் போனோம். மேற்கு மலைத் தொடர்ச்சி மலையில அடர்ந்த காட்டுக்குள்ள அந்த நீர்வீழ்ச்சி இருக்கு. குளிச்சு முடிச்சிட்டு, கொண்டு வந்திருந்த சாப்பாட்டை எடுத்துட்டு மரங்களுக்கு மத்தியில் சாப்பிடப் போனோம். திடீர்னு பார்த்தால் எதிர்ல யானைக் கூட்டம்! எங்களைப் பார்த்து ரொம்ப பக்கத்துல ஓடி வந்து விட்டது. ஆடிப் போய்ட்டோம். சாப்பாட்டுப் பாத்திரங்களை அப்படியே போட்டுட்டுத், துண்டைக் காணோம், துணியைக் காணோம்னு பறந்து வந்ததை நினைச்சா இப்பவும் புல்லரிக்குது.

**மாது பாலாஜி:** என் ரசிகையான ஒரு பெண் தினமும் என் வீட்டுக்கு ஃபோன் பண்ணுவாங்க. அவங்களோட இரண்டரை வயதுக் குழந்தை சாப்பிடமாட்டான். 'மாது' மாமா பேசறார் பாரு, சாப்பிடுன்'னு சொல்லி சாப்பிட வைப்பாங்க. அவன் சாப்பிடறதுக்காக அடிக்கடி பேசிட்டேயிருப்பேன். ஒரு நாள் அந்தம்மாவுக்கு உடம்பு முடியலை. ஹாஸ்பிட்டல்ல சேர்த்திருந்தாங்க. அவங்க





ஹஸ்பெண்ட் ஃபோன் பண்ணி, 'சார் இந்த மாதிரி விஷயம். பையன் சாப்பிடமாட்டேங்கறான். நீங்க கொஞ்சம் ஃபோன்ல சொல்லுங்க'ன்னார். நான் ரொம்பப் பரிதாபப்பட்டு, நேர்லயே வந்துடுறேன்னு போய்ட்டேன். சோத்துக் கிண்ணத்தை என் கையில கொடுத்தவர், 'ஐந்து நிமிஷத்துல வந்திடறேன்'னு ஸ்கூட்டர்ல கிளம்பிப் போய்ட்டார். நான் என் குழந்தைக்குக் கூட சாப்பாடு ஊட்டுனது கிடையாது. அந்தப் பையனுக்கு வீட்டு வாசல்ல நின்னு ஊட்டினேன். திடீர்னு பார்த்தா என் தங்கையோட மாமா எதிர்ல! 'இங்க நின்னு யார் குழந்தைக்குச் சாப்பாடு ஊட்டறான்'னு ஷாக் ஆகி, அவருக்குப் பல சந்தேகங்கள் வந்து, விர்ருன்னு நடந்து போய்ட்டார். ஓடிப் போய் அவரைக் கூட்டிட்டு வந்து 'இந்த மாதிரி விஷயமாகிப் போச்சு'னு சொன்ன பிறகுதான் அவர் முகத்துல சந்தோஷம். இந்த மாதிரி நிறைய மாட்டிட்டு முழிச்சிருக்கேன்.



**பல்லவிமேனன்:** 'தந்திர பூமி' டி.வி. தொடர்ல ஒரு குழந்தைக்கு அம்மாவா நான் நடிச்சதைப் பார்த்து ஒரு விளம்பரப் படத்துல நடிக்கக் கூப்பிட்டாங்க. ஒரு நாள் பூரா ஷூட்டிங் இருக்கும்னாங்க. சரின்னு போனேன். ஒரு பங்களால ஷூட்டிங். என்னை விட உயரமா, குண்டா ஒரு பொண்ணு அங்க நின்னுட்டிருந்தது. வேற ஷூட்டிங் எதுக்காகவாவது வந்திருப்பாங்கன்னு நினைச்சிட்டிருந்தேன். விளம்பர டைரக்டர் வந்து இந்தப் பொண்ணுக்கு நீங்க அம்மாவா நடிக்கணும்னாங்க. எனக்கு அதிர்ச்சி. 'அடப்பாவமே, அந்தப் பொண்ணு எனக்கு அம்மா மாதிரி இருக்கு. என்னைப் போயி'ன்னு இழுத்தேன். அவரு சொன்னாரு. 'தந்திர பூமி'ல நீங்க வயசான மாதிரி தெரிஞ்சீங்க. அதனாலதான் உங்களை அழைச்சோம். இங்க வந்து பார்த்தா நீங்க இளமையா இருக்கீங்க. பரவாயில்லை அட்ஜஸ்ட் பண்ணிக்குங்க'ன்னு சொன்னதும் 'வசமா மாட்டிக்கிட்டோமடா'ன்னு முழிச்சேன்.



**சி.ஜே. பாஸ்கர்:** 'சிறந்த சின்னத் திரை இயக்குனர்' விருது எனக்குக் கொடுத்த நிகழ்ச்சியில, கவிஞர் வைரமுத்து, நடிகர் விவேக், நீதிபதிகள்னு பெரிய பெரிய வி.ஐ.பிக்கள் எல்லாம் வந்திருந்தாங்க. விருதை வாங்கிட்டு சந்தோஷமா இருக்கைக்குத் திரும்பினேன். 'இப்போது சி.ஜே. பாஸ்கர் பேசுவார்'னு திடீர்னு அறிவிச்சாங்க. நான் மேடையில பேசிப் பழக்கமில்லை. அப்படியே பேசினாலும், ஏதாவது தப்பா பேசிட்டா கவிஞர் வைரமுத்து திட்டுவார். விவேக் கிண்டலடிப்பாரே, 'வசமா மாட்டிக்கிட்டோமே'ங்கற பதற்றத்துல, 'நன்றி வணக்கம்'னு சொல்லிட்டு இறங்கி வந்துட்டேன். அடுத்தாப்ல பேசின நடிகர் விவேக், "பாருங்கய்யா, மெகா சீரியல் இயக்குனர் பேசற பேச்சா இது. இப்படி பேசறதுக்கு இவர் டாகுமெண்டரி எடுக்கலாம்"னு சொன்னதும் அரங்கத்துல ஒரே சிரிப்பு!

— அப்பு

✉ 'ஆடறுத்த கள்ளனுக்கு ஆக்கிவிட்ட கள்ளியடி' என்று கிராமத்தில் ஒரு பழமொழி கூறுவார்கள். பிரியங்காவுக்குத் தந்தை நாடு இந்தியாவாக இருக்கலாம். தாய்நாடு இத்தாலிதானே என்று தராசு விளையாட்டாகக் கூற, அதுவே வினையாகி விடப் போகிறது!

நெல்லை, ஆர்.ஜி.அம்பி

✉ 'வள்ளலார் பூமியிலும் ஊழல் பயிர்!' என்று அறியும் பொழுது வேதனைப் படத்தான் முடிகிறது.

மதுரை, என். பாலகிருஷ்ணன்.




✉ நாமக்கல் மாவட்ட கலெக்டருக்குப் பதினைந்து வகை பாராட்டுகளையும் வழங்கி சபாஷ் சொன்ன கல்கி அவரை டாப்டென் கலெக்டர்கள் வரிசையில் முதலாவதாகக் கூறியிருக்க வேண்டாமோ?

நெய்வேலி, சு. ஸ்ரீகாந்த்

# அவுட்டான பூபதி

✉ "ஆல் தோட்ட பூபதி'யாக இருந்தவர் இப்போது 'அவுட்டான பூபதி!'யாகி விட்டதைப் படித்ததும் மழையில் நனைந்த டென்னிஸ் பந்தாய் மனம் வேதனையில் சுருங்கிப் போனது!"

அரசரடி, வி. சிவா

✉ 'கி.ரா'என்ற 'கிராமத்து எழுத்துத் தந்தையை'ப் பற்றி திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் எழுதியதைப் படித்ததும் ஒரு 'தமிழாய்வுக் கட்டுரை'யைப் படித்த சுவை கிடைத்தது.

கருமத்தம்பட்டி, அ. ராஜப்பன்



## வட்டமேஜை

✉ 'மோடியின் மூர்க்கத்தனம்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட தலையங்கம் நெருப்பாய் தகித்தது. ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து பிரதமருக்கும், ஏன் மோடிக்குமே அனுப்பி வைக்க வேண்டும்.

கோவை. டி. ஜெய்சிங்

✉ 'மோடியின் மூர்க்கத்தனம்' என்ற கல்கியின் தலையங்கம் ஏதோ காழ்ப்புணர்ச்சியில் கூறப்பட்டது போல் காண்கிறது. கோத்ரா சம்பவத்தின் போது நரேந்திரமோடி நடந்து கொண்ட விதம் சரியல்லதான்; என்றாலும் சுவாமி நாராயண் ஆலயத்தில் அப்பாவி பக்தர்களை இஸ்லாமிய தீவிரவாதிகள் கொன்று குவித்ததற்குக் கூட, மோடியின் நடவடிக்கைதான் காரணம் என்பதுபோல் தலையங்கம் தொனிக்கிறது. ஏதோ ஆறுதலுக்காக அக்ஷர்தாம் சம்பவத்தைக் கண்டனம் செய்வதுபோல் முதலில் கூறிவிட்டு, மோடியை வசைபாடியுள்ளது நடுநிலையானதாகத் தெரியவில்லை. தீவிரவாதச் செயல்கள், பாகிஸ்தானில் ஊக்கப்படுத்தப் படுவதையும், உதவி செய்யப்படுவதையும் உணர்ந்து கொள்ள வேண்டாமா?

அய்யம்பேட்டை, ஜி.ராமதாஸ்.



## திருவருள் பொழியும்

# திருவண்ணாமலையில் பௌர்ணமி தினத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

பேரன்புடையீர்! நமஸ்காரம்.

பஞ்சபூதத் தலங்களில், அக்னி தத்துவமாக விளங்கும் திருவண்ணாமலை, நினைக்க முக்தி தரும் புண்ணிய க்ஷேத்திரம். கிரியே சிவமாகவும், சிவமே கிரியாகவும் விளங்குவதால் இங்கு கிரிவலம் வருவது சிவபெருமான் உறையும் கைலாயத்தையே வலம் வருவதற்கு ஒப்பாகும். ஏராளமான சித்தர்கள், ஞானிகள், முனிவர்கள், ரிஷிகள் வாழ்ந்து, தவமியற்றி, வரம் பெற்று, மோட்சம் அடைந்த புனித புண்ணிய க்ஷேத்திரம் திருவண்ணாமலை. இங்கு பௌர்ணமி காலத்தில் கிரிவலம் வரும் பக்தர்களுக்கும், சாதுக்கள், ஊனமுற்றோர், சன்யாசிகள், ஏழை எளிய மக்கள், பக்தர்கள் ஆகியோருக்கு அன்னம் அளிப்பது மகத்தான புண்ணியத்தை நமக்குத் தருகிறது.

தடுத்தாட் கொள்வது, கிரக நிலைகளை மாற்றுவது, ஊழ்வினைகளை நீக்குவது, முக்தி தருவது, ஆயுளை நீடிப்பது, நோய்களைக் குணப்படுத்துவது போன்ற சிவ லீலைகள் நிகழ்ந்த இவ்விடத்தில், அன்னதானத்தின் மூலம் புண்ணியம் பெறுவதும், மோக்ஷம் அடைய முயல்வதும் உயர்ந்த லட்சியமாகும்.

★ மனச்சாந்தி பெற ★ திருமணம் கைகூட ★ நோய்நொடிகள் தீர ★ எண்ணங்கள் வெற்றி பெற ★ சந்தான பாக்யம் பெற ★ பிரச்சனைகள் எளிதில் தீர ★ கணவன் மனைவி ஒற்றுமை ஏற்பட ★ தொழிலில் மேன்மை பெற ★ பிரிந்தவர்கள் ஒன்று சேர ★ கடன் தொல்லைகளிலிருந்து விடுபட ★ நினைத்த காரியம் நிறைவேற ★ உங்களுக்காக நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ அன்னதானம் செய்ய சிறிய தொகையும் ஏற்றுக் கொள்ளப்படும். ★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும். ★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும். ★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 மற்றும் ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். அன்னதானப் பணிக்காக நன்கொடை வழங்கும் அன்பர்கள் நேரில் வந்து கலந்து கொள்ளலாம். கிரிப்பிரதட்சிணம் செய்து கோரிய பலனையும் பெற்றுக் கொள்ளலாம்.

நன்கொடைகளை **SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித சேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


**ஸ்ரீ அன்னலக்ஷ்மி அன்னதான ஸேவா டிரஸ்ட்**

**SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST**

**M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com**

# ஆண்டாள் பிரியதர்ஷினி




"**மு**துகு இன்னும் பனிச்சுன்னு தெரியணும். சரி பண்ணுய்யா..." – புத்தக அடுக்குகள் தாண்டித் தாண்டி நுழைந்து வந்தன கோபவார்த்தைகள். சர்வாங்கமும் கூசிப் போனது சரஸ்வதிக்கு. முந்தானையை இழுத்துத் தோளை இறுக்கி மூடிக் கொண்டாள்.

"இதான்யா – புது ஆளுங்களே வேணாங்கறேன். உங்ககிட்ட டி.டி.பி. ஜாப் குடுத்து புத்தகம் தயார் பண்றதுக்குள்ளே தாவு தீர்ந்துடுது. என்னய்யா இது? ம்?"

அங்குமிங்கும் நிறைய ஆண்களே அலைந்து கொண்டிருந்தாலும், அவள் மட்டுமே ஒற்றைப் பெண்ணாய் ஒடுங்கியிருந்ததுமான அசந்தர்ப்பச் சூழலில் மறுபடியும் முதுகு பற்றின வியாக்கியானம் பிரஸ்தாபிக்கப்பட்டதும் அவளுக்குக் குறுகுறுப்பை உண்டாக்கியது.

சரஸ்வதிக்குத் தெரிந்த முதுகு – குமாருடையது மட்டும்தான். சைக்கிளிலிருந்து கீழே விழுந்து அடிபட்டு முதுகுத் தண்டு பாதிக்கப்பட்டுப் புண்ணாகியிருக்கும் முதுகு. ஆபரேஷனில் சரி பண்ணிவிடலாம் என்று மருத்துவர் உத்திரவாதம் தந்திருக்கும் முதுகு. எந்தவிதமான இயக்கமும் இல்லாமல், கட்டிலோடு கட்டிலாய் ஒருவாரமாய்ப் படுத்துக்கிடப்பவனின் முதுகு.

"என்னம்மா? ஆபரேஷன் பண்ணிடலாமா? இல்லேன்னா வீட்டுக்கு அழைச்சுட்டுப் போயிடு. வேற



பேஷண்ட்டுக்குப் படுக்கை வேணும். சாகர வரைக்கும் இங்கேயே படுக்க வைக்கப் போறியா?"

மருத்துவரின் நெருக்குதலுக்கு ஈடுதர முடியாமல்தான் படியேறியிருக்கிறாள் சரஸ்வதி. ஒரு வேளைச் சோறு, ஒருவாய் காப்பி, டீ, குருவியாய்ச் சேகரிக்கும் மளிகை சாமான், வருஷத்துக்கொருதரம் வாங்கும் நூத்தி அம்பது ரூபாய்ப் புடைவை, குந்துமணித் தங்கம், இப்படிச் சகலத்தையும் மிச்சப்படுத்தினாலும் கூட – முழுசாய் ஆயிரத்துக்கும் மேல் சேர்க்க முடியாத சில்லரை வாழ்க்கை. இதில், இருபதாயிரம், முப்பதாயிரத்துக்கு என்ன பண்ண? யாரிடமும் மடிப்பிச்சை கேட்க முடியாதே... ஆனாலும் கூட... 'நன்கொடை கொடுத்து உதவுங்கள்' என்று ஒருதரம் பத்திரிகையில் விளம்பரம் கொடுத்துப் பார்த்தாள். ம்ஹூம். பிரயோஜனம் இல்லை. விளம்பரச் செலவுதான் மிச்சம். பத்துப் பைசா கூடப் பெயரவில்லை.

இங்கே – பதிப்பாளர் அறை வாசலில் ஒரு மணி நேரமாய்க் காத்திருந்து நொந்து நொய்ந்து போயிருக்கிறாள் சரஸ்வதி. காத்திருத்தலின் நரகம் – சுண்ணாம்புக் காளவாயைவிடக் கொடுமை. உட்காரவும் முடியாமல், 'ச்சீபோ' என்று எழுந்து நகர்ந்து விடவும் முடியாமல் முள் இருக்கை. உடம்பு, மனசு சகலமும் முள் கிழித்துக் குருதி கசிகிறது. அத்தனைப் பேரின் பார்வையும் அவளைத் தோட்டாவாய்த் துளைப்பதாய்ப் படுகிறது.

குழந்தை ஆசையை விட அதிகமாய்க் கர்ப்பம் சுமந்த கனவு. என் தொகுப்பு, என் கவிதைத் தொகுப்பு. பக்கத்துக்குப் பக்கம் என் கவிதை. என் பெயர், என் சிந்தனைத் தெறிப்பு. என் கற்பனைச் சிறகடிப்பு. என் முதல் குழந்தை. அதன் ஸ்பரிசம். அதன் வருடல். அதன் புத்தம் புதிய வாசனை. புத்தக வாசனை. கவிதைத் தொகுப்பு வெளியிட வேண்டுமென்ற ஆசை. கனவு, விருப்பு, வெறி, சிந்தனை நெருப்பு. லட்சிய தாகம் சகலத்துக்கும் கொடுத்திருக்கும் விலைதான் குமாரின் முதுகு.



இவரிடம் கொடுத்திருந்த கையெழுத்துப் பிரதியைப் புரட்டிப் பார்க்கவே ஒன்பது மாசம் எடுத்துக் கொண்டார் – ஆயிரம் நினைவூட்டல்களோடு.

"லேடீஸ் எழுதறதுல வேறென்ன புதுசா சொல்லப் போறீங்க? புருஷங்காரன் கொடுமை, ஆண் ஆதிக்கம், பிரசவம், குழந்தை, தீட்டு, கண்ணீர் இதுதானே? பெண் உரிமை, சுதந்திரம்னு வேற புலம்புவீங்க..."

சரஸ்வதியின் கவிதைக் கூறுகள், கூறு போடப்பட்டன. ஆழ்மன வலிகள் – வியாபாரத்தனமாய்க் கிண்டலடிக்கப்பட்டன. அலட்சியமாய்ப் புரட்டப்பட்டன அவளின் ஆருயிர்க் கவிதைத் தாள்கள்.

"சினிமாக் கவிஞனோட கவிதைப் புத்தகம் – சீக்கிரமா 'மூவ்' ஆயிடும். உங்களை மாதிரி, பத்திரிகைல எழுதின தொகுப்பை எப்படித் தள்ளிவிட? யாரு வாங்குவாங்க? எலி கடிக்காம காப்பாத்தி வித்து முடிக்கறதுக்குள்ளே தாவு தீர்ந்திடும். லைப்ரரி ஆர்டர் வாங்கறதுக்குள்ள நாக்கு தொங்கிடும்."

கவிதைகளைப் படித்துப் பார்க்கச்







— ராம்

சொல்லிப் பத்து தரம் நடையாய் நடந்த பின்னும் — இத்தனை வியாக்கியானத்தின் படையெடுப்பு.

"கவிதைத் தொகுப்புக்குச் செலவு பண்ற முதலீடு — எள்ளுந் தண்ணியும் தெளிச்சு விடற மாதிரிதான். போட்ட பணத்தை மறந்துடணும் நானு. செலவு என்னை முளுங்கிடும்...''

"புக்கு நீளமாவா? சாதாரண சைஸா? அட்டைப் படம் யாரு வரையறாங்க?''

"ப்ச. என்னம்மா நீங்க? தினமும் வந்து தொணப்பறீங்க. ரூபாய் குடுத்தீங்களா? எடத்தைக் காலி பண்ணுங்க. புத்தகம் தயாரானதும் தகவல் சொல்கிறோம். இருநூத்தைம்பது காப்பி நீங்கதான் வாங்கிக்கணும். ரூபாயோட வாங்க...''

தன் நூலைத் தானே விலைகொடுத்து வாங்கவா? இந்த நிபந்தனை புதுசாயிருக்கிறதே?

"ஆமாம்மா. எல்லாத்தையும் முதல்லியே சொல்லிட முடியுமா? கல்யாணத்துக்கே ஆயிரம் பொய் வரைக்கும் கூசாம சொல்லலாம்ங்கறாங்க. இது என்ன புதுசா? எங்கேயும் நடக்கறதுதான்...''

சரஸ்வதியின் கவிதை மனசு — இந்தக் கனல் பதிலால் சுருங்கிப் போனது. ஆனால், குமார், இதற்கும் கூட ஒன்றும் சொல்லவில்லை. ஆதுரமாய் வருடுவது மாதிரி புன்னகைத்தான் கவிதை மன்னவியிடம். இருநூற்றைம்பது புத்தகங்களைக் கட்டிப் பார்சலாய்க் கொடுத்தார்கள். சுளையாய் ரூபாயைத் தந்து தன் கவிதைத் தொகுப்பை வாங்கிக் கொண்டாள். படைப்பாளியின் பிரதிகளாய்த் தந்த பத்துப் புத்தகத்தைக் கையில் வாங்கும்போது சரஸ்வதிக்கு மார்பு படபடத்தது. பிரசவ நெகிழ்வு ஏற்பட்டது. பனிக்குட நீர் உடைந்து வழிந்து, வயிற்றுச் சுமை இறக்கிய ஜனன சுகம் இறுக்கியது அவளை. கண்ணீர் வந்தது. நெஞ்சடைத்தது. தொண்டை வலித்தது. 'என் கவிதைத் தொகுப்பு' என்கிற கர்வத்தில் ராணியாய் உணர்ந்தாள். கவிதை சாம்ராஜ்யத்தில் அவளுக்கான குறுநில மண் பதிவு பண்ணப் பட்டுவிட்டதாய்ப் பெருமிதத்தில் புல்லரித்தது.

தம்முடைய கவிதைத் தொகுப்பைப் பார்க்காமலே, கவிதைக் கனவிலேயே செத்துப்போன பாரதியாரின் நினைவு வந்தது சரஸ்வதிக்கு. அவரை விடவும் கொடுத்து வைத்தவள் நான் என்கிற நிறைவுடன் கவிதைப் பார்சலை மடியோடு இறுக்கினாள். குதிரையில் நகர்வலம் வரும் மன்னரின் கம்பீரமாய் — சைக்கிளில் வந்தபோதுதான் நடந்தது அது. தண்ணீர் லாரி மோதியதில் புத்தகக் கட்டு அவிழ்ந்து சாலையெல்லாம்

சிதறின புத்தகங்கள். கறுப்புச் சாலை முழுவதும் பூத்தன புத்தகப்பூக்கள். மற்ற வாகனங்களின் சக்கரத்தில் அரைபட்டு நசுங்கின. கவிதை சாப்பாடாயிற்று சக்கரத் துக்கு. அரைத்துத் தின்றன. ஒரு மூலையில் வழுக்கி விழுந்தாள் சரஸ்வதி. முதுகு தேயத் தேயச் சாலையில் விழுந்த குமார் – அந்த நிமிஷத்திலிருந்து மருத்துவ மனையில்தான். அவனை எழுந்திருக்க வைக்கத்தான் ஒற்றைக்கால் தவமிருக்கிறாள் சரஸ்வதி.

கவிதையைக் காதலித்துச் சாதி மீறிக் கல்யாணம் செய்தால் உறவுசொல்லக் காற்றும், சூரியனும், நட்சத்திரமும் தானே வாய்க்கும்? ஒரு பிரச்னை என்றால் வேடிக்கை பார்ப்பதைத் தவிர, இவற்றால் வேறென்ன செய்ய முடியும்? சரஸ்வதியோடு சேர்ந்து காற்று கைபிசைகிறது. மழை கண்ணீர் விடுகிறது.

இவளின் உயிருக்கு விலை கிடைக்கு மானால் சகாய விலையில் விற்று குமாரைச் சீர்ப்படுத்தலாம். பிரயோஜனமே இல்லாத இருப்பு – தனக்கு வாய்த்தது பற்றி ஆயிரம் வருத்தம் அவளுக்குத் ததும்புகிறது. உயி ரைவிட, கவிதையை விட, பணத்துக்கான சிம்மாசனம் மனித இனத்தின் மலினத்தைச் சொல்வதாய்ப்பட்டது சரஸ்வதிக்கு. இன் றைக்காவது பணம் ஏதேனும் கிடைத்தால் குமாரைக் கொஞ்சம் நடமாட வைக்கலாம். குழந்தை மாதிரி நடை பழக்கலாம். ஓர் உருண்டை சோறு உட்கார்த்தி வைத்துத்தின் னப் பழக்கலாம்.

"இன்னமுமா நா சாகல்ல? ஒரேயடியாப் போயிருக்கணும் சரசு..." உடம்பில் எதையுமே அசைக்க முடியாத குமார் – நாக்கை மட்டும் அசைத்து, இந்த வலி வசனத்தைப் பிர யோகப்படுத்துவதிலிருந்து நிறுத்தப் பழக்க லாம்.

"நா செத்துட்டாலும் கவலைப்படாதே. சோகத்தைத் தள்ளி வச்சிட்டு, கவிதை எழுது சரஸு..." என்று உருகுபவனுக்கு நம்பிக்கை தரப் பழக்கலாம்.

ஏதாவது பணம் கிடைக்கக் கூடுமென்ற நம்பிக்கை நிறைத்து காலி மணிபர்ஸோடு இவள் படி ஏறுவது தெரிந்த உடனேயே ஏதாவதொரு சால்ஜாப்பு – இவளுக்கென பதிலாகக் காத்திருக்கிறது. கேள்விக்கும் முன்பாகவே உதவியாளர் – பதிலை அனுப்பி விடுவார்.

"ஐயா பிஸி. நிறைய ஆர்டர் அனுப்ப வேண்டியிருக்கு. செக் பண்ணிட்டிருக்கார் எல்லாத்தையும்... யாரையும் பார்க்க முடியாது."

இன்றைக்கும் இதே பதில்தான் மிதந்து வந்து முகத்தில் அறைந்தது.

'பரவாயில்ல. கொஞ்ச நேரம் காத்திரு. வெளில வரும்போது கேட்டுப்பாரு..'

கால் கெஞ்சியது.

"இனம்புங்கம்மா. வருஷாந்திரக் கணக் குப் பார்க்கணும். ஸ்டாக் எடுக்கணும். ரிடர்ன்ஸ் பார்க்கணும். கொஞ்ச நாளு ஆகும் இதுக்கு. அக்கவுண்ட்ஸ் பார்த்துட்டு, நானே ஏதாச்சும் தொகை அனுப்பிடறேன்.."

உதவியாளர் விரட்டினபோதும் நகர வில்லை சரஸ்வதி. இது உயிர்ப் பிரச்னை. அவமானம் கொப்பளித்த அந்தப் பதிலால் – சுறுசுறுவென்று துள்ளிக் குதித்த சுய கௌர வத்தைக் கொஞ்சம் அடக்கினாள் சரஸ்வதி. மௌனமாய்க் காத்திருந்தாள்.

"பெரிய எழுத்தாளருங்களே ராயல்டி கேக்கறதில்ல. இந்தம்மா – எப்பப்பாரு வந்து கழுத்தறுக்கறாங்க... அவங்க பாட்டுக்கு உக் காரட்டும். உனக்கென்னய்யா வலி?"

அறைக்குள் நிகழ்ந்த வார்த்தைப் பரி மாற்றம் சுவர் தாண்டிக் கசிந்தது.

காலிலாவது விழுந்து கேட்கலாமா? மடிப்பிச்சை ஏற்கலாமா? ம்ஹூம். பேனா பிடிப்பவளுக்குத் தன்மானம் ஒரு சிட்டிகை ஜாஸ்தியாய்த்தானே இருக்கிறது? எந்தக் கொம்பன் காலிலும் நான் விழமாட்டேன் என்கிற தெனாவெட்டு. இது என்ன

"உன் மேல திருட்டுக் குற்றம் சுமத்தப் பட்டிருக்கே, என்ன சொல்றே?"

"ஆமாங்க சாமி, பட்டினிச் சாவுல அரசுக்குக் கெட்ட பேர் வரக் கூடாதேன்னுதான்..."

— என்.எஸ். பாலசுப்பிரமணியன்



பிச்சையா? என் கவிதைக்கான இலக்கியச் சன்மானம்.

"பரவாயில்லப்பா, லைப்ரரில கூட எடுத்துக்கிட்டான். இந்தம்மா தொகுப்பு நல்ல ஓட்டம் ஓடுது. செகண்ட் எடிஷன் போட்டுறலாம். இதை ஏன் வெளில சொல்ற? நீ பாட்டுக்கு அடிச்சு வுடு. யாரு கண்டு புடிக்கப் போறாங்க? நானூறு புக்கு கனடால கேட்டாங்க பாரு. பளார்னு அனுப்பிடு. நல்ல சேல்ஸ் இந்தப் புத்தகம்..."

## சர்ச்சைப் படம்!

இரண்டாம், மூன்றாமிடத்தில் வந்து கொண்டிருந்த ஹாலிவுட் படமான 'பார்பர் ஷாப்', முதலிடத்துக்கு வந்திருக்கிறது கடந்த இரண்டு வாரமாக. இது முதலிடத்துக்கு வருவதற்கான காரணம், படத்தில் இடம் பெற்றிருந்த சர்ச்சைக்குரிய நகைச்சுவை. படத்தில் வரும் எடக்கு மடக்கான ஒரு பார்பர் கேரக்டர், கறுப்பின தலைவர்கள் மார்டின் லூதர் கிங் ஜூனியரையும், ரோசா பார்க்கஸையும் கிண்டலடிக்கிற மாதிரியான நகைச்சுவைக் காட்சி இடம் பெற, பெரும் பிரச்னையாகி விட்டது ஹாலிவுடில். பிறகென்ன, தயாரிப்பாளர்கள் மன்னிப்புக்கேட்டு அந்தக் காட்சியை எடுத்து விடுவதாகச் சொல்ல இப்போது பிய்த்துக் கொண்டு ஓடுகிறது படம். நம்மூரில் மட்டும்தான் சர்ச்சைக்குரிய படம் ஓடுமா என்ன?

— சலாம்

• படத்தில் • நாயகி • ஈவ்

மிதந்து வந்து சரஸ்வதியின் காதில் ஒட்டின ரகசிய வார்த்தைகள். இந்தம்மா என்பது யார்? யார் தொகுப்பு நன்றாய் ஓடுகிறது? நூலகத்தில் வாங்கிக் கொண்டது எந்தப் புத்தகத்தை? மனசில் கேள்விகளின் அடுக்கு. வெளிநாடு கூடப் போய் விட்டதே... எந்தப் புத்தகம் அது? யாரிடம் கேட்கலாம்? இங்கே – முதலாளி தவிர, மற்றவர்களெல்லாம் வாயும் வார்த்தைகளும் இல்லாத பிரகிருதிகளாய் இருக்கின்றார்களே...!

"ஐந்நூறு ருவாயாச்சும் குடுத்திடலாமா? புருஷனுக்கு ஆபரேஷனாம்."

"தர்ம ஸ்தாபனமா இது? கவிதை புக்கு – சொந்தமாப் போட்டுச் செத்துச் சுண்ணாம்பாகற ஆளுங்க நெறைய இருக்காங்க. கஷ்டமே இல்லாம இவங்களுக்குப் போட்டுக் குடுத்தேன். ஒவ்வொருத்தரு – எழுத்தாளர் கிட்ட இருபதாயிரம் வாங்கிட்டு, நானூறு ஐநூறு புத்தகத்தையும், தலையில கட்டி அனுப்பறாங்க. நானு அப்படியா பண்ணேன்? வெறுமனே இருநூத்தி அம்பது புக்கு தான குடுத்தேன்? வேணுமானா – ஸிங்கிள் டீ குடுத்து அனுப்பு. இல்லேன்னா ரெண்டாவது தொகுப்புக்குக் கவிதை குடுக்கச் சொல்லு. உச்சி குளுர்ந்துடுவாங்க..."

வார்த்தைகளை உதவியாளருக்குத் தந்தபடியே அவர் வருகின்ற சப்தம் கேட்டது.

"உங்க அவசரத்துக்குப் பணம் தர – நாங்க என்ன அடகு பிடிக்கறமா? முதலிலியே உங்க தொகுப்பு போட மாட்டேன்னுதான சொன்னேன்? எனக்கு இதெல்லாம் தேவையில்லாத முடக்கம். ஏதோ லேடீஸ் ஆசைப்படறீங்கன்னு போட்டுக் குடுத்தா – ராயல்டி கேக்கறீங்களே. விக்க வேணாமா எழுவெடுத்த புத்தகம்? கவிதை எழுதறேன்னு பொம்பளைங்க தாலியறுக்கக் கௌம்பிடுதுங்க... பிசாத்து கவிதை..."

வார்த்தைகளைத் தூக்கியெறிந்து நடந்தார்.

"முதுகு நல்லா இருக்கணும். பளிச்சுன்னு பண்ணு. நெனைப்பு வச்சுக்கய்யா. இல்லேன்னா – டிடிபி ஆளை மாத்திருவேன். அதான் தெருவுக்குத் தெரு நாப்பது ஆளுங்க லோல் படறீங்களே. இதை விட லோ பட்ஜெட்டுக்கும் ஆளுங்க கெடைப்பானுங்க..."

ஓரமாய் ஒதுங்கி, கைகட்டி நின்றவரிடம் பொரிந்தார் அவர்.

முதுகு என்றால் என்ன? சரஸ்வதிக்கு இன்னமும் புரியவில்லை. குமாரின் புரையோடின முதுகுதான் அவளுக்கு நினைப்பு வந்தது.

முதலாளி லாவகமாய் ஏறின படகுக் காரின் குளிர்ப்பதனம் கத்தியாகி அவளின் நடு முதுகில் செருகப்பட்டதாயும், விரைந்து சாத்தின கதவிடுக்கில் சிக்கி அவள் கவிதைகள் கதறினதாயும் உணர்ந்தாள் சரஸ்வதி.

வழுக்கிச் சென்ற காரின் ஒவ்வொரு சக்கரத்திலும் இவரிடம் வந்த படைப்பாளிகள் சிக்கி நசுங்கிக் கூழானதாயும் கூட.○

# இலக்கியமும் ஆன்மிகமும்

திருப்பூர் கிருஷ்ணன்





• எம்.வி.வி.யுடன் தேனுகா

கி.ரா. என்ற செல்லப் பெயரால் அழைக்கப்படும் எழுத்தாளர்கள் தமிழில் மூன்று நான்கு பேர் உண்டு. கல்கி அதிபர் ராஜேந்திரனைக்கூடக் கி.ரா என்பதுண்டு.

கு.ப.ராவின் சகோதரி கு.ப. சேது அம்மாள் 90 வயது தாண்டிய அழகான பாட்டி. படைப்பிலக்கிய முன்னோடி எழுத்தாளர்களில் ஒருவர் கு.ப.ரா என்றால், சமையல் கலைப் புத்தக முன்னோடி சேது அம்மாள். (90 வயதிலும் செக்கச் செவேல் என்று அழகாக இருக்கும் அவர் அழகுக் கலை குறித்து ஏன் புத்தகம் எழுதவில்லை என்று தெரியவில்லை) இப்போதும் அவருக்கு இலக்கியவாதிகளைப் பற்றிப் பேசுவதில் ஈடுபாடு உண்டு. அவர் ஒருமுறை எல்லாக் கி.ரா.க்களையும் பற்றி என்னிடம் பேசிக் கொண்டிருந்தார். கொஞ்ச காலம் எழுதிக் கொண்டிருந்த ஒரு கி.ரா. திடீரென்று துறவியாய் எங்கோ மலைப்பிரதேசம் சென்றுவிட்டாராம். அவரைப் பற்றித் தகவல் தெரியுமா என்று கேட்டார். தெரியவில்லையே என்றேன். 'பொதுவாகக் கி.ராக்களே புத்திசாலிகளாகவும் அன்பானவர்களாகவும் வேதாந்திகளாகவும் இருப்பார்கள்' என்றார் அந்த மூதாட்டி.

இசை வல்லுநர் வி.வி. சடகோபனும் திடீரென்று துறவியாகி எங்கோ சென்றுவிட்டதாய்ச் சொல்வதுண்டு. கி. கஸ்தூரிரங்கனின் மைத்துனர், அமரர் ஸ்ரீராம்பாரதி, வி.வி. சடகோபனின் சிஷ்யர். பள்ளிக்கரணையில் தாம் கட்டிய முத்துகிருஷ்ணர் ஆலயத்தில் தம்

குருநாதரான சடகோபனின் சிலையைப் பிரதிஷ்டை செய்து ஆராதித்து வந்தார்.

ஓரிரு ஆண்டுகள் முன், கைலாச யாத்திரை சென்றார் பிரபல ஜோதிடர் ஏ.எம். ராஜகோபாலன். 'இமய மலைக் குகை ஒன்றில், வி.வி. சடகோபன் மௌனவிரதம் பூண்டு, தியானத்தில் இருந்ததைப் பார்த்தேன்!' என்று என்னிடம் சொன்னார் அவர்.

'துறவியான கி.ரா.வை இப்போது எங்காவது சந்தித்தால் அவர் கடவுளைப் பற்றிப் பேசுவதோடு, இலக்கியம் பற்றியும் பேசக்கூடும்!' என்றேன் சேது அம்மாளிடம் நான். 'இலக்கியவாதிகளுக்கு இரண்டும் ஒன்றுதான். இலக்கியம் தான் அவர்களின் கடவுள். இலக்கியத்திற்காக அவர்கள் எதையும் துறப்பார்கள். ஆனால் எதற்காகவும் அவர்களால் இலக்கியத்தை மட்டும் துறக்க இயலாது' என்றார் சேது அம்மாள்.

• கு.ப.சேது அம்மாள்

உண்மைதான். அப்படி இலக்கியத்திற்காக லௌகீக வாழ்வின் பல சுகங்களைத் துறந்து, அண்மையில் மறைந்த தஞ்சை ப்ரகாஷ், சதங்கை வனமாலிகை போன்ற என் இனிய நண்பர்களின் நினைவுகள் மனத்திரையில் ஓடின. தாகூரைப் போல் நீண்ட தாடியோடு, பல ஆண்டுகள் இயற்கை உணவை மட்டுமே சாப்பிட்டு வாழ்ந்த தஞ்சை ப்ரகாஷையும், வளர்ந்த மகன் காலமான சோகத்திலும் சதங்கை இதழை விடாமல் நடத்திய வனமாலிகையையும், எழுத்துலகம் நெடுங்காலம் நினைவு வைத்திருக்கும்.

துறவியான ஒரு கி.ரா. போல் தமிழில் துறவியென்று ஆகாமலே, ஆனால் துறவு மனநிலையில் ஆன்மிக வாழ்வு வாழ்ந்த எழுத்தாளர்கள் பலர் உண்டு. 'ந. பிச்சமூர்த்தி அப்படி ஒருவர்' என்று சி.சு.செல்லப்பா என்னிடம் சொன்னதுண்டு. பொதுவாக, பிச்சமூர்த்திக்கு சடங்குகளில் நம்பிக்கை கிடையாதாம். 'ஆனால் வாழ்வின் இறுதிக் காலத்தில் சடங்குகளிலும் அவருக்கு நம்பிக்கை வந்து விட்டது' என்றார் செல்லப்பா.

அறிஞர் வ.ரா. பரவலாக நாத்திகர் என்றே அறியப்பட்டவர். அது அவ்வளவு சரியல்ல. இறுதிக்காலத்தில் அவருக்குக் கால் விபத்து நேர்ந்து கழியூன்றி நடந்தபோது, பக்தி வந்து பகவத் கீதை படிக்கத் தொடங்கிவிட்டாராம். 'கடவுள் வழிபாடும் கீதையும் தான் ஆறுதலாக உள்ளன' என்று அவர் தம்மிடம் சொன்னதாக கு. அழகிரிசாமி எழுதியிருக்கிறார். சில முற்போக்கு எழுத்தாளர்கள், ஆன்மிகத்தை ஏற்பதில்லை. அது அவர்கள் மனப்போக்கு. ஆனால் ஆன்மிகம் முற்போக்கானதல்ல என்று சொல்வது போன்ற பிழை வேறில்லை. மிகச் சிறந்த எழுத்தாளரான வள்ளலாரை விட முற்போக்கானவர் யார் உண்டு?

நான் எம்.வி. வெங்கட்ராமின் ஆன்மிக அனுபவங்கள் குறித்து அவரிடம் நிறையப் பேசியிருக்கிறேன். எங்கள் உரையாடலை எம்.வி.வி. அன்பரான கலை விமர்சகர் தேனுகா ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டிருப்பார். ஆன்மிகம் உயர்வானது தான் என்றாலும், அதில் நிறைய மூடத் தனங்களும் உண்டு என்பது என் சொந்த அபிப்ராயம். எம்.வி.வி. ஒருமுறை என்னிடம் சொன்னார், 'சின்னஞ்சிறு முருகர் மிகச் சிறிய வேலோடும் சின்னஞ்சிறு ராமர் மிகச் சிறிய அம்போடும் மூக்கு வழியாகத் தன் உடலுக்குள் புகுந்து அந்த ஆயுதங்களால் தன் வியாதியையெல்லாம் தகர்த்ததாக. அன்று இதை அவர் சொன்னபோது நான் சிரிக்காமல் இருக்கக் கஷ்டப்பட்டேன். பிறகு 'இப்படிச் சொன்னார் எம்.வி.வி.' என்று இதே விவரத்தை நான் அ.ச.ஞா.விடம் பகிர்ந்து கொண்டேன். கேட்டவுடனேயே 'அடேடே! எம்.வி.வி.யைப் பார்க்க வேண்டுமே எனக்கு' என்று அ.ச.ஞா. பரபரத்தார். (அந்தச் சந்திப்பு நிகழவில்லை.) 'அவர் சொல்வது சாத்தியம் தான்!' என்றார் நெகிழ்ச்சியுடன். எனக்கு எம்.வி.வி. கூற்றில் நம்பிக்கை பிறக்கவில்லை. ஆனால் அ.ச.ஞா. பொய்சொல்ல வாய்ப்பில்லை.

வாழ்க்கைப் போக்கில் ஒருவர் தொடர்ந்து நாத்திகராகவே இருப்பதற்கோ அல்லது ஆத்திகராகவே இருப்பதற்கோ சாத்தியமில்லை. நாத்திகரான கண்ணதாசன் ஆத்திகரானதும், ஆத்திகரான பாரதிதாசன் நாத்திகரானதும் இயல்பான வளர்ச்சிதான். ஆத்திகமும் நாத்திகமும் அவரவர் மனப் போக்கு. இதில் ஒருவரைப் பற்றி மற்றொருவர் தாக்கிக் கொள்வது வீண்வேலை.

இன்று நாத்திகர்கள் ஆத்திகர்களை விமர்சிப்பது தான் அதிகம். பக்தர்கள் நம்பிக்கையோடு இட்டுக் கொள்ளும் குங்குமப் பொட்டும் விமர்சிக்கப்படுகிறது. பலரது ஆழ்மன நம்பிக்கைகளைக் கிண்டல் செய்வது யாருக்கும் அழகல்ல. திருநீறோ, குங்குமமோ, திருமண்ணோ அவரவர் நெற்றிப் பிரதேசத்தில் அவரவர் வளர்த்துக் கொள்ளும் பக்திப் பயிர். அது அடுத்தவர் நெற்றியில் இடிக்கும் அளவு நீண்டிராத வரையில் அதைப் பற்றி மற்றவர் கருத்துச் சொல்வது அநாவசியம்.

(தொடரும்)

பலன் தரும் பண்ணை நிலம் – பழத்தோட்டம் – சொந்தமாக வாங்குதல் – செய்தி

# “கல்கி வார இதழ்கள் 5 ஆண்டுகளுக்கு அன்பளிப்பு”

வாலாஜாபாத் அருகே (காஞ்சிபுரம் செல்லும் வழி) பாலாற்றங்கரையில் ஆசூர் கிராமத்தில் முன்பு அறிவித்த திட்டத்தின்படி ஏற்றுமதித் தரம் வாய்ந்த மாங்கன்றுகள் ஏற்கெனவே நடப்பட்டு பராமரிக்கப்பட்டு வருகின்றன. பலர் அந்த நிலங்களை வாங்கியுள்ளனர்.

புதிய திட்டத்தின்படி 1200 ச.அடி உள்ள பண்ணை நிலங்கள் ரூபாய் 20,000/– மட்டுமே

உங்கள் வாழ்நாள் முழுமையும், பிறகும் உங்கள் குடும்பத்திற்கு ஆண்டுக்கு ஒரு முறை கணிசமான வருமானம் கிடைக்கும். முழு தொகையும் மொத்தமாக கொடுப்பவர்களுக்கு சலுகை விலையில் ரூ.18,000/– மட்டுமே.

உடனே எங்கள் செலவில் பத்திரம் பதிவு செய்து தரப்படும். விலை கொடுத்து வாங்கிய நிலம்உங்களுடையதாகிவிடுகிறது.

அந்த நிலத்தை கட்டாந் தரையாக விடாமல் நல்ல வருவாய் தரும் மாங்கன்றுகளை நட்டு, உங்களுக்குக் கவலையில்லாமல் நாங்களே பராமரித்துத் தருகிறோம்.

5 ஆண்டுகளுக்குப் பிறகு மாங்கனிகள் விற்பனை மூலம் கிடைக்கும் வருவாய் வாழ்நாள் முழுமையும் உங்களுக்குத்தானே.

5 அல்லது 6 ஆண்டுகளில் சுவையான மாங்கனிகள் உள்நாட்டில் வெளிநாட்டில் விற்பனை மூலம் ஆண்டிற் கொருமுறை நல்ல வருமானம் ஈட்டலாம்.

ரூ.18,000 மொத்தமாகக் கொடுக்க முடியாதவர்களுக்கு மாதம் ரூபாய்.500 வீதம் 40 மாதாந்தர தவணைகளில் செலுத்தும் தவணைமுறைத் திட்டமும் உண்டு.



(வளர்ந்த செடியின் அருகில் கலைமாமணி விக்கிரமன்)

இந்த புதிய திட்டத்தின்படி பண்ணை நிலங்கள் வாங்கும் அனைவருக்கும் ஐந்து ஆண்டுகளுக்கு வைரவிழா காணும் "கல்கி" வார இதழ்கள் அன்பளிப்பாக அனுப்பப்படும்.

மேலும் "இலக்கியப்பீடம்" எனும் உயர்தர மாத இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பப்படும்.

**மேலும் விவரங்களுக்கு.**



*தொடர்பு கொள்க :* அன்னை ஆர்ச்சர்ட்ஸ் (பி) லிட்.,
3 ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை–600 033.
தொலைபேசி : 371 2485
E-mail : manivikraman@yahoo.com
இப்படிக்கு வி.வி.எஸ். மணியன், இயக்குநர், அன்னை ஆர்ச்சர்ட்ஸ் (பி) லிட்.,

ரவுண்ட்ஸ் பாய்



# மேடையில் மிளிர்ந்த ரஹ்மான்!

★ இரண்டு கதாநாயகி படம் என்றாலே குடுமிப்பிடி சண்டைக்குக் குறைச்சல் இருக்காது. ஒரே படத்தில் மூன்று முன்னணிக் கதாநாயகிகள் என்றால் கத்திச் சண்டை அல்லவா நடக்கும்! 'த்ரீ ரோசஸ்' படத்தில் நிஜமாகவே கத்திச் சண்டை போட்டு, ஆஸ்திரேலிய வில்லன் நடிகரின் மூக்கை உடைத்து இரத்தம் வரும்படி செய்து விட்டார்களாம் ரம்பா, ஜோதிகா, லைலா மூவரும்! "எங்களுக்குள்ளே நிஜ சண்டை எதுவுமில்லே" என்கிறார் படத்தின் தயாரிப்பாளரான ரம்பா. "அடிக்கடித் தமிழ் சினிமாவிலிருந்து காணாமல் போயிடுறீங் களே...?" என்றால்... "பாலிவுட்டில் என்னை விட மாட்டேன் என்கிறார்கள்... இப்போதுகூட மூன்று ஹிந்திப் படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறேன்..." என்றவர் பேட்டியின் முடிவில், "பதிமூன்று வயதில் நடிக்க வந்தேன். இப்போ எனக்கு இருபத்து மூன்று வயதுதான் ஆகிறது..." என்று பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தார். கடவுளே! நடிகைகளுக்கு வி.ஆர்.எஸ் கிடையாதா?



● 'காதல் வைரஸ்' ரிச்சர்ட், ஸ்ரீதேவி

★ ரன் படம் ஓடும் தியேட்டர்களில், பகல் காட்சியின் போது உப்புமா, இடியாப்பம், இட்லி வாசனை அடிக்கிறதாம்...! உபயம், பள்ளி, கல்லூரி மாணவர்களின் கூட்டம். படத்தில் இடம் பெற்றிருந்த மணிரத்னம் பாணிக் காட்சிகளின் நேர்த்தியைப் பார்த்துவிட்டு, அவரது நிறுவனத்திலிருந்து கூட அடுத்த அழைப்பு வந்திருப்பதாகத் தகவல். ஆனால் 'ரன்'னை தெலுங்கில் ரீமேக் செய்து முடித்துவிட்டு, தமிழில் மீண்டும் ஒரு ஆக்ஷன் படம் தரப் போவதாகச் சொல்கிறார்கள், லிங்குவுக்கு நெருக்கமானவர்கள்.



● 'ரமணா' சிம்ரன், விஜய்காந்த்

படத்தோட தலைப்பை 'கன்' (gun) என்று வைக்காமலிருந்தா சரி!



★ போலீஸ் வேஷங் கட்டி விஜய்காந்துக்கே புளித்துப் போய்விட்டது போலும்; சிங்கப் பிடறி மாதிரி சிலுப்பிக் கொண்டிருக்கும் தமது தலைமுடியைக் குறைத்து, தோற்றத்தை எளிமையாக மாற்றி, ஒரு சாதுவான கல்லூரிப் பேராசிரியராக நடிக்கிறார் ரமணா படத்தில். "படத்தில் என்னோட கேரக்டர் அதிகம் பேசாது... ஆனால் என்னைச் சுத்தியிருக்கிற எல்லா கேரக்டர்களும் என்னைப் பற்றிப் பேசிக்கிட்டே இருப்பாங்க... ஒரு தனி மனிதன், தன்கிட்டே உள்ள குறையைத் தானே தீர்த்துக் கணும். படம் பார்க்கிற ஒவ்வொருத்தரும்... ஓ- நாம இப்படித் தான் வாழ்ந்திருக்கணும் என்று நினைக்க வைக்கிற கேரக்டர். நான் இதுவரை ஏற்காத பாத்திரம். இந்தப் படத்தில் நான் பறந்து பறந்து சண்டை போடலை'' என்று ரமணா பற்றி பாடமே நடத்துகிறார் விஜய்காந்த். படத்தில் நிஜ அரசியல் வசனம் பேசாமல் இருந்தாலே பெரிய ஆறுதல் போங்க..!





• லிங்குசாமி

★ ஜெமினி பட நாயகி கிரண் பற்றி ஒரு வெயிட்டான தகவல். அஜீத், பிரசாந்த், விக்ரம் என்று முன்னணி ஹீரோக்களோடு, வந்த வேகத்திலேயே நடிக்கும் வாய்ப்பு. தெலுங்கு, மலையாளப் பட உலகிலும் இதே போல ஆறடி, நூறு கிலோ எடையுள்ள பெரிய்ய ஹீரோக்களோடு நடிக்க வாய்ப்பு வருவதால், தினசரி ஆறுவேளை அசைவம் சாப்பிட்டு, உடல் எடையை ஏற வைத்துவிட்டாராம் கிரண்!

★ "நான்கு தலைமுறையா காதல் பாடல் எழுதறேன், இந்த டைரக்டர்கள் விடுவேனாங்கறாங்க. எல்லா டைரக்டர்கிட்டயும் சண்டை போடறேன், என்னை காதல் பாடல் எழுதச் சொல்லாதீங்க'ன்னு மல்லுக்கு நிற்கறேன். விடுவேனாங்கறாங்க" என்று 'காதல் வைரஸ்' கேசட் வெளியீட்டு விழாவில் அதிகமாகவே அலுத்துக்கொண்டார் கவிஞர் வாலி.

• த்ரீரோசஸ்... ஜோதிகா, ரம்பா, லைலா





• 'வின்னர்' பிரசாந்த், கிரண்

பாரதிராஜா தன் பங்குக்கு, "ஒரு படத்துல நடிய்யா, என் கடனையெல்லாம் அடைச்சுடுதேன்னு ஏ.ஆர்.ரஹ்மான்ட்ட சொல்லுதேன்... மாட்டேன்னுட்டான்'' என்று இசைப்புயலை ஏகத்துக்கு இளற, மேடையில் நெளிந்தார் ரஹ்மான்.

## -திருமாவளவன்



# "ஏன் தான் அரசியலுக்கு வந்தேனோ?"



"அரசியலில் ஏன்தான் இறங்கினோம்' என்று விரக்தியாக இருக்கிறது. நான் சிபாரிசு செய்கிறேன் என்பதற்காகவே வேலைகள் நிராகரிக்கப்படுகின்றன. எந்த ஓர் அரசு விழாவுக்கும் என்னை அழைப்பதில்லை" என்று நொந்து போகிறார் 'விடுதலைச் சிறுத்தைகள்' அமைப்பாளர் திருமாவளவன். "என்னுடைய மங்களூர் தொகுதி (கடலூர் மாவட்டம்) மிகவும் பின் தங்கிய தொகுதி. வளர்ச்சிப் பணிகளைச் செய்ய முயன்றால், ஆளும் கட்சி, மற்றும் மாவட்ட நிர்வாகத்திலிருந்து ஏகப்பட்ட தடைகள்.

"தொகுதி உறுப்பினரின் நிதி ஒதுக்கீட்டிலாவது, அவசியமான பணிகளைச் செய்யலாம் என்று பார்த்தால், அதிலும் "இந்திந்தப் பணிகளைச் செய்யுங்கள்" என்று கலெக்டர் லிஸ்ட் அனுப்புகிறார். ஆளும் கட்சியைத் தவிர மற்ற கட்சிகளைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்களுக்கும், என் அனுபவம்தான் என்று சொல்கிறார்கள். நான் பத்து நாட்களுக்கு ஒருமுறை தொகுதிக்குச் சென்று மக்களைச் சந்தித்து, மனுக்களை வாங்கி அரசுக்கு அனுப்பி வைக்கிறேன். நான் தொகுதிக்குள் போகும்போது, மரியாதை நிமித்தமாக ஒரு ஜூனியர் அதிகாரி கூட என்னைச் சந்திப்பதில்லை. இவற்றைப் பார்க்கும்போது, தேர்தல் அரசியலில் ஏன்தான் இறங்கினோம் என்று விரக்தியாக இருக்கிறது"

***"உதயசூரியன் சின்னத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டீர்கள்! ஆனால் இப்போது உங்களுக்கும் தி.மு.க.வுக்கும் தொடர்பிருக்கிறதா?"***

"கலைஞர் மேல் எப்போதும் எனக்கு மரியாதை உண்டு. ஆனால் திமுகவும், அ.திமுக வும் மக்களை ஏமாற்றுகின்றன என்பது என் கருத்து. திண்ணியம் மற்றும் கவுந்தன்பட்டி கிராமங்களில் தாழ்த்தப்பட்டோருக்கு எதிராகக் கொடுமைகள் நடத்தப்பட்டன. ஆனால் இந்தக் கட்சிகள் அந்தச் சம்பவங்களைக் கண்டித்து அறிக்கை கூட விடவில்லை. பாப்பாபட்டி, கீரிப்பட்டி, நாட்டார்மங்கலம் ஆகிய கிராம பஞ்சாயத்துத் தலைவர் பொறுப்பு தாழ்த்தப்பட்டோருக்கு ஒதுக்கப்பட்டும், அங்கு உயர் ஜாதி மக்களின் மிரட்டல் காரணமாக தாழ்த்தப்பட்டோர் தலைவராக வர முடியவில்லை. இதைத் தி.மு.க.வும், அ.தி.மு.க.வும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றன. இந்தக் கட்சிகள் தாழ்த்தப்பட்டோர் நலனுக்குப் பாடுபடுவதாகச் சொல்வதெல்லாம் வெற்று கோஷம்!"

ப்ரியன்

படம்: ராஜன்

# தாதாக்களுக்கு விழா!

● தாதாக்கள், ரௌடிகள் திருந்தி வாழ முடியாதா? 'சந்தர்ப்பம் தருகிறோம். சத்தியப் பிரமாணம் செய்யுங்கள். திருந்தி விட்டோம் என' என்று அறைகூவல் விடுத்தார் போலீஸ் கமிஷனர் சங்கிலியானா. ஏகப்பட்ட விண்ணப்பங்கள். கவனமாகப் பரிசீலித்து பத்து வருடங்களாக எந்தக் குற்றமும் செய்யாத நல்ல பிள்ளைகளாகி விட்ட தாதாக்களுக்கு விழா. ஜெகதாரஹள்ளி கிருஷ்ணப்பா என்றொரு தாதா. கொலை, கொள்ளை, மிரட்டல் என ஏகப்பட்ட வழக்குகள் இவன் மீது. ஐம்பது சகாக்களுடன் பந்தாவாக முன்னணியில் அமர்ந்தான். மைக்கை மிடுக்காக கையிலெடுத்துப் பேசினான். "நான் ஒரு போதும் ஏழையைக் கஷ்டப்படுத்தி காசு பறித்ததில்லை. எனக்கு எதிராகப் பல பொய் கேஸ்கள் ஜோடித்திருக்கிறார்கள். நானொரு நல்ல குடிமகன்..." என்றான். 215 ரௌடிகளுக்கு திருந்தி வாழ ஒரு விழா எடுத்து சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

● 'வஸ்த்ராபரணா' ஆடைகளுக்கான விழாவில் ரிப்பனைக் கட் செய்து தொடங்கி வைத்தது 'மயிலு!' பெங்களூரிலிருக்கும் ஓவியக் கல்லூரியான சித்ரகலா பரிஷத்தில் ஒரு வார சேலை விழா அமோகமாக நடைபெற்றது. பல வருடங்களுக்குப் பின் பெங்களூர் வருகிறேன். இனிமையான மக்கள், அழகான மக்கள்... என ஏகமாக சோப் போட்டார் ஸ்ரீதேவி. இவ்விழாவில் சேலைகளுக்கு ஏக கிராக்கி! கூட்டம் அலை மோதியது. பெண்களின் முகத்தில் ஏகக் களை. கூடவே வந்த ஆண்கள் முகம்தான் பறி கொடுத்தாற் போலிருந்தது!



• ஸ்ரீதேவி



• கரிஷ்மா

● "பெங்களூர் வெதர் எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு. இங்கிருக்கும் பப்-கல்சர் (pub culture) சுவாரஸ்யமாயிருக்கு. ஆனா எந்த பப்பிற்கும் இதுவரை போகவில்லை" என்றார் கரிஷ்மா கபூர். சமீபத்தில் பெங்களூரில் நடந்த 'லக்ஸ் தக் தினா தின்' ஷோவில் நடனமாடி ரசிகர்களைக் குளிர்வித்தார் கரிஷ்மா. அக்- 11 அமிதாபின் பிறந்த நாளன்று அவர் மகன் அபிஷேக்குடன் கரிஷ்மாவுக்குத் திருமண நிச்சயதார்த்தம். தங்கை கரீனா என்கிற புயல் சமீப காலமாக ஹிந்தி சினிமாவில் மையம் கொண்டுள்ளதால் கரிஷ்மா அடக்கிதான் வாசித்துக் கொண்டிருக்கிறார்.

- லதா சேகர், பெங்களூர்

தேவ மருந்து – 12

டாக்டர் எல்.மகாதேவன்




**வா**தம், பித்தம் பகுதிகளில் உங்கள் குணத்துக்கு நீங்களே தந்த மொத்த மதிப்பெண்கள், பட்டியலில் இருக்கின்றன அல்லவா? இதோ, கப பகுதியையும் படித்து, உங்கள் தன்மைக்குப் பொருந்தக் கூடியவற்றை '✓' செய்யுங்கள். இறுதியில் கூட்டிப் பார்த்தால் நீங்கள் எந்தவிதமான உடல் கூறு உடையவர் என்பது தெரியவரும்.

| | எனக்குப் பொருந்தாது | எப்போதாவது பொருந்தும் | சில சமயம் பொருந்தும் | அனேகமாக பொருந்தும் | மொத்த மதிப்பெண் |
|---|---|---|---|---|---|
| மதிப்பெண் | 0 | 1 | 2 | 3 | |
| **பாகம் 3, கபப் பிரக்ருதி** | | | | | |
| 1. நல்ல உடல்வாகு உள்ளது. | | | | | |
| 2. சற்றுகுண்டாக இருக்கிறேன் | | | | | |
| 3. எலும்புகள் கனமாக இருக்கின்றன | | | | | |
| 4. எடை சீக்கிரம் அதிகரித்துவிடுகிறது. | | | | | |
| 5. பெரிய அழகிய கண்கள், அடர்த்தியான புருவம் உள்ளது. | | | | | |
| 6. கனமான தோல் எண்ணெய் பசையுடன் சற்று குளிர்ந்து இருக்கும். | | | | | |
| 7. தோல் மெதுவாக, சீராக இருக்கும். மற்றவர்களை விட நீண்ட நேரம் குளிர்ந்து இருக்கும். | | | | | |
| 8. அடர்ந்த அலை அலையான மயிர், சிறிது எண்ணெய்ப் பசையுடன் கறுப்பாக இருக்கும். | | | | | |
| 9. அதிக புழுக்கமில்லாத எந்தச் சூழ்நிலையும் எனக்குப் பிடிக்கும். | | | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 10. நன்றாகச் சாப்பிடுவேன். நல்ல பசி உண்டு. ஒரு வேளை சாப்பிடாவிட்டாலும் பிரச்னை ஒன்றும் இல்லை. | | | | | |
| 11. மலம் ஒழுங்காக கழிக்கிறேன். கட்டியாக கனமாகப் போகிறது. | | | | | |
| 12. ஜீரணம் நன்றாயிருக்கிறது. சில சமயம்தான் சற்று மந்தம். | | | | | |
| 13. காலமுறைப்படி நான் உழைக்கிறேன். | | | | | |
| 14. என் பணி அல்லது திட்டங்களை சீராக நடத்திச் செல்கிறேன். | | | | | |
| 15. ஓய்வை நன்கு அனுபவிக்கிறேன் | | | | | |
| 16. உணவுக் கட்டுப்பாட்டைவிட உடற் பயிற்சிகளே என் எடையைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறது. | | | | | |
| 17. கருத்துக்களையும் எண்ணங்களையும் பொதுவாக மாற்றிக் கொள்ள மாட்டேன். | | | | | |
| 18. மோசமான நிலைகளைத் தவிர்த்துவிடுவேன். | | | | | |
| 19. கசப்பு, துவர்ப்பு, காரம் சுவையுள்ள உணவுகள் பிடிக்கும். | | | | | |
| 20. எனது உணர்ச்சிகள் நேரானவை. நம்பிக்கையானவை. விரைவில் மாறாதவை. | | | | | |
| 21. நல்ல சத்தான உணவுகளை விரும்புகிறேன். | | | | | |
| 22. உடல் நலமில்லாதபோது ஜலதோஷமோ கபமோ ஏற்படுகிறது. | | | | | |
| 23. நல்ல ஆழ்ந்த தூக்கம் வருகிறது. | | | | | |
| 24. பணத்தைச் சேமிப்பது சுலபமாயிருக்கிறது. | | | | | |
| 25. நகங்கள் வலுவாக இருக்கின்றன. | | | | | |
| 26. பொதுவாக குறைவாகவே வியர்க்கிறது. | | | | | |
| 27. அடிக்கடி தாகம் ஏற்படுவதில்லை | | | | | |
| 28. நாடித் துடிப்பு இலேசாகவும், மெதுவாகவும் இருக்கிறது. | | | | | |
| 29. கைகளும் கால்களும் குளிர்ச்சியாக இருக்கின்றன. | | | | | |
| 30. உடல் உறவில் ஸ்திரத்தன்மை உண்டு. | | | | | |
| மொத்த மதிப்பெண் | | | | | |

குறிப்பு : ஏதாவது ஒரு பாகத்திலுள்ள மதிப்பெண் மற்ற பாகத்தைவிட அதிகமாக இருந்தால் அந்த பாகம் சம்பந்தப்பட்ட பிரக்ருதி என்று அறியலாம்.

உடலமைப்புகள் மாறாது. ஆனால் பார்வைகள் மாறும். இப்போதுள்ள உங்கள் உடலமைப்பைக் கணக்கிட்டு உங்கள் பிரக்ருதியைத் திட்டமிடுங்கள்.

ஒவ்வொரு மனிதருக்கும் உள்ள உடலமைப்பும், மன நிலையும் அவருக்கு மட்டுமே உரித்தானவை. அதைப் போன்று இன்னொருவரிடம் இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. இந்த கணக்கிடுதல் உங்கள் நல் வாழ்க்கைக்காக ஓர் அஸ்திவாரம் அமைப்பதுதான். அஸ்திவாரம் பலமாக இருந்தால் கட்டடமும் உறுதியாக இருக்கும்.



**கேள்வி : 'மூலிகை மருந்துகளால்கூட பக்க விளைவு ஆபத்து உண்டு' என்று ஒரு பத்திரிகையில் படித்தேன். உண்மையா டாக்டர்? விளக்கம் தருவீர்களா?**

**- என். பாலகிருஷ்ணன், மதுரை**

***விடை : பொதுவாக மூலிகைகளினால் பக்க விளைவுகள் இல்லை. சில விஷத் தன்மையுள்ள மூலிகைகளை, சுத்தப்படுத்தாமலோ, உலோகக் கலவையுள்ள மருந்துகளை, தவறாகப் பயன்படுத்தினாலோ, சில நேரங்களில் பின் விளைவுகள் ஏற்பட வாய்ப்புண்டு.***



# பாட்டு ஹீரோ

பிரசன்னராவைப் பார்த்த மாத்திரத்தில், "நீங்க எந்தப் படத்தில் நடிக்கிறீங்க?" எனக் கேட்கத் தோன்றுகிறது. ஆனால் இந்த இருபத்தேழு வயது இளைஞர் இப்போது தமிழ் சினிமாவில் பிரபல பின்னணிப் பாடகர். டி. ராஜேந்தரின் 'காதல் அழிவதில்லை' படத்துக்காக "என் மனசில் நீயேதானா" என்ற பாடலைப் பாட, அது ஹிட்டாகிவிட்டதில் தலைகால் புரியவில்லையாம், இந்தக் கோவைக்காரருக்கு.



"பல்லடம் ஃப்ளூட் சஞ்சீவராவ் எனது தாத்தா. அவரது ஜீன்கள் நீயும் ஒரு பாடகனாகிவிடு என்று சிறுவயது முதலே சொல்லிக் கொண்டிருந்தன. எனது தந்தைக்கோ நான் வெளிநாடு சென்று பெரிய உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று விருப்பம். காதல் அழிவதில்லை பாடலைப் பாடுவதற்காக, நான் வெளிநாடு சென்று வந்ததில் எனது தந்தையின் விருப்பம் நிறைவேறிவிட்டது!" என்று நகைச்சுவைப் பொடி வைத்துப் பேசும் பிரசன்ன ராவ், ஏற்கெனவே மராட்டி, பெங்காலி, ஹிந்தி, தெலுங்கு, மலையாள மொழிகளில் பாடியிருக்கிறாராம். தற்போது தமிழில் 'அ', 'நதி', 'உயிரோசை', 'ஆகாஷம்' போன்ற அரை டஜன் படங்களில் பிஸியாகப் பாடிக் கொண்டிருக்கும் இவருக்கு ஹீரோ வாய்ப்பு வந்தால் நடிப்பாரா?

"முதலில் பாடுவதில் ஹீரோ என்று பெயரெடுக்க வேண்டும். பிறகு நல்ல வாய்ப்புகள் வந்தால் நடிப்பேன். அப்போதும், நடிப்புத் தொழில் நான் நேசிக்கும் பாடகனுக்குப் பங்கம் ஏற்படுத்தினால்... அடுத்த கணமே ஒப்பனையைக் கலைத்துவிடுவேன். மெய் மறந்து பாடி, ஆனந்தமாய் வாழும் வாழ்க்கைக்கு முன்னால் நடிகன் இமேஜ் எனக்குப் பெரிதாகத் தெரியவில்லை" என்று வெளிப்படையாகப் பேசும் பிரசன்னா, நெய்வேலி சந்தானகோபாலனின் சீடர்!

- ஸ்ரீசக்கரம்

# சிவகாமியின் சபதம்

## பதினான்காம் அத்தியாயம்

## "வாழி நீ மயிலே"

அயனரும் சிவகாமியும் அந்த விஸ்தாரமான சபா மண்டபத்துக்குள் பிரவேசித்தபோது மண்டபத்தில் வீற்றிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அவர்கள் மீது சென்றன. அளவில்லா வியப்பும் குதூகலமும் ஆவலும் அந்த ஈராயிரம் கண்களிலேயும் ததும்பின.

சபையில் அப்போது வீற்றிருந்தவர்களில் ஒருசிலர் ஒன்றரை வருஷத்துக்கு முன்னாலே அதே மண்டபத்தில் நடந்த சிவகாமியின் அரங்கேற்றத்தின்போது அங்கே பிரசன்னமாயிருந்தவர்கள்; மற்றும் அநேகர் அந்த அரங்கேற்றத்தைப் பற்றிக் கேள்வியுற்றிருந்தவர்கள். சிவகாமியின் அரங்கேற்றம் அந்த மண்டபத்தில் நடந்துகொண்டிருந்த சமயத்திலேதான் முதன்முதலில் புலிகேசியின் படையெடுப்பைப் பற்றி செய்தி கிடைத்ததென்பதையும், அதனால் அரங்கேற்றம் தடைப்பட்டதென்பதையும், அவர்கள் எல்லோரும் நினைவு கூர்ந்தார்கள். அந்தத் தடைக்குக் காரணமான புலிகேசிச் சக்கரவர்த்தி அச் சமயம் அந்தச் சபையில் வீற்றிருக்கும் அதிசயத்தை எண்ணியபோது அவர்கள் எல்லாருடைய கண்களும் மாறி மாறிச் சிவகாமியையும் புலிகேசியையும் நோக்குவனவாயின.

அயனரும் சிவகாமியும் சபா மண்டபத்துக்குள் பிரவேசித்து வரும் காட்சியைப் பார்த்தவுடன், எல்லாரையும் போல் வாதாபி மன்னரும் சிறிது நேரம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார். அஜந்தா மலையின் ஆழ்ந்த

**அமரர் கல்கி**

குகைக்குள்ளே அவர் கண்டிருந்த அற்புதமான வர்ண சித்திர உருவங்களில் ஒன்றுதான் உயிர் பெற்று எழுந்து தம் கண் முன்னால் நடந்து வருகிறதோ என்று அவருக்குத் தோன்றிற்று. சௌந்தரியவதிகளான எத்தனையோ பெண்களை அவர் பார்த்ததுண்டு. ஆனால், இம் மாதிரி நடையழகு வாய்ந்த பெண்களைப் பார்த்தது கிடையாது. சிவகாமி நடந்து வந்தபோது அவளுடைய பாதங்கள் பூமியில் பட்டனவோ படவில்லையோ என்று தெரியாதபடி நடந்தாள். சங்கீதக் கலையின் உயிர்த் தத்துவத்தை உணர்ந்து புலவன் பாடும்போது இசை எப்படி ஒவ்வொரு ஸ்வரமும் தனித்தனியாகவும் அதே சமயத்தில் ஒன்றோடொன்று இழைந்தும் கேட்கப்படுகிறதோ, அது போல் சிவகாமி நடந்த போது, அவள் அடிகள் எடுத்து வைக்கிறாளோ அல்லது பூமிதான் அவளுடைய பாதங்களுக்குக் கீழே நழுவிச் சென்று கொண்டிருக்கிறதோ என்று தோன்றியது. சபா மண்டபத்திலிருந்த அத்தனை பேருடைய கண்களுக்கும் சிந்தனைக்கும் வேலை கொடுத்துக் கொண்டு பிரவேசித்த சிவகாமியோ அவ்விதம் எல்லோருடைய கவனத்துக்கும் கண் நோக்குக்கும் தான் ஆளாகியிருப்பதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. உயர் குலத்துப் பெண்டிருக்குரிய இயற்கையான நாணத்தினால் சிறிதளவு தலை குனிந்த வண்ணம் அவள் நடந்து வந்தாள். அவளுடைய உள்ளத்தில் அல்லும் பகலும் குடி கொண்டிருந்த கம்பீர முகத்துக்குரியவர் அந்தச் சபையில் எங்கே இருக்கிறார் என்று தெரிந்து கொள்ள அவளுக்கு அளவற்ற ஆவல் இருந்தது. எனினும், அந்த ஆவலைப் பெருமுயற்சி செய்து அவள் அடக்கிக் கொண்டு இயல்பாக எதிரே பார்த்துக்கொண்டு நடந்தாள்.

இரண்டு சக்கரவர்த்திகளும் வீற்றிருந்த இடத்துக்கு அருகில் வந்ததும், ஆயனர் கும்பிட்டு நிற்க, சிவகாமி நமஸ்கரித்து நின்றாள்.

மகேந்திர பல்லவர், "ஆயனரே, உமது புதல்வி சிவகாமியின் நாட்டியக் கலைத் திறமையின் புகழானது நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி வாதாபிச் சக்கரவர்த்தியின் காதுவரையில் எட்டியிருக்கிறது. இதோ இன்று நமது அருமைச் சிநேகிதராக வீற்றிருக்கும் சத்யாச்ரய புலிகேசி மன்னர் சிவகாமியின் நடனத்தைப் பார்க்க விரும்புகிறார். அதற்காகவே உங்களை இவ்வளவு அவசரமாகக் கூட்டி வரச் செய்தேன். சிவகாமியினால் இப்போது உடனே நடனம் ஆட முடியுமா? உம்முடைய விருப்பம் என்ன?" என்று வினாவியபோது, ஆயனர், "மகாப் பிரபு! தங்களுடைய கட்டளை எதுவோ, அது தான் என்னுடைய விருப்பம். சிவகாமிக்கு, அவளுடைய கலைத் திறமையைக் காட்டுவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த சபையும் சந்தர்ப்பமும் எங்கே கிடைக்கப் போகிறது? இரண்டு மாபெருஞ் சக்கரவர்த்திகளும் இரண்டு சூரியர்களைப் போலவும் இரண்டு தேவேந்திரர்களைப் போலவும் ஏக காலத்தில் கூடியிருக்கிறீர்கள்!" என்று சொல்லிவிட்டுச் சிவகாமியை நோக்கினார்.

முதலில் மகேந்திர பல்லவர் பேசியபோது, சிவகாமி சிறிது தலைநிமிர்ந்து அரைக்கண்ணால் வாதாபிச் சக்கரவர்த்தியைப் பார்த்தாள். பிறகு, அவளுடைய கண்கள் கட்டுக்காவல்களை உடைத்துக்கொண்டு, இரண்டு சக்கரவர்த்திகளின் சிம்மாசனங்களையும் சுற்றிச் சிறிது தூரத்துக்கு வட்டமிட்டன. ஆனால் அவை அடைந்தது ஏமாற்றந்தான். சிவகாமியின் கண்கள் தேடிய வீர சௌந்தரிய வதனம் அங்கே தென்படவில்லை. "ஆ! அவர் எங்கே? ஏன் சக்கரவர்த்திக்கு அருகில் அவர் காணப்படவில்லை?" என்று அவளுடைய உள்ளம் பதைபதைத்தது. சில கண நேரத்திற்குள் பற்பல எண்ணங்கள் மின்னலைப் போல் தோன்றி மறைந்தன. ஏதாவது அவருக்கு விபத்து நேர்ந்திருக்

குமோ? இராது, இராது, இராது. அப்படி இருந்தால், மகேந்திர பல்லவர் இந்த வைபவத்தை நடத்துவாரா?

"மிக்க சந்தோஷம் ஆயனரே! அதோ வாத்தியக் கோஷ்டியும் ஆயத்தமாயிருக்கிறது. உங்களுக்காகவே இந்தச் சபையை இவ்வளவு நேரம் வளர்த்திக் கொண்டிருந்தோம்!" என்றார் மகேந்திர பல்லவர்.



சிவகாமி தான் நின்ற இடத்திலிருந்து நடன வட்டத்துக்குப் போகத் திரும்பியபோது, மீண்டும் அவளுடைய கண்கள் ஒரு முறை சுற்றிச் சுழன்றன. அப்போது அவளுடைய பார்வை தற்செயலாகப் புலிகேசியின் முகத்தில் விழுந்தது. வெறித்து நோக்கிய புலிகேசியின் கொடுங் கண்களைச் சந்தித்த போது திடீரென்று வீசிய வாடைக் காற்றில் அடிபட்ட மல்லிகைக் கொடியைப் போல அவளுடைய உள்ளம், உடம்பு எல்லாம் சில்லிட்டு நடுநடுங்கின. இது ஒரு விநாடி நேரந்தான். அகாரணமாகத் தோன்றிய அந்த உணர்ச்சியை எப்படியோ சிவகாமி சமாளித்துக் கொண்டு நடன வட்டத்தை நோக்கி நடந்தாள். அப்போது இன்னதென்று சொல்ல முடியாத அருவமான நிழல் போன்ற

ஞாபகம் ஒன்று அவளைப் பின் தொடர்ந்து சென்றது.

நடன வட்டத்தில் சென்று நின்றதும் சிவகாமி மேற்கூறிய நிழல் ஞாபகத்தை உதறித் தள்ளிவிட்டு ஆட்டத்துக்கு ஆயத்தமானாள். அப்போது அவள் தன் னடக்கத்துக்குப் பங்கமில்லாமல் அந்த மகாசபையின் நாலா புறத்திலும் கண் ணைச் சுழற்றிப் பார்த்தல் சாத்தியமா யிருந்தது. மண்டபத்தின் மேல் மச்சு மாடங்களிலே சக்கரவர்த்தினியும் மற்ற அந்தப்புரத்து மாதர்களும் வீற்றிருப்பது அவள் பார்வைக்குப் புலனாயிற்று. முன் னொரு நாள் அதே மண்டபத்தில் நடந்த அரங்கேற்றத்தின்போது இன்று போலவே மாமல்லரைக் காணாமல் முதலில் தான் ஏமாற்றமடைந்ததும், பிற்பாடு அவர் தாய்மார்களுடன் மேல் மாடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்ததாகத் தெரியப் படுத்தியதும் நினைவு வந்தன. இன்றைக் கும் அவர் அவ்வாறே தன் கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு மறைவான இடத் திலிருந்து தன்னுடைய நடனத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இந்த எண்ணம் ஏற்பட்டதும் இதற்கு முன் அவளுக்கு ஏற்பட்டிருந்த ஏமாற்றம், சோர்வு, மனக் கலக்கம், நடுக் கம் எல்லாம் மாயமாய் மறைந்து போயின. நடனமும் உடனே ஆரம்பமாயிற்று.

நடனம் ஆரம்பமாகிச் சிறிது நேரத்துக் கெல்லாம் அச் சபையில் இருந்தவர்கள் எல்லாம், அது ஒரு இராஜ சபை என் பதையும், அதில் ஒரு பெண் நடனமாடு கிறாள் என்பதையும், தாங்கள் அங்கே யிருந்து அதைப் பார்க்கிறோம் என்பதை யும் மறந்தே போனார்கள். இந்த ஜட உல கத்தையே விட்டு விட்டு அனைவரும் ஒரு புதிய ஆனந்தக் கனவுலகத்துக்கே போய் விட்டார்கள்.

நடனம் ஆரம்பமாகும் சமயத் தில் சிவகாமி தெளிந்த தன் னுணர்ச்சி பெற்றிருந்தாள். தன் வாழ்க்கையிலேயே அது ஒரு முக்கியமான தினம் என்றும், அன்று தான் ஆடப் போகும் நடனம் தன் வாழ்க்கையில் ஒரு முக்கிய சம்பவம் என்றும் உணர்ந்திருந்தாள்.

கன்னி சிவகாமியின் உள்ளத்தில் அலை மோதிக் கொண்டிருந்த இரு பேரு ணர்ச்சிகளில் ஒன்று மாமல்லர் மேல் கொண்ட காதல் என்பதையும், இன் னொன்று நடனக் கலை மீது அவளுக் கிருந்த பிரேமை என்பதையும் முன்னமே பார்த்திருக்கிறோம்.

இப்போது இங்கே கூடியிருப்பது போன்ற ஒரு மகா சபை தனது கலைத் திறமையைக் காட்டுவதற்குக் கிடைப்பது மிகவும் அரிது என்பதை ஆயனரைப் போல் அவளும் உணர்ந்திருந்தாள்.

அன்றியும் சிவகாமிக்குத் தன்னுடைய கலைத் திறமை முழுவதையும் அந்தச் சபையில் காட்ட வேண்டுமென்ற ஊக் கம் ஏற்படுவதற்கு இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது.

மகேந்திர பல்லவர் மற்ற விஷயங் களில் எவ்வளவு கடின சித்தராயிருந்த போதிலும், கலைகளுக்கு மனம் உருகக் கூடியவர். தன் கலைத் திறமையினால் அவருடைய நன் மதிப்பைக் கவர வேண் டும்; தான் மாமல்லரை மணந்து கொள் வதற்கு அவர் தடை சொல்லாதபடி செய்ய வேண்டும். வயிர நெஞ்சமுள்ள ஒரு மகா சக்கரவர்த்தியின் மனத்தை மாற்றித் தன் விருப்பத்துக்கிணங்கும்படி செய்வதற்குத் தன்னிடம் உள்ள ஒரே ஆயுதம் நடனக் கலையே யல்லவா?

எனவே, அன்றைக்குத் தன்னுடைய நடனம் பரத நாட்டியத்தின் சரித்திரத் திலேயே ஓர் அற்புத சம்பவமாயிருக்க வேண்டுமென்று சிவகாமி சங்கற்பம் செய்துகொண்டாள்.

ஆனால் இத்தகைய தன்னுணர்ச்சி யெல்லாம், சிவகாமி ஆட்டத்தைத் தொடங்கும் வரையிலேதான் இருந்தது. ஆட்டம் ஆரம்பமாயிற்றோ, இல் லையோ, இத்தனை காலமும் சிவகாமி யின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த கலை உணர்ச்சியானது பொங்கிப் பெரு கத் தொடங்கியது. சிவகாமி தான் என் னும் உணர்ச்சி அற்றுக் கலை வடிவ மாகவே மாறிவிட்டாள்.

பின்னர் சிவகாமி நடனம் ஆட வில்லை; நடனக் கலையானது அவளை ஆட்கொண்டு ஆட்டுவித்தது.

சிவகாமியின் உள்ளமானது நாட்டியக் கலையின் அம்சங்களாகிற தாளங்களை யும், ஜதிகளையும், அடைவுகளையும், தீர்மானங்களையும் பற்றி எண்ணவில்லை. அந்தத் தாளங்கள், ஜதிகள், அடைவுகள், தீர்மானங்கள் எல்லாம், அவை அவை அந்தந்த இடத்தில் ஓடி வந்து சிவகாமிக் குச் சேவை செய்தன.

சிவகாமியின் உள்ளம் ஆனந்த வெளி யிலே மிதந்து கொண்டிருந்தது. அவளு டைய தேகமோ எல்லையற்ற ஆனந்த வெள்ளத்திலே அனாயாசமாக மிதந்து கொண்டிருந்தது.

பார்த்துக் கொண்டிருந்த சபையோர் களும் ஆனந்த சாகரத்தில் மிதக்கலா யினர். பரத நாட்டிய வினிகையில் முதற் பகுதியான 'நிருத்தம்' முடிவடைந்த போதுதான் சபையோர் தாங்கள் சஞ் சரித்த ஆனந்தக் கனவு லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தனர்.

அப்போது சபையின் நானா புறங் களிலிருந்தும் பிரமாதமான கரகோஷம் எழுந்தது. அவ்விதம் கரகோஷம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தவர்கள் இரு சக்கரவர்த்திகளும் கூடத்தான்.

நடனம் ஆரம்பிப்பதற்கு முன் னால், சிவகாமியும் ஆயனரும் மகேந்திர சக்கரவர்த்தியிடம் கட்டளை பெற்றுக்கொண்டு நடன வட்டத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது, வாதாபி மன்னர் மகேந்திர பல்லவரைப் பார்த்து, "இதென்ன? இவர்களுக்கு இவ்வளவு மரி யாதை செய்கிறீர்களே? எங்கள் நாட்டிலே சாட்டையினால் அடித்து நடனம் ஆடச் சொல்வோம்!" என்றார்.

"சத்யாச்ரயா! எங்கள் நாட்டில் அப் படியில்லை. இங்கே கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் நாங்கள் மிக மரி யாதை செய்கிறோம். இராஜ்யம் ஆளும் மன்னர்களையும் சக்கரவர்த்திகளையும் போலவே கலை உலகிலும் இங்கே அர சர்களும் சக்கரவர்த்திகளும் உண்டு. 'சிற்ப சக்கரவர்த்தி', 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டங்கள் அளிக்கிறோம். ஆயனர் 'சிற்ப சக்கரவர்த்தி' என்ற பட்டம் பெற்றவர். இராஜ்யம் ஆளும் சக்கரவர்த்திகளுக் குச் செய்யும் மரியாதையை மக் கள் இவருக்கும் செய்கிறார்கள்'' என் றார்.

''அழகாய்த்தானிருக்கிறது உங்கள் நாட்டின் வழக்கம்!'' என்று பரிகசித்தார் வாதாபி மன்னர்.

சிவகாமியின் நிருத்தம் முடிந்தவுடனே வாதாபிச் சக்கரவர்த்தியும் மற்றவர் களைப் போல் கரகோஷத்தில் ஈடுபட்ட தைக் கண்ட மகேந்திர பல்லவர், "இப் போது என்ன சொல்கிறீர்கள்? கலைஞர் களுக்கு மரியாதை செய்வது பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டீர்களா?'' என்று கேட்டார்.

"நடனம் அற்புதமாய்த்தானிருக்கிறது. இம் மாதிரி நான் பார்த்ததேயில்லை. ஆனாலும்...'' என்று கூறி இடையில் நிறுத்திவிட்டுப் புலிகேசி ஏதோ யோச னையில் ஆழ்ந்தார்.

அன்று அபிநயத்துக்குச் சிவ காமி முதன்முதலாக எடுத் துக் கொண்ட பாடல் செந் தமிழ்நாட்டின் ஆதி தேவ தையான வேலனைப் பற்றியது.

வேலன் தன்னிடம் பக்தி கொண்ட பெண்ணுக்கு, ''நான் திரும்ப வந்து உன்னை ஆட்கொள்கிறேன்!'' என்று வேலின் மீது ஆணையிட்டு வாக்களித் திருக்கிறான். ஆனால் அவ் வாக் குறுதியை அவன் நிறைவேற்றவில்லை. அதனால் அந்தப் பெண் ஏமாற்றமும் மனத்துயரமும் அடைகிறாள். அந்த நிலைமையிலும் வேலனிடத்திலே கோபங் கொள்ளவோ, அவன் மீது குறை சொல்லவோ அவளுக்கு விருப்பமில்லை. எனவே, குற்றத்தையெல்லாம் வேலனு டைய வாகனமாகிய மயிலின் மீது போடு கிறாள். மயிலை நிந்திக்கிறாள்; கோபிக் கிறாள்; பலவிதமாகவும் இடித்துக் காட்டு கிறாள். இந்தக் காலத்தில், 'ஆனந்த பைரவி' என்றும் வழங்கும் பழமையான ராகத்தில், நடனத்துக்கும் அபிநயத் துக்கும் ஏற்ற தாளத்துடன் அமைந்த பாடல் பின் வருமாறு:

## அருள்வாக்கு

உலகத்தில் நாம் காண்கிற அன்பை மூன்று வகையாகப் பிரிக்கலாம். மகான்கள், யோக்கியர்கள், சத்திய சந்தர்கள், பரோப காரிகள், ஞானிகள், அநுக்கிரக சக்தி வாய்ந்த உத்தமர்கள் ஆகியோரிடம் அவர்களது குணத்துக்காக அன்பு ஏற்படுகிறது. பந்துக்களுடனும் சிநேகிதர்களுடனும் சேர்ந்து பழகுவதால் அவர்களிடம் ஒருவித அன்பு உண்டாகிறது. மூன்றாவது, ஒரு காரியத்துக்காக, லாபத்துக்காகச் சிலரிடம் அன்பு வைக்கிறோம். உதாரணமாக வியாபாரத்தில் சகாயம் செய்வார் என்பதற்காக ஒரு தனிகரிடம் அன்பு பாராட்டுகிறோம். சம்பளம் கொடுக்கிறார் என்பதால் யஜமானரிடம் அன்பாக இருக்கிறோம்.

இந்த மூவகை அன்பும் உண்மையானதல்ல; சாசுவதமானதல்ல. யஜமானர், "நீ போய் விடு" என்றால், உடனேயே நம் அன்பும் போய் விடும். பழகினவர்கள் தூர தேசம் போனாலோ, காலகதி அடைந்தாலோ, வேறுவிதத்தில் அவர்களுடன் பழக்கம் போய் விட்டாலோ நாளடைவில் அன்பும் போய் விடுகிறது. முதலில் பிரிவின் போது அழுத அழுகை, அப்புறம் எப்படியோ மறைந்து விடுகிறது. உண்மையான அன்பானால், அந்த அழுகை என்றைக்கும் அப்படியேதானே இருக்க வேண்டும்? உத்தம புருஷர்களான மகான்களிடம் வைக்கும் அன்புகூட நிரந்தரமில்லைதான். மகானிடம் உத்தம குணம் குறைந்தால் - அல்லது குறைந்ததாக நமக்குத் தோன்றினாலே போதும் - அவரிடம் வைத்த அன்பும் குறைந்து விடுகிறது.

மூவகை அன்பும் காரணத்தால் ஏற்பட்டது. எனவேதான் அவை நிரந்தரமாக இருக்கவில்லை. உத்தம புருஷர்களிடமும் இன்ன குணம் இருக்கிறது என்பதால், அந்தக் குணத்தைக் காரணமாகக் கொண்டே அன்பு வைக்கிறோம். அதோடு அவர்கள் நம்மை உத்தாரணம் செய்வார்கள் (உய்விப்பார்கள்) என்ற சுய காரியமும் உள்ளூர இருக்கவே செய்யும்.



இப்படியெல்லாம் எக்காரணமும் வியாஜமும் இன்றிப் பிரியமாக இருப்பதுதான் உண்மை அன்பு. ஒருவர் நம்மிடம் நெருங்கிப் பழகாவிட்டாலும் சரி, அவருக்கு ஆத்ம குணங்களும் அநுக்கிரக சக்தியும் இல்லாவிட்டாலும் சரி, அவரால் நமக்கு எந்தக் காரியமும் ஆகாவிட்டாலும் சரி - அப்போதும் நாம் அவரிடம் மாறாத அன்பு வைத்தால் அதுவே உண்மையான அன்பு.

அப்படிப்பட்ட அன்பு யாருக்காவது இருக்கிறதா? ஒரே ஒருவருக்கு இருக்கிறது. ஸ்வாமிதான் அந்த ஒரே ஒருவர்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

மறவேன் மறவே னென்று
வேலின்மேல் ஆணையிட்ட
மன்னரும் மறப்பாரோ
- நீல மயிலே! (மற)
உருகி உருகி உள்ளம்
அவரை நினைவதையும்
உயிரும் கரைவதையும்
- அறியாரோ மயிலே? (மற)
அன்பர் வரவு நோக்கி
இங்கு நான் காத்திருக்க
அன்னநடை பயில்வாயோ
- வண்ண மயிலே
பெம்மான் உன் மேலே
வரும் பெருமிதம் தலைக்கேறிப்
பாதையை மறந்தாயோ
- பேதை மயிலே

வன்மம் மனதில் கொண்டு
வஞ்சம் தீர்க்க நினைந்து
வழியில் உறங்கினாயோ
- வாழி நீ மயிலே! (மற)
தன்னிகரில்லாதான் தனயர்பால்
மையல் கொண்ட
மங்கைமீ திரங்காயோ
- தங்க மயிலே!
சொன்னாலும் நீ அறியாய்
சொந்த அறிவுமில்லாய்
உன்னை நொந் தாவதென்ன?
- வன்கண் மயிலே!
மன்னும் கரிபரிகள் புவியில்
பல இருக்க
உன்னை ஊர்தியாய்க் கொண்டார்
- தன்னையே நோகவேணும் (மற)

(தொடரும்)

# எங்கிருந்து வந்தாயடி...!





**க**னிஹா வீட்டுத் தொலைபேசிக்கு இப்போது தொண்டைவலி. "கனிஹா இருக்காங்களா?! ஈஸ்வரி இருக்காங்களா?!" என்று ஃபைவ் ஸ்டார் படம் வெளியான தினத்திலிருந்து தினசரி ஐம்பதுக்கும் குறையாத அழைப்புக்கள். கனிஹா ஃபைவ் ஸ்டார் படத்தின் கதாநாயகி சரி. பிறகு அந்த ஈஸ்வரி யார்? அந்தப் படத்தில் கனிஹா ஏற்று நடித்திருக்கும் பாத்திரத்தின் பெயர். எதிர்பார்ப்பு, ஏமாற்றம், காதல், சோகம், வீரம், தன்னம்பிக்கை இப்படி ஏகப்பட்ட எமோஷன்களை முதல் படத்திலேயே அநாயாசமாக வெளிப்படுத்தி ஈஸ்வரி பாத்திரத்தைத் துடிப்போடு தூக்கி நிறுத்திவிட்டதில்தான் கனிஹாவுக்குப் பாராட்டுகள் குவிகின்றன. இவரும் மும்பை இறக்குமதியாகத்தான் இருப்பார் என்ற முடிவோடு கனிஹா வீட்டுக் கதவைத் தட்டினால்... "நான் அசல் மதுரைப் பொண்ணு" என்று அதிர்ச்சி தருகிறார்.

"நான் மதுரை டி.வி.எஸ். ஸ்கூல் மாணவி. 97.6 சதவிகிதம் ப்ளஸ்டூவில் மார்க் வாங்கினேன்.

பிலானி இன்ஸ்டிடியூட்டில் பி.ஈ. மெக்கானிக்கல் இஞ்ஜினியரிங் படிக்க இடம் கிடைச்சது. உடனே மும்பைக்கு பேக்அப். விடுமுறை சமயத்துல மட்டும் தமிழ்நாட்டுக்கு விசிட். அப்படி வரும்போது, நான் கலந்துகிட்டு பாடறதுக்காக அம்மா, பாப்ஷோ ஏற்பாடு பண்ணுவாங்க. படிப்பு, பாட்டு இரண்டும் குழப்பிடாமல் பார்த்துக்கிட்டேன். அப்படித்தான் போன வருஷம் விடுமுறைக்கு வந்தப்போ, மிஸ் சென்னை போட்டிக்கு 'விபா' லேர்ந்து பாடக் கூப்பிட்டாங்க. போனேன். போன இடத்தில் ஒரு திருப்பம். 'மிஸ் சென்னை'ப் போட்டியில் கலந்துக்க வேண்டிய பன்னிரண்டு பேரில் ஒரு பொண்ணு ஆப்சென்ட். உடனே பாடப்போன என்னை, உயரமும் எடையும் இருக்குன்னு சொல்லி 'மிஸ் சென்னை'





போட்டியிலே நடக்க விட்டுட்டாங்க. என்னாலேயே நம்ப முடியலே.. போட்டியிலே நான் ரன்னர் அப். ப்ளஸ் 'மிஸ் போட்டோஜெனிக்கா' தேர்வானேன். இந்தச் செய்தியும் என்னோட படமும் பத்திரிகைகளில் வந்ததைப் பார்த்துட்டு ஷங்கர், தங்கர்பச்சான், மணிரத்னம் கம்பெனின்னு ஏகப்பட்ட அழைப்பு. ஆனால் எதையும் என்னாலே ஏத்துக்க முடியலே. ஏன்னா அது செமஸ்டர் நேரம். சினிமா வாய்ப்பு போனது போனது தான். சோகத்தோடு மும்பைக்குப் போய் பரீட்சைய முடிச்சுட்டு விடுமுறைக்குத் திரும்பினேன். பார்த்தால்... ஈஸ்வரி கேரக்டருக்கு நான்தான் பொருத்தமா இருப்பேன்னு பிடிவாதமாக எனக்காக வெயிட் பண்ணிகிட்டிருக்கார் இயக்குனர் சுசி கணேசன்.

மணிரத்னம் பேனர்லே நடிக்கிறோம்ன்னு எனக்கும் குஷி. இப்போ ஃபோன் பண்ற எல்லா ரசிகர்களும் என்னை ஈஸ்வரியா பார்க்குறாங்க. எங்கிருந்து வந்தாயடின்னு செல்லமா பாட்டுப்பாடி கிண்டல் பண்றாங்க" என்று மூச்சிறைக்கப் பேசுகிற கனிஹா, ஃபைவ் ஸ்டார் படத்தில் "எங்களுக்கு நாங்கள்தானே" என்ற தீம் பாடலையும் பாடியிருக்கிறார்.

'ஃபைவ் ஸ்டார்' படத்தின் க்ளைமாக்ஸ் காட்சிக்காக, கையில் வாள்ஏந்தி, கண்களில் அனல்பறக்க இடைவெளி விடாமல் மூச்சுமுட்ட மூன்று நிமிடம் வசனம் பேசி, ஒரே டேக்கில் ஓ.கே. வாங்கியதைப் பார்த்து வியந்துபோன சீனியர் நடிகர் விஜயன், "பராசக்தி படத்து சிவாஜி மாதிரியில்லே அசத்திட்டே" என்று பாராட்டியதைச் சொல்லிச் சொல்லிச் சந்தோஷப்படுகிறார் கனிஹா. "சினிமா ரொம்ப மோசமான துறைன்னு நிறையப் பேர் என்னைப் பயமுறுத்தினாங்க. அதெல்லாம் சுத்தப் பேத்தல்ன்னு இப்போ புரியுது" என்று ஆஃப் த ரெக்கார்ட்ஸ் விஷயங்களை யெல்லாம் துடுக்குத்தனமாக பேசுகிறார் தனது டெடி பொம்மையைச் செல்லமாய் வருடிக் கொண்டே.

"கனிஹாவுக்கு ஃபைவ் ஸ்டார் படத்தில் கிடைக்கிற மாதிரி ரயில் தோழர்கள் யாராவது கிடைத்திருக்கிறார்களா? "பிலானிக்கு டிரெயின்லேதான் போவேன். ஆனால் ஜமாகப் போயிட்டு ஜமாக வந்துருவோம். அதனால் அப்படியொரு பிரெண்ட் கிடைக்கலே. இப்போல்லாம் விமானம்தான். விமானத்துலே யாராவது பிரெண்ட் கிடைச்சா உங்களுக்குக் கட்டாயம் சொல்றேன்" என்று சொல்லும் கனிஹாவுக்கு பாரதிராஜாவின் 'ஈர நிலம்' படத்தில் நடிக்க அழைப்பு வந்திருக்கிறது.

சந்திப்பு : ஜே.ஜெ.

அட்டை, படங்கள் : டிஜிட்டல் சண்முகம்

# ஹெட்மாஸ்டர்

"**சா**ப்பாட்டு இடைவேளையில் மணியடித்ததும் உடனே சாப்பாட்டுக்குப் போய் விட முடியாது. பதினைந்து நிமிஷம் பிரார்த்தனை சுலோகங்கள் சொல்லியாக வேண்டும்" என்று தங்கள் ஹெட்மாஸ்டர் சீனிவாசாச்சார்யாரின் பக்தி மார்க்கத்திலான கண்டிப்பை நினைவு கூர்கிறார் எஸ். விஸ்வநாதன். மத்திய அரசின் ஆர்டினன்ஸ் தொழிற்சாலையின் உயர் பதவி வகித்து ஓய்வு பெற்றவர் இவர்.

"படிப்பு என்பதில் நேர்மையையும் சேர்த்துப் பார்க்கணும். கல்வி உன்னோட இயல்பான திறமைகளை அமுக்தி நாசம் பண்ணிடக் கூடாது" என்பாராம். ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி ஆர். ராஜாமணி சொல்கிறார், கதை கட்டுரைகள் எழுதும் ஆர்வமுடைய ராஜாமணியை வகைப் படுத்தி, பாரதி பாடல் போட்டி, க்விஸ் எல்லாவற்றுக்கும் அனுப்பி வைத்திருப்பதையும் சொல்கிறார். "எழுதிண்டே இரு- பத்திரிகைக்காரா நிறையத் திருப்பி அனுப்புவா.. எழுதிண்டே இரு. அப்புறம் பயன்தரும்" என்பாராம்.

குறிப்பு வைத்துக் கொள்ளாமல் சரளமாகப் பேசுவதற்கு ஊக்கமளித்த ஹெட்மாஸ்டரைப் பற்றியும், அந்த நாட்களில் தமிழிலேயே அறிவியல் பாடங்களையெல்லாம் படித்ததையும் நினைவு கூர்கிறார் பத்மபூஷண் கே.சந்தானம். புது டெல்லியில் உள்ள 'டிபென்ஸ் ஸ்டடீஸ் அண்ட் அனாலிஸிஸ் கல்வி நிறுவன இயக்குநர் இவர்.

"எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு நாட்களில் காலை ஐந்து மணிக்கே பள்ளிக் கூடத்துக்கு வந்து, மாணவர்களுக்கு முக்கியமான பாடங்களைச் சொல்லித் தந்து ஊக்கப்படுத்துவார். "அப்போ எல்லாம் 'டியூஷன்' கிடையாது. ஆசிரியர்களே ஸ்பெஷல்

• சீனிவாசாச்சார்யார்



கோச்சிங் தருவார்கள்" என்று சொன்னார் மாநகராட்சியில் பொறியாளராக இருந்து ஓய்வு பெற்ற எம்.ஆர்.தாமோதரன்.

**'மா**ம்பலம் மஹரிஷி' என்கிற மரியாதைக்குரிய பெயரோடு இப்போது நூறாண்டு காண்கிற சீனிவாசாச்சாரியாரிடம் ராமகிருஷ்ணா மிஷன் மெயின் பள்ளியிலும், வடக்குப் பள்ளியிலும் பயின்ற பலர் இப்போது மிக உயர்வான நிலைகளில் பெருமையோடு இருந்து விட்டு, இப்போது அமைதியாக ஓய்வு பெற்று வாழ்கிறார்கள்.

'ஹெட்மாஸ்டர்' என்று இன்றைக்கும் மரியாதையோடும், நன்றி கலந்த நெகிழ்ச்சியோடும் குறிப்பிட்டுப் பேசும் நூற்றுக்கு மேற்பட்ட பலர், தங்கள் 'ஸார்'ின் நூறாவது பிறந்த நாள் விழாவுக்கு வந்து அவரிடம் வாழ்த்துப் பெற்ற காட்சி மனதுக்கு உற்சாகமாக இருந்தது.



இந்த வயதிலும், ஸ்ரீநிவாசாச்சார் யாருக்கு கல்வி, பண்பாடு பற்றித்தான் கவலை. மாம்பலம் கோதண்டராமர் தெருவில், அஹோபில மடம் ஓரியண்டல் பள்ளியை ஒட்டிய ஆசிரமம் மாதிரியான வீட்டில், ஐம்பதாண்டுகளுக்கு மேலாக அமைதியாக வாழ்ந்து வருகிறார். அஹோபில மடம் முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு பள்ளி ஆரம்பிக்க வேண்டும் என்று எண்ணியபோது, தம்முடைய நிலத்தில் ஒருபகுதியை அதற்காகத் தந்திருக்கிறார். ராமகிருஷ்ணா பள்ளியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு 'ஹெட்மாஸ்டர்'ரின் முழு ஈடுபாடும் அஹோபில மட சம்ஸ்கிருத பள்ளிக்குக் கிடைத்துவிட்டது.

நூற்றாண்டு வைபவம் பற்றிச் சொன்ன போது 'எனக்கு ஒண்ணும் வேண்டாம். ஏதாவது தரணுமானா அதை ஸ்கூலுக்குத் தந்துரு' என்றாராம். பத்திரிகையில் ஓர் அறிவிப்பு வெளியிட்டதைப் பார்த்துப் பழைய மாணவர்கள் தாங்களாகவே காசோலைகளாய் அனுப்பிய தொகை எட்டு லட்சத்து முப்பத்தையாயிரம்! தொகையைச் சேர்த்து வழங்கிய ஐ.சி.ஐ.சி.ஐ. வங்கியின் தலைவர் என். வகுள், தம்முடைய ஹெட்மாஸ்டரைப் பற்றிக் கூறியபோது 'எங்களுக்கு வாழ்க்கை நெறி, பக்தி மார்க்கம், இறை உணர்வு இவற்றைப் புகட்டினார். நாங்கள் அடைந்துள்ள மேன்மை, பெருமை எல்லாமே ஹெட்மாஸ்டர் தந்தது" என்று நெகிழ்ந்தார்.

பாரத அரசின் நிதித்துறையில் உயர்பதவி வகித்து ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி எம்.ஆர்.சிவராமன், ஹெட்மாஸ்டரிடம் ஆசிபெற வந்திருந்தவர்களுள் ஒருவர். "ஹெட்மாஸ்டரைப் பார்த்து நாற்பத்தேழு வருஷமாச்சு... ஆனா அவர் என்னைப் பத்தி விசாரித்துக் கொண்ட இருப்பார். எதையும் நன்றாகப் பண்ணினால் கூட, இன்னும் நன்றாகப் பண்ணு (to do better than the best) என்று உற்சாகப்படுத்துவார்" என்று சொன்னார்.

**நெ**ற்றிக்கு இடாமல் யாரும் பள்ளிக்கு வர முடியாது. ஹெட்மாஸ்டர் அறையிலேயே விபூதி, குங்குமம் வைத்திருப்பாராம். தேவைப்படுகிற பையன் அங்கேயே போய் எடுத்து நெற்றிக்கு அணிந்து கொள்வானாம். காலைப் பிரார்த்தனை நேரத்தில் சில நிமிடங்கள் ஹெட்மாஸ்டர் ஏதாவது நல்லுரை சொல்லித்தான் பிரார்த்தனை நிறைவு பெறுமாம்.

இந்த மாம்பலம் முனிவர், 'இராயப்பேட்டை முனிவர்' என்று புகழப் பெற்ற தமிழ்த் தென்றல் திரு.வி.க.விடமும், சச்சிதானந்தம் பிள்ளையிடமும் வெஸ்லி உயர்நிலைப் பள்ளியில் தமிழ் கற்றவர்.

*1918*ஆம் ஆண்டில் பாலகங்காதர திலகர் சென்னை வந்தபோது 'ஸ்ரீனிவாசன்' உட்படத் தம் மாணவர்களை அவரிடம் அழைத்துச் சென்று மரியாதை செலுத்தச் செய்தாராம் திரு.வி.க.

— சுப்ர. பாலன்



# “தமிழகத்துக்கு அரசியல் மேனேஜர்கள்தான் இருக்கிறார்கள்!”

“தமிழ் நாட்டில் மாநிலக் கட்சிகள் ஆட்சி புரிந்தாலும் கூட, இந்தியர் என்ற தேசியச் சிந்தனை இருக்கிறது. கர்நாடகத்தில் கன்னடர் என்ற சிந்தனை தான் மேலோங்கி இருக்கிறது" என்கிறார்கள் காவிரி உரிமையை மீட்கப் பலமுறை போராடி, சிறைப்பட்டு, விடுதலையான தமிழ்த் தேசப் பொதுவுடைமைக் கட்சியின் பொதுச் செயலாளர் பெ. மணியரசனும் தஞ்சை மாவட்டச் செயலாளர் பழனி மாணிக்கமும்.

“கர்நாடக அணைகளில் தண்ணீர் நிரம்பிய பின், வெள்ளத்தைத் தமிழ் நாட்டுக்குத் திறந்து விடும் வழக்கத்தை 1974லிருந்தே கர்நாடகம் கடைபிடிக்கிறது. உபரியாக வெள்ள நீர் இல்லை என்பதைத்தான் 'தண்ணீர் இல்லை' என்று கர்நாடகம் கூறி வருகிறது.

இப்படிப்பட்ட தண்ணீர்த் தகராறைத் தீர்த்து வைக்க 1956ஆம் ஆண்டு உருவானதுதான் மாநிலங்களுக்கிடையிலான தண்ணீர்த் தகராறுச் சட்டம். இதில் விதி ஆறின்படி, மாநிலங்களில் நீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியாவிட்டால், கடைசி பட்சமாக, தீர்ப்பாயத்தைப் போட வேண்டும். இதன் தீர்ப்பு உச்ச நீதிமன்றத் தீர்ப்புக்குச் சமமானது. விதி 6-Aவின்படி, இப்படித் தீர்ப்பாயம் தீர்ப்புச் சொல்லிவிட்டு, அதைச் செயல்படுத்த வேண்டிய வேலையை மத்திய அரசுக்குக் கொடுத்திருக்கிறது. அதற்கான செயல் அமைப்புகள் உருவாக்கி, செயல்படுத்த வேண்டியது மத்திய அரசின் பொறுப்பு. இதில் பஞ்சாயத்துக்கே இடமில்லை. ஆனால் அவ்வாறு உருவாக்காமல் மத்திய அரசு காலம் கடத்தியது. எனவே 1995ல், தமிழக அரசு, இந்திய – கர்நாடக அரசுகளை எதிர்த்து உச்சநீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தது" என்கிறார் மணியரசன்.

**இதற்கு என்ன பலன் கிடைத்தது?**

பல வாய்தாக்கள், பதிலளிக்கப்படாமலே போயின. 21.7.98அன்று, உச்சநீதி மன்றம், இனிமேலும், வாய்தா தர முடியாது என்றது. உடனே, "தமிழக அரசுடன் சமாதானம் பேசி வருகிறோம். இதுவே கடைசி வாய்தா. எங்கள் சமரசத் திட்டத்தை நீதி மன்றத்தில் அளிக்கிறோம்" என்றது கர்நாடகா. மத்திய அரசும்

இதற்கு ஒத்தூதியது. இந்தப் பின்னணியில் ஆகஸ்ட் 6, 7 தேதிகளில், 1998ஆம் ஆண்டு உருவானது தான் வாஜ்பாய் தலைமையிலான காவிரி ஆணையம். இது ஒரு சோளக் கொல்லை பொம்மை தான். அதிகாரம் எதுவும் இல்லை. ஆணையம் தனது செயல்பாட்டுக் குரிய விதிகளை உருவாக்கிக் கொள்ளும் என ஒப்பந்தம் கூறினாலும், கடந்த நான்கு ஆண்டு களில் மூன்று முறை கூடிய ஆணையம், தனது செயல்பாட்டுக்கான விதிகளை உருவாக்க வில்லை என்பது கவனிக்கத்தக்கது. இது ஓர் ஏனோ - தானோ அமைப்பு என்பதற்கு இதுவே சான்று.

**ஆணையத்துக்கு உண்மையிலேயே ஆணையிடும் அதிகாரம் கிடையாதா?**

நான்கு முதல்வர்களுள் யாராவது ஒரு முதல்வர் எதிர்ப்புத் தெரிவித்தால், ஒரு முடிவும் எடுக்க முடியாது. கருத்தொற்றுமை அடிப்படையில் முடிவெடுத்தால்தான் ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற முடியும் என்ற உத்தரவாதத்தை, அன்றைய கர்நாடக முதல்வர் ஜே.எச். பட்டேலுக்கு வழங்கிய பிறகே, அவர் இந்த ஆணையத்துக்கு ஒப்புதல் தெரிவித்தார். ஆனால், ஐ.கே. குஜ்ரால் தலைமையில் ஐக்கிய முன்னணி அரசு தயாரித்து 30.5.97 அன்று நான்கு மாநிலங்களுக்கும் சுற்றுக்கு விடப்பட்ட முதல் வரைவுத் திட்டத்தில், செயல்படுத்தும் அதிகாரம் படைத்த உருப்படியான விதிகள் இருந்தன.

**உதாரணமாக...?**

இந்த ஆணையத்தின் முடிவுகளை எந்த மாநிலமாவது செயல்படுத்தத் தவறினால், அந்த மாநிலத்தில் உள்ள நீர்த்தேக்கங்களை இந்த ஆணையம் தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டு செயல் படுத்தும்.

**செப்டெம்பர் ஒன்பதாம் தேதி பிரதமர் கூட்டிய கூட்டத்தில் கருத் தொற்றுமை இல்லாவிட்டாலும், பெரும்பான்மை ஏற்பு இருந்தது என்றார் களே?**

அந்தக் கூட்டத்தில் பொன்னையன் கலந்து கொண்டார். அவர் எதிர்ப்புத் தெரிவித்தார். புதுவை முதல்வர் ரங்கசாமி, 'தமிழ்நாட்டின் கருத்தே என் கருத்தும்' என்றார். கேரள முதல்வர் வாயே திறக்கவில்லை. இதில் கருத் தொற்றுமை எங்கே வந்தது? அல்லது மெஜாரிடிதான் எங்கே வந்தது?

கர்நாடகாவில் எழுபது டிஎம்சி தண்ணீர் கையிருப்பு இருந்தபோது, 3.9.2002ல், உச்சநீதி மன்றம் ஒன்பதாம் தேதியே கூட்டி, உச்சநீதி மன்றம் சொன்னதையும் குறைத்து 0.8 டி.எம்.சி. கொடுத்தால் போதும் என்று உத்தரவிட்டார் பிரதமர். கிருஷ்ணா சொன்னதுதான் பிரதமருக்கு முக்கியமாகத் தெரிகிறது! இதில் வேடிக்கை என்ன என்றால் சமீபத்தில் பிரதமர் இரு மாநிலங்களும் சமரசமாகப் பேசி இப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று சொல்லுகிறார்! கிருஷ்ணாவும் அதையே சொல்லுகிறார்.

தமிழ்நாட்டுக்கு அரசியல் தலைமை இல்லை. அரசியல் மேனேஜர்கள்தான் இருக் கிறார்கள்.

**குஜ்ரால் வரைவுத் திட்டத்தின்படி ஒழுங்குபடுத்தும் குழுவுக்கு என்ன அதிகாரம் இருந்தது?**

இந்த முதல் ஆணைக்குழுவில் பதினோரு பேர் உறுப்பினர். மத்திய நீர்ப் பாசனத்துறைச் செயலர்தான் தலைவர். நான்கு மாநிலத் தலைமைச் செயலர்களும், மத்திய பாசனத்துறை அதிகாரிகளும் உறுப்பினர்கள்.





பிரச்னைக்குரிய மாநிலப் பிரதிநிதியை வைத்துக் கொண்டு இந்த ஆணைக்குழு முடிவு எடுக்கும். அப்படி அவர் முதல் கூட்டத்துக்கு வரவில்லை என்றால், மீண்டும் ஒரு முறை கூட்டப்படும். அதற்கும் அவர் வராவிட்டால் பெரும்பான்மை வாக்கு அடிப்படையில் ஆணையம் முடிவுகளை எடுக்கும். ஒழுங்குபடுத்தும் குழு,

கர்நாடகம் 11.2 லட்சம் ஏக்கருக்கு மேல் தனது சாகுபடிப் பரப்பை அதிகரிக்காமல் பார்த்துக் கொள்ளும். புதிய பாசனத் திட்டங்களையோ பழைய பாசன அமைப்புகளை விரிவுபடுத்தும் திட்டங்களையோ செயல்படுத்தாமல் பார்த்துக் கொள்ளும். ஒழுங்குபடுத்தும் குழு மாதம் ஒரு முறை கூடும். இதன் தலைமையகம் கோயமுத்தூரில் இருக்கும். ஆனால் எல்லாவற்றையும் எதிர்க்கும் கர்நாடகம், இந்த வரைவுத் திட்டத்தையும் எதிர்த்தது!

கர்நாடகா எதிர்க்கிறது என்பதற்காக, பா.ஜ.க. அரசு முந்தைய வரைவுத் திட்டத்தை மாற்றி, 29.7.98 அன்று, தில்லியில் நடந்த நான்கு மாநிலத் தலைமைச் செயலர்கள் கூட்டத்தில் திருத்தப்பட்ட வரைவுத் திட்டத்தை முன் வைத்தது. இடைக்கால ஆணையைச் செயல்படுத்த மறுத்தால், கர்நாடக – தமிழக நீர்த் தேக்கங்களை, ஆணைக்குழு தன் பொறுப்பில் எடுத்துக் கொள்ளும் என்ற விதியை பா.ஜ.க. அரசு நீக்கியது. பதிலாக, மத்திய பாசனத்துறை அமைச்சர் தலைமையில் நான்கு முதல்வர்களைக் கொண்ட ரெவ்யூ கமிட்டியை நியமிப்பதாகக் கூறியது. இது கர்நாடகத்துக்குச் சாதகமான, வசதியான அம்சம். இதை எல்லாம் அன்றைய தமிழக முதலமைச்சர் ஏற்றுக் கொண்டார் என்பதுதான் வருத்தமான செய்தி.

**பற்றாக்குறை காலத்தில் எப்படிப் பகிர்ந்து கொள்ளுவது என்பதுதானே சிக்கல்?**

அதற்கும் நடுவர் மன்றத் தீர்ப்பாயம் வழி சொல்லியிருக்கிறது. முந்தைய பத்து ஆண்டுகளில் தண்ணீர் எவ்வளவு இருந்தது என்று பார்க்க வேண்டும். அதில் குறைவான மாதம் ஒன்றையும், அதிகமான மாதம் ஒன்றையும் விட்டுவிட்டு, மீதி பத்து மாதங்களின் சராசரியை எடுத்துக் கொள்ள வேண்டும். இதுதான் பற்றாக்குறை காலத்தில் கர்நாடகம் தமிழ்நாட்டுக்குக் கொடுக்க வேண்டிய தண்ணீர். ஆனால் கர்நாடகம் எதையும் சட்டை செய்யவில்லை. நவம்பர் – டிசம்பர் மழைக் காலத்தில் பெருகி வரும் உபரி நீரைத் தமிழ்நாட்டுக்குத் தந்துவிட்டு, 205 டி.எம்.சிக்கு மேல் தருகிறோமே என்று கர்நாடகம் வாதம் செய்கிறது. ஜூன் – செப்டெம்பர் மாதங்களில், இடைக்கால ஆணைப்படி நீர் தராமல் நாடகம் ஆடுகிறது கர்நாடகம்.




**உங்கள் போராட்டக் குழுக்களின் நோக்கம் என்ன?**

கர்நாடகமும் தமிழ்நாடும் ஒன்றை ஒன்று சார்ந்து நிற்கின்றன. இதை உணர்த்த வேண்டும். நீருக்கு நாம் அவர்களைச் சார்ந்திருக்கிறோம். நெய்வேலி – கல்பாக்கம் மின்சாரத்துக்கு அவர்கள் நம்மைச் சார்ந்திருக்கிறார்கள். வேதாரண்யம் உப்பும் அவர்களுக்குத் தேவை. அவர்கள் பண்டங்களுக்கும், தமிழ்நாடு தான் பெரிய சந்தை. நம் மின்சாரத்தை நிறுத்தினால் அவர்கள் தொழிற்சாலைகள் ஓடாமல் நின்று போகும். ஜார்கண்ட் இயக்கத்தின்போது அவர்கள் வெற்றிகரமாகக் கையாண்ட முறை போல், நாமும் பொருளாதாரத்தடை கொண்டு வர வேண்டும். அப்போதுதான் அவர்கள் உணருவார்கள். நாம் நாகரிக சமுதாயத்தில் – சிவிலைஸ்டு சொசைடியில் – வாழ்கிறோம். நாம் சார்ந்துதான் இருக்க வேண்டும். இதைக் கர்நாடகத்துக்கு உணர்த்த வேண்டும். அப்போது புதிய ஒப்பந்தமே போடலாம். நடுவர் மன்றம், ஆணையம் போன்ற நகம், பல் இல்லாத சிங்கங்கள் வேண்டாம்.

– சித்தார்த்

"அன்னம் பாலிக்கும் அருள்மிகு பௌர்ணமி மிகச் சக்திவாய்ந்த ஐப்பசி பௌர்ணமியே - சித்தர் வாக்கு

அடிமுடிகாணா அனற் பிழம்பாய் எம்பெருமான் அண்ட சராசரம் முழுவதும் அடிஎடுத்து நின்ற மாதம் - கார்த்திகையே!"

# தீபத்திருநகர் திருஅண்ணாமலையில் கார்த்திகை தீபத்திருநாளன்று அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கிறோம்!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளையின் ஐந்தாம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

• உலக சிருஷ்டியின்போது முதன்முதலில் உருவான தாவரம் நெல். இவ்வளவு சுகிர்தம் பொருந்திய நெல்லை அம்பிகையின் அவதாரமான ஸ்ரீ ஆடிப்பூரதேவி முதலில் ஏற்றுக்கொண்டாள். அதைப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளும் உண்ணும் உணவாக வார்த்த நெல்மணி முதலில் அன்னை வடித்தல் புரிந்தாள். திருஅண்ணாமலையார் ஆலயத்தில் அம்பிகை தவம்புரிந்த இடமே "[illegible]" என்றழைக்கப்படுகிறது. எம்பெருமானின் திருவருட்சக்தியால் 'அடி ஆக்கி' மூலம் நெல்மணிகளை அன்னமாக்கி [illegible] அக்கினிக்ஷேத்ரமான திருஅண்ணாமலையில் அருள்பாலிக்கிறாள். அம்பிகையே அண்ணாமலையாருக்கு அன்னமலையால் அபிஷேகம் செய்த திருநாள் ஐப்பசி பௌர்ணமி. கார்த்திகைப் பௌர்ணமியில் அனைத்து தெய்வங்களுமே அண்ணாமலையாரை கிரிவலம் வருகின்றனர். இப்புனிதமான இரு மாதங்களிலும் வரும் பௌர்ணமியில் கிரிவலம் வருவோர் மற்றும் தங்களால் வர இயலாதவர்கள் கிரிவல அடியார்களுக்கு அமுதளித்து அன்னதானம் செய்தால் கிரிவலப்பயன் மேலும் பன்மடங்கு பெருகும்.

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மன் படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் உயர்வு ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ கல்யாண பாக்கியம் பெற, நல்ல வரன் அமைய ❖ புத்திர/பிள்ளை பாக்கியம் பெற ❖ கணவன் - மனைவி இடையே ஒற்றுமை நிலவ ❖ கஷ்டங்களும், கடன்களும் எதிர்ப்பு இடையூறுகளும் நீங்க ❖ புதிய முயற்சிகளில் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாக ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு/ மனை பெற ❖ வாகன யோகம் பெற ❖ நல்ல சிந்தனை பெற ❖ சிந்தனை வளம் பெருக ❖ உடல் ஆரோக்கியம் பெற ❖ நீண்ட ஆயுள் பெற ❖ தெய்வசக்தியுடன் திகழ ❖ குடும்ப ஒற்றுமை பெற ❖ உலக ஒற்றுமை பெற ❖ சமுதாய ஒற்றுமை பெற ❖ தேச ஒற்றுமைபெற ❖ எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொருமாதமும் பௌர்ணமி அன்று திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து ஆண்டுகளுக்கு பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

• நன்கொடை அனுப்பும் சிவநேசச்செல்வர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust Chennai - 4) என்ற பெயரில் Cheque /D.D/ M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம்தரும் இறைபணி சேவைகளாக 'ஆன்மீக அன்னதான அறக்கட்டளை' ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை


**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST** (Regd.)

68, Nadu Street, (Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

Tel : 4959302 Fax : (044) 7102308 E - Mail: siva siva @vsnl.net


ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

ஸ்ரீ உண்ணாமுலையம்மன்

கார்த்திகை தீப பௌர்ணமியில் அன்னதானம் செய்தால் நம் உடற்பிணி உடனே நீங்கும்!

அனுஷா

# அங்கீகாரம்



அகன்ற சிரிப்போடு பொது மேலாளர் பாராட்டுவதைக் கேட்டுக் கொண்டிருக்கும் கணேஷைப் பார்த்தான் குரு.

இத்தனைப் பாராட்டுக்கும் மூலகாரணம் நீதான் குரு என்பதுபோல ஒரு கண் பார்வையையாவது தன் மீது வீசுவான் என்று நினைத்த குருவுக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது.

பொது மேலாளர் கணேஷை தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொள்ளாத குறையாய் ஓஹோவென்று புகழ்ந்து கொண்டிருந்தார். தற்போது இந்த வங்கிக் கிளைக்கான வைப்பு நிதி, அவர் நிர்ணயித்திருந்த இலக்கைவிட இரண்டு மடங்காகிவிட்டதையும், அந்தப் புதுவாடிக்கையாளர் சாந்தி லாலை அறிமுகப்படுத்தியதனாலேயே, இது சாத்தியமாற்று என்றும் கூறி கணேஷின் தோள்களில் தட்டிக் கொடுத்தார்.

கணேஷை வங்கி ஊழியர்கள் சூழ்ந்து கொள்வதையும் கைகுலுக்கி வாழ்த்துத் தெரிவிப்பதையும் குரு பார்த்தான்.

வாழ்க்கையில் முன்னணியில் இருப்பதற்குச் சில பேருக்குத்தான் கொடுப்பினை இருக்கும் போலும் எனத் தோன்றிற்று.. சரியான இடத்தில், சரியான சந்தர்ப்பத்தைத் தக்கபடி பயன்படுத்திக் கொள்வதில் இந்த கணேஷ் எப்போதுமே வல்லவன்தான்.

சகாக்கள் புடை சூழ தன்னைக் கடந்து செல்லும் கணேஷைத் திரும்பவும் பார்த்தான். இவன் இருக்கும் திசையை மிகவும் கவனத்தோடு அவன் தவிர்ப்பது

போலத் தோன்றிற்று.

இப்படிப் பகிரங்கமான பாராட்டுக் கிடைத்ததோடு அவனது பிரத்யேக அறிக்கையிலும் 'எக்சலென்ட்' என்று குறிப்பிடுவார் பொது மேலாளர். அத்தோடு நல்ல கிளையில் உயர் அதிகாரியாக மாற்றமும் கிடைக்கக்கூடும்.

குருவுக்கு இருக்கையில் அமர்ந்தும் வேலையில் ஈடுபட முடியாமல் மனம் தவிப்பாக இருந்தது. அனாவசியமாக மனசுக்குள் புலம்பித் தவிக்கக் கூடாது என்று தீர்மானித்தாலும், மனம் திரும்பத் திரும்ப அந்த சாந்திலாலைப் பற்றியும் அவரை எப்படியேனும் வங்கியின் வாடிக்கையாளராக்கி விட வேண்டும் என்ற ஆவலில் அவரது தொழிலகத்துக்கும் வீட்டுக்குமாக தான் நடையாய் நடந்ததும் நினைவுக்கு வந்தது.

அவன் சாந்தி லாலைப் பற்றி பேப்பரில் ஒரு துணுக்குச் செய்தி படித்த அன்றே அவரை நேரில் பார்க்கச் சென்றான். வாயிற் காவலாளி அவனை உள்ளே விட மறுத்த போதும் அவன் சோர்ந்து விடாமல், அடுத்த சில நாட்களுக்குத் தொடர்ந்து தொலை பேசியில் முயன்று அவரை நேரில் பார்த்துப் பேசும் வாய்ப்பு பற்றி விசாரித்தான். ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு விதமான பதிலால் அவரைப் பார்ப்பது இயலாத காரியமாகவே இருந்து கொண்டிருந்தது. அவர் தொழிலகத்தைப் பார்வையிட வரும் நேரங்களைப் பற்றி விசாரித்து அறிந்து, ஒரு நாள் அவரது தொழிலகத்துக்கே சென்றான்.

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை – 7**



அங்கிருந்த கெடுபிடிகளையும் ஒருவாறு சமாளித்து அவரை நேரில் பார்த்து, தனது வங்கியில் அவர் தமது வைப்பு நிதிக் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும், எனக் கேட்டுக் கொண்டான். தனது வங்கியின் வாடிக்கையாளராவதால் அவருக்கும், அவரது தொழிலகத்துக்கும் கிடைக்கப் போகும் சலுகைகள், நன்மைகள் குறித்து விளக்கினான். அவரைப் போன்றவர்கள் வாடிக்கையாளராகக் கிடைப்பதில் வங்கிக்கும் பெருமை என்பது பற்றியும் பேசினான்.

எல்லா வாடிக்கையாளர்களையும் போலவே சாந்தி லாலும் வைப்பு நிதிக் கணக்கு தொடங்க அத்தனை எளிதில் சம்மதித்து விடவில்லை. ஏதேதோ சாக்குச் சொல்லி நழுவப் பார்த்தார். ஆனாலும், அவரை விடாது, அவர் சொல்கிற இடத்தில் சொல்கிற நேரங்களில் அவர் முன்னே போய் நின்றான்.

இறுதியில், ஒரு நல்ல கணிசமான தொகையை இவனது வங்கியில் வைப்புத் தொகையாக வைக்கத் தீர்மானித்திருப்பதாக அவர் சொன்னபோது அவனுக்கு மனம் துள்ளத்தான் செய்தது. பட்டபாட்டிற்குப் பலன் கிடைக்கிறது என்று எண்ணினான்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவரை வந்து பார்த்து தொகையை வாங்கிக் கொள்ளலாமென்றும், அதற்கான வங்கியின் அதிகார பூர்வ நடவடிக்கைகளை அவன் செய்து தர வேண்டுமென்றும் அவர் சொன்னார்.

மிகவும் பிஸியான தொழிலதிபர் என்பதால் அவன் அவர் சார்பில் ஃபாரங்களைப் பூர்த்தி செய்தான். அவன் மும்முரமாகப் ஃபாரங்களைப் பூர்த்தி செய்வதைப் பார்த்த கணேஷ் அவனருகே வந்து 'என்ன, ஏது' என்று விவரங்கள் கேட்டுக் கொண்டான்.

குறிப்பிட்ட தினத்துக்கு முந்தின நாளே குருவுக்கு உடல்நிலை சரியில்லாது போனதால் விடுப்பு எடுத்துக் கொள்ளும்படி ஆயிற்று. சேர்ந்தாற்போல நான்கு நாட்கள் உடல்நிலை மோசமாகி விட்டபடியால் விடுப்பைத் தொடரும்படி நேரிட்டு விட்டது.

விடுப்பு எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் குறித்து வங்கிக்குத் தெரிவிக்க முயன்றபோது மறுமுனையில் கணேஷின் குரல் கேட்டது. விடுப்பு காரணமாக வங்கிக்குக் கிடைக்க வேண்டிய வைப்பு நிதி கைவிட்டுப் போய் விடக் கூடாது என்ற எண்ணத்தில், சாந்திலாலைப் போய்ப் பார்க்குமாறு கணேஷிடம் வேண்டிக் கொண்டான். அவர் சொன்ன தினத்தில் போய்ப் பார்க்காவிட்டால் சாந்திலாலின் மனம் மாறினாலும் மாறிவிடும். ஆகவே ஆவன செய்ய வேண்டியதின் அவசியம் பற்றி எடுத்துச் சொன்னான்.

ஆனால் ஏற்கெனவே சென்ற இரண்டு தினங்களாக சாந்திலாலைப் பார்த்து வந்திருக்கிறான் கணேஷ் என்பது அப்புறம் தெரிய வந்தது. குறிப்பிட்ட தினத்தில் சாந்திலாலை வங்கி ஊர்தியிலேயே அழைத்த வந்து, தேவையான அதிகார பூர்வமான நடவடிக்கைகளை எடுத்து கையெழுத்திடச் செய்து, நிதித் தொகை பெற்றுக் கொண்டு, ரசீது கொடுத்து விட்டதாக அப்புறம் தெரிய வந்தது.

இவன் எத்தனைதான் உழைத்திருந்தாலும், ஸ்தூலமாகவும் வெளிப்படையாகவும் இந்தச் செயலுக்குக் காரண கர்த்தா போலத் தெரிவது கணேஷ்தான். சரியான நேரமோ, அல்லது அதிர்ஷ்டமோ ஏதோ ஒன்றின் காரணமாக, எல்லாரது கவனத்திலும் எண்ணத்திலும் இந்த கணேஷ்தான் இந்தப் பெரும் நிதி வங்கிக்குக் கிடைக்க உழைத்திருக்கிறான் என்பதை விதைத்திருக்கிறது.

எப்படியோ வங்கிக்கு நல்ல வாடிக்கையாளரும், கணிசமான வைப்புத் தொகையும் கிடைத்திருக்கிறது. அதை எண்ணி சந்தோஷப்பட வேண்டும் என்று நினைத்துக் கொண்டான் குரு. அதை விட்டுவிட்டு இப்படி மனசுக்குள் மருகிக் கொண்டிருக்கக் கூடாது. அதிலும் எனக்கு உரிய அங்கீகாரம் கிடைக்கவில்லையே என்று கூட இல்லாமல், இந்த கணேஷுக்குப் போய் இப்படி அளவுக்கு மிஞ்சிய அங்கீகாரம் கிடைக்கிறதே என்று நினைத்து மருகுவது நிச்சயம் சரியில்லைதான்.

இப்படி எண்ணி மனத்தை எவ்வளவு சமாதானப்படுத்திக் கொண்டாலும் மனம் திரும்பத் திரும்ப சண்டித்தனம் பண்ணிற்று.

> ''தலைவர்கிட்டே, உங்களுக்கு ரொம்ப பிடிச்சதையே, பையனுக்குப் பேரா வெச்சுடுங்கன்னு சொன்னது தப்பாயிடுச்சு!''
> ''அப்படியா?''
> ''ஆமாம்; பையனுக்குப் 'புறம்போக்கு'ன்னு பெயர் வெச்சுட்டார்!''
> — யமுனா ரங்கநாதன்

அந்தக் கணேஷாவது கொஞ்சம் வாய் திறந்து 'இந்தப் பாராட்டெல்லாம் உண்மையில் குருவுக்குத்தான் போய்ச் சேர வேண்டும்' என்று சொல்லியிருக்கலாமே. அப்படி வெளிப்படையாக எல்லோரிடமும் தெரிவிக்காவிட்டாலும் போகட்டும், குறைந்த பட்சம் என்னிடமாவது வந்து, 'வேலை செஞ்சது நீ, பாராட்டு எனக்கு'ன்னு இரகசியமாகவாவது சொல்லிவிட்டுப் போயிருக்கலாமே என்று மனம் ஒரு நிமிடம் ஏங்கிற்று.

'அவன் அப்படிச் சொல்லாவிட்டாலும், எனக்காவது என்னை முன்னிலைப் படுத்திக் கொள்ளக் கூடிய சுபாவம் இருக்கிறதா என்றால் அதுவும் சுத்தமாக இல்லை. எல்லாவற்றையும் செய்துவிட்டு நானே ஒரு ஓரத்தில் ஒதுங்கிக் கொண்டு விடுகிறேன். எனது செயல்களுக்கான விளைவுகள் தாமாக நிகழும் என எதிர்பார்க்கிறேன்.

எனது இந்த சுபாவத்தை எல்லோரும் கேலிதான் செய்கிறார்கள். சுபாவம் என்றாகி விட்டதால் இந்தக் குணம் இன்றல்ல, பிறந்ததிலிருந்தே எனக்கும் கொஞ்சம் ஏளனத்தைத் தான் தேடித்தந்திருக்கிறது போலும்.

அம்மா அப்பா கூட 'இது இத்தனை சாதுவா இருக்கே, இது எப்படி உலகத்திலே பொழைச்சுக்கப் போறது'ன்னு நிறைய தடவை வாய் விட்டே அலுத்துக் கொண்டிருக்கிறார்கள். 'நீங்க கொஞ்சம் வெகுளி சார்' என்று அலுவலக சகாக்கள் சொல்லும் போது 'ஏமாளி' என்பதைக் கொஞ்சம் நாசூக்காய்ச் சொல்லுகிறார்களோ என்று எண்ணத் தோன்றும். மனைவி கூட, 'நீங்க இப்படி இருக்கிறதினாலதான் உங்க தலையில நல்லா மொளகா அரைக்கிறாங்க'' என்றுதான் சொல்லுகிறாள். நான் இப்படி இருந்து என்னத்தைக் கண்டேன்.

மாலை வங்கியிலிருந்து நேரே வீடு செல்லாமல் வேறு திசையில் நடந்தான்.



கொஞ்சம் காலாற நடக்கலாம், மனத்திற்கு கொஞ்சமாவது மாறுதல் கிடைக்கும்.

'சார்' என்று யாரோ கூப்பிடுவதைக் கேட்டு அவன் சட்டென்று திரும்பிப் பார்த்தான்.

"சார்... எங்கே சார் இந்தப் பக்கம்" என்று கேட்டுக் கொண்டே நிற்கும் இவன் யார் என்பது போலச் சில நொடிகள் அந்த மனிதனைப் பார்த்தான். சில நிமிட யோசனைக்குப் பிறகு அந்த மனிதன் பெயர் ராஜன் என்பது நினைவுக்கு வந்தது. வங்கியில் கடன் வாங்கி, கடை வைத்துப் பிழைப்பு நடத்துகிறான். அது சம்பந்தமாக அவனை வங்கியில் பார்த்திருக்கிறான்.

"என்ன ராஜன் எப்படி இருக்கீங்க?"

"உங்க புண்ணியத்தில் நல்லா இருக்கேன் சார். வாங்க சார். கடை இதோ பக்கத்தில் தான் இருக்கு."

குருவுக்கு அப்போதிருந்த மனநிலையில் யாருடனும் பேசவேண்டும் போலத் தோன்றவில்லை. தனிமையில் விடப்பட்டால் நன்றாக இருக்கும் என்றிருந்தது.

"இருக்கட்டும். இன்னொரு நாள் வரேன். இப்ப வேற வேலை இருக்கு. கடையெல்லாம் நல்லா நடக்குது இல்லே."

"ம். நல்லா நடக்குது சார். நீங்க சொன்ன மாதிரியே அந்த வேண்டாத காசெட்ஸ் விக்கறதை கம்ப்ளீட்டா ஸ்டாப் பண்ணிட்டேன் சார். உங்க கையால வாங்கின தொகை... அதை நல்ல மாதிரியாதான் பயன்படுத்தணும்னு... அதான் பிக் – அப் பண்ண கொஞ்சம் டைம் ஆவுது ஸார்... இன்னும் ரெண்டே மாசத்திலே கடனைத் திருப்பிக் கொடுக்க ஆரம்பிச்சிடுவேன் ஸார்..."

குரு சில நொடிகள் மௌனமாக நின்று கொண்டிருந்துவிட்டு அவனுக்குக் கை அசைத்து விட்டு மேலே நடக்கலானான். வங்கி விஷயமாக இப்போது இவனை மேலும் கேள்வி கேட்கவேண்டாம் என்று தோன்றிற்று. ஏற்கெனவே இவன். கடனைத் திரும்பக் கொடுக்க ஆரம்பிக்கவில்லை என்று வங்கி மேலாளர் குருவிடம் தமது அதிருப்தியைக் காட்டியிருந்தார். இவனுக்குக் கடனுதவி கொடுக்க குருதான் சிபாரிசு செய்தான் என்பதால், அவன் பொறுப்பு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதுபோலப் பேசினார்.

அவர் அப்படிப் பேசியது நினைவுக்கு வந்து குருவின் மனத்தை மேலும் அலைக்கழித்தது. 'பாவம் சரியான வருமானமின்றிக் கஷ்டப்படுகிறானே, வங்கி உதவி அவனுக்குப் போய்ச் சேர வேண்டும்' என்ற நல்லெண்ணத்தில் அவன் கடனுதவி பெற வழி செய்தான். அதை அவனும் புரிந்து கொள்ளாமல் இப்படித் திரும்பச் செலுத்தாமல் இழுத்தடிக்கிறானே. சே...!

வெகு நேரத்துக்குக் கால் போன படி நடந்து விட்டு வீட்டுக்குத் திரும்புகையில் மனம் கொஞ்சம் இலேசானது போலத் தோன்றிற்று.

வீட்டில் நுழைகையிலேயே சீதா அருணிடம் எதற்கோ கத்திக் கொண்டிருப்பது கேட்டது.

"பாடம் ஒழுங்காப் படிச்சாத்தானே மார்க் வரும். எப்பப் பார்த்தாலும் விளையாட்டு. இல்லாட்டா டிராயிங்கு... போ... உங்கப்பாவும் வந்தாச்சு, இனிமே நா பேசறது உன் காதிலே எங்கே விழப்போறது."

அருண் இவனைப் பார்த்துவிட்டு இவனருகே வந்து கைகளைப் பிடித்துக் கொண்டான்.

"என்ன கண்ணா. என்ன ரகளை அம்மாவோட?"

"அம்மா எப்பப் பார்த்தாலும் படிபடின்னு திட்டறாப்பா."

''பார்க் வாங்கிண்டு வர அழகுக்கு... படின்னு சொன்னா திட்டறா மாதிரியா தோணறது உனக்கு?''

"பாருப்பா இந்த அம்மாவை!"

"ஏன் கண்ணா... ரிப்போர்ட் வந்துதா இன்னிக்கு. கொண்டு வா, காமி பார்க்கலாம்."

இந்தத் தடவை செவன்ட்டி பர்செண்டுக்கு மேல வாங்கியிருக்கேன். அதுக்கே இந்த அம்மா திட்றாங்க. எப்பப் பாரு மகேஷைப் பாரு, மகேஷைப் பாருன்னுட்டு. ... அவனை மாதிரி பர்ஸ்ட் வரமாட்டேங்கிறியேனுட்டு."

குரு ப்ரோக்ரஸ் ரிப்போர்ட்டைப் பார்த்தான். வழக்கத்தை விடச் சற்றுக் கூடுதலாகத் தான் மார்க்குகள் வாங்கியிருந்தான். அடியில் 'ராங்க்' என்பதன் எதிரே ஐந்து என்பதை அடித்து விட்டு ஏழு என்று எழுதியிருந்தது.

"என்ன கண்ணா... இப்படி அடிச்சு எழுதியிருக்கு."

"அது... மிஸ் டோட்டல்ல மிஸ்டேக் பண்ணியிருந்தாங்க... என் டோட்டலை நான் கூட்டும் போதுதான் எனக்குத் தெரிஞ்சது. மிஸ்ஸுகிட்டே சொன்னேன். அப்புறம் ராஜாதான் பிப்த் ராங்க், நீ செவன்த்தான்னு எழுதிக் கொடுத்தாங்க."



குரு, அருணின் முகத்தையே ஒரு நிமிட நேரம் கூர்ந்து கவனித்தான். கையிலிருந்து ஓவிய நோட்டுப் புத்தகத்தில் ஆழ்ந்து போயிருந்த அருணின் முகம் நிச்சலனமாய் இருந்தது.

குரு, அருணின் தலையை மென்மையாகக் கோதி விட்டபடியே "ஏன் கண்ணா... டோட்டல் மார்க் மிஸ்டேக்கை நீயே கண்டு பிடிச்சியா?"

ஓவியப் புத்தகத்திலிருந்து கண்களை எடுக்காமலேயே "ம்" என்று குரலெழுப்பினான் அருண்.

''அஞ்சாம் ராங்க் கிடைச்ச உனக்கு செவன்த் ராங்க்காப் போயிருச்சே"_ வார்த்தைகளை மெள்ள அளந்து பேசுவது போலக் கேட்டவாறே அருணின் முகத்தைப் பார்த்தான் குரு.

"ஆமாப்பா... ஆனா... ஆனா... அந்த அஞ்சாம் ராங்க்கில ராஜாதானே வந்திருக்கான். அவனுக்குத்தானே என்னை விட மார்க் ஜாஸ்தி."

அருணின் நிச்சலனமான முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த குருவுக்கு உடலிலும் மனத்திலும் இருந்த இறுக்கம் தளர்ந்து இலேசாவது போல இருந்தது.

''அப்பாவு'க்குப் பிள்ளை தப்பாமப் பொறந்திருக்கு... எல்லாத்திலேயும் உங்களைக் கொண்டிருக்கான் அவன்."

உள்ளேயிருந்து மனைவியின் குரல் கேட்டது. அவள் சற்று இளக்காரத்தோடு சொன்னாலும் அருணின் அந்த குண விசேஷம் எவ்வளவு போற்றப்பட வேண்டிய ஒன்று என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

ஸ்தூலமான மாற்றங்களைச் சுலபமாகச் செய்து விடலாம். ஆனால் இப்படிப்பட்ட சூக்ஷ்மமான, எண்ணப் போக்கைக் கொண்டு வருவது எவ்வளவு கடினமான விஷயம், அத்தோடு எவ்வளவு அற்புதமான விஷயம்! அந்த ராஜன் இன்று என்ன சொன்னான்? ''உங்க கையால வாங்கின பணத்தை நல்ல விதமா பயன்படுத்தணும்னு.... நீங்க சொன்ன மாதிரியே வேண்டாத காசெட்ஸ் விக்கறதையெல்லாம் நிறுத்தி..."

இப்படி அவனை என்ன வைத்தது எவ்வளவு பெரிய விஷயம்...! இவையெல்லாம் அங்கீகாரம் இல்லாமல் வேறென்ன! நமது நல்ல செயல்களுக்குக் கிடைக்க வேண்டிய அங்கீகாரம் நாம் எதிர்பார்க்கும் விதத்தில் கிடைக்காமல் போகலாம். ஆனால் அது வேறு ஏதோ ஒரு விதத்தில் நமக்குக் கிடைத்துக் கொண்டுதான் இருக்கிறது. கொஞ்சம் நுண்ணுணர்வும், திறந்த மனப் போக்கும் இருந்தால், நாம் இதை உணர்ந்து கொள்ள முடியும்.

''நான் நல்லாப் படிக்கிறதில்லேன்னு டிஸ்ஸப்பாய்ன்ட் ஆயிட்டீங்களா அப்பா?''

"அ...இல்லியே... எனக்கு என்ன டிஸப்பாய்ன்ட்மெண்ட்....நீ... எவ்வளவு அழகா டிராயிங் பண்றே... அந்த மாதிரி யாரால முடியும் சொல்லு..."

அருண் ஓவியப் புத்தகத்தை கீழே வைத்து விட்டுத் தந்தையின் அருகே வந்து அவனது தோள்களின் மேல் கரங்களைப் போட்டு இறுக்கினான். "அயாம் ப்ரெளட் அப் யு அப்பா!" என்று அவன் சொன்னதைக் கேட்டு, குரு உடலும் மனமும் முழுமையாக இலேசாகி காற்றில் மிதப்பது போல உணர்ந்தான்.

# ஏலே... மக்கா!

**த**ள்ளுவண்டியில் வெள்ளரிக்காய் விற்கும் பெண்மணி ஒருவர், 'ஏலேய் மக்கா!' என்று செல்ஃபோனில் அலறியதைப் பார்த்து 'ஷாக்'கான நமக்கு, "இது ஒண்ணும் புதுசு இல்லே. கேபிள் ஆபரேடர், குருக்கள், நரிக்குறவர், மேஸ்திரி எல்லோருமே இப்போ செல்ஃபோன் வச்சிருக்காங்க!" என்கிறார் ஏர்-செல் இயக்குனர் பாஸ்கரன்.



• பாஸ்கரன்

**த**மிழ்நாட்டில் இதுவரை ஏர் செல், பிபிஎல், ஏர்டெல் என்ற மூன்று தனியார் துறைகளே இருந்து வந்தன. இவ்வாண்டு ஆகஸ்ட் முதல் அரசுத்துறை பிஎஸ் என்எல்லும் களத்தில் குதித்து, ஏற்கெனவே போட்டி நிறைந்த பிஸினஸில் தன் பங்கையும் அள் ளிக் கொள்ளத் தீர்மானித்தது.

சென்னையில் ஆர்பிஜி, ஏர்டெல்லுடன் கடைசி யாக 'ஹட்ச்'ம் சேர்ந்து கொண்டிருக்கிறது. இப்போது அரசின் பிஎஸ்என்எல்லும் சேர்ந்து, ஸிட்டியில் மட்டும் நாலு பேர் போட்டா போட்டி!

பிபிஎல் சென்னையில் இல்லை. ஆனால் கோவை யில் இருக்கிறது. முன்பு தமிழ்நாட்டில் பிபிஎல் தனிக் காட்டு ராஜாவாக இருந்தது. இப்போது போட்டிகளைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது.

1995ல் செல்லுலர் சர்வீஸ் அறிமுகப்





படுத்தப்பட்டபோது ஒரு நிமிடத்துக்கு பத்து ரூபாய் கட்டணமாக இருந்தது. அப்போது பலரும் பயந்து ஒதுங்கிய நிலைமை இருந்தது. அரசியல்வாதிகளும், பணத்தி லேயே புரண்டவர்களும் மட்டுமே செல் போன் வைத்திருக்க முடியும் என்ற நிலை. இன்று ஒரு செல்போன் வைத்திருப்பவர், இரண்டாவது செல்போனுக்குத் துணிந்து ஆசைப்படும் அளவுக்குக் கட்டணங்கள் சரிந்துவிட்டன. ரூ.1.99 அல்லது அதற்கும் கீழே ரூ.1.49 என்று நிமிடக் கட்டணம் குறைந்துவிட்டது. மாத வாடகைக் கட்ட ணம் ரூ.400லிருந்து ரூ.200க்கு வந்துவிட்டது. மாதாந்தர பில் கிட்டத்தட்ட அறுநூறு ரூபாய்க்கு வந்துவிட்டது! போன் ஹேண்ட் செட் ரூ.6000/- ரூ.7000/- என்று இருந்த தெல்லாம் போய் ரூ.1200/-க்கும் ரூ.3000/-க்கும் விற்பனையாகிறது. ப.சிதம்பரம் நிதி அமைச்சராக இருந்தபோது இதன் மீதான ட்யூட்டியைக் குறைத்தார். ஜஸ்வந்த் சிங் ட்யூட்டியையே எடுத்துவிட்டால் அப்புறம் எல்லோர் கையிலும் விஷ்ணு சக்கரம் மாதிரி ஒரு செல்போன் இடம் பிடித்தாலும் பிடித்துவிடும்.

இந்த 2002 ஆம் வருடத்துக்குள், செல் போன்கள் வைத்திருப்போர் எண்ணிக்கை பத்து மில்லியனைத் (அதாவது ஒரு கோடி) தொடக் கூடுமாம். இதை 2008க்குள் 120 மில்லியன் அளவுக்கு உயர்த்திவிட முடியும் என்று நம்பிக்கை தெரிவிக்கிறது செல்லுலர் ஆபரேடர்ஸ் அசோசியேஷன் ஆஃப் இந்தியா.

"இனி செல்லுலர் ஃபோன்தான் எல்லா தகவல் தொடர்புக்குமே என்கிற நிலை வந்துவிடும் பாருங்கள்!" என்கிறார் இதன் தலைவர் மனோஜ் கோஹ்லி. "அரசுக்கும் நிறைய லைசன்ஸ் கட்டணமாகவும், சர்வீஸ் டாக்ஸ் ஆகவும் நிதி குவியும். ஆனால், இந்த விஷயத்தில் இந்தியாவில்தான் நுழைவுவரி யும், வருடாந்தர வரிகளும் மிக அதிகம்!" என்று வருத்தமாகச் சொல்லுகிறார்.

ஏர்செல் நிறுவனமோ இரவு பத்து மணி முதல் காலை ஆறுமணி வரை, வருகிற - போகிற இரண்டு கால்களும் இலவசம் என்று அறிவித்திருக்கிறது. ஷார்ட் மெஸேஜ் சர்வீஸ் எனப்படும் 'எஸ்.எம்.எஸ்.'ஐ அறி முகப்படுத்தியிருக்கிறது. (ராகு காலம்கூட இதிலிருந்தே பார்த்துக் கொள்ளலாமாம்!) பிளஸ்-டு ரிசல்ட்டையே இந்த 'எஸ்.எம். எஸ்.'ல் கொடுத்திருக்கிறார்கள் இவர்கள்! எதெல்லாம் திருடுபோன வாகனங்கள் என்று ஒரு பட்டியலையே இதில் புகுத்தி இருக் கிறார்கள், காவல் துறையின் உதவியுடன். வண்டி வாங்க விரும்புவோர், தகவல்களை பிரஸ் செய்தால், அடுத்த ஐந்தாவது நிமிஷத் தில் அதன் ஜாதகமே தெரிந்துவிடும். திருடப் பட்ட வண்டி என்றால் 'ஆளைவிடப்பா' என்று தப்பித்துக் கொண்டு விடலாம்.

"ஆமாம். போட்டா போட்டி நிறைந்த சந்தை இது. கூடுதல் வசதிகளைக் கொடுத்த தால்தான் நாங்கள் இன்று நம்பர் ஒன்னாக இருக்கிறோம். எங்கள் மார்க்கெட், சாதா ரண மக்களையும் செல்போன் வைத்திருப் பவராக மாற்ற வேண்டும் என்ற கொள்கை யால், விரிவானது!" என்கிறார் பாஸ்கரன்.

"ஆரம்பத்தில் இருந்த கட்டணங்களை, போட்டாபோட்டி காரணமாக வெகு வாகக் குறைத்ததில், இந்த இண்டஸ்ட்ரியின் மொத்த நஷ்டம் எழுநூறு கோடி ரூபாய்க்கு மேல் போய்விட்டது என்ற செய்தி நமக்கு அவநம்பிக்கையைத் தருகிறதே?" என்று கேள்வி எழுப்பியபோது, "நாங்கள் அந்த நஷ்ட நிறுவனங்களின் பட்டியலிலேயே இல்லை. எங்கள் சந்தாதாரர்கள் இப்போது இரண்டு லட்சத்தைத் தாண்டிவிட்டார்கள்!" என்கிறார் பாஸ்கரன் தன்னம்பிக்கை நிறைந்த புன்னகையோடு.

— எஸ்.வி.[illegible]

படங்கள் : [illegible]

பாலகுமாரன்

22

# மனம் உருகுதே...

மனம் விசித்திரமானது. உள்மனம், வெளிமனம் என்று இரண்டு வகையாகச் செயல்படுவது. வெளிமனம் சுற்றியுள்ள மனிதர்களையும் விஷயங்களையும் அடையாளம் காணுவதற்கும், நினைவில் நிறுத்தி மறுபடியும் பேச்சுத் தொடர்ச்சியை ஏற்படுத்திக் கொள்வதற்கும் உதவி செய்வது. சாப்பிடுவது, குளிப்பது, நடப்பது போன்ற விஷயங்களை மிகக் கவனமாகச் செய்யப் பழக்கப்படுத்தப்பட்டது. ஆனால், உள்மனம் வேறு விஷயம். விசித்திரமான கனவுகளை அதுதான் இழுத்து வருகிறது. நாம் வெட்கப்படும் பொழுதோ, சந்தோஷப்படும் பொழுதோ அங்கிருந்துதான் உணர்வுகள் பீறிட்டு அடிக்கின்றன. குகையிலிருந்து வெளிப்படுகின்ற சிங்கம் போல, சில சமயங்களில் உள்மனம் செயல்படுகிறது.

'உங்களை நான் எங்கேயோ பார்த்திருக்கிறேன். உங்களைப் பார்த்தவுடன் எனக்குள் ஒரு ஸ்நேகம் ஏற்படுகிறது' என்று யாரோ ஒருவரை, பற்றிக்கொண்டு அது பேச ஆரம்பிக்கிறது.

இவரை எனக்கு வெகு நாளாகத்



தெரியும். இந்த இடத்தில் நான் வெகு நாட்களுக்கு முன்பு வாழ்ந்திருக்கிறேன். இந்த உடை, இந்த நிறம், இந்த உணவு எனக்குப் பிடிப்பதற்கு வெளிப்படையாக எனக்குக் காரணம் சொல்லத் தெரியவில்லை. ஆனால் ஏதோ அடிமனத்தில் ஒரு காரணம் இருக்கிறது என்று சொல்லுகிற விஷயங்களெல்லாம் உள்மன விஷயங்கள்தான். அதை வெளிப்படுத்த வெளிமனத்திற்கு வெட்கம் உண்டு. அது பூட்டி இழுத்து உள் மனத்தை அடக்கி வைக்கும். 'இதெல்லாம் வெளியே சொல்லாதே' என்று நாகரிகப் போர்வையில் சிக்கிக் கொண்டு அவஸ்தைப் படும். உள்மனம் திறந்து அதன் வழியே இயங்குபவர்களை சித்த புருஷர்கள் என்று சொல்வதுண்டு. அந்த சித்த புருஷர்களை பாவர், பேயர், பித்தர் என்று வர்ணிப்பார்கள். உள்மன வெளிப்பாடு என்பது ஒரு குழந்தையின் நடவடிக்கை போல, அது எந்தத் திட்டமிடுதலும் இல்லாமல், எந்தக் காரண காரியமும் இல்லாமல் செயல்படுவது.

உள்மனம் உக்கிரமானது. அதனால்தான் அதை பேய்மனம் என்றும் சொல்வதுண்டு. ஒன்றின் தொடர்ச்சியாக ஒன்று என்று யோசிப்பதை உள்மனம் செய்வதில்லை. அதில் எந்த வரைமுறையும், திட்டமிடுதலும் இல்லை. அது நாலா பக்கமும் அலைவதால் அதற்குப் பித்தருடைய மனம் என்றும் சொல்வதுண்டு.

சங்கரய்யர், எதிரே உட்கார்ந்திருந்த ராதாகிருஷ்ணனின் மகன் ராஜாராமனின் உள் மனதைச் சில தடவல்களில் திறந்துவிட்டார். ராஜாராமனின் வெளிமனம் நினைவிழந்தது. ஒருவித தூக்கத்தில் ஆழ்ந்தது. உள்மனம் விழித்துக் கொண்டு சம்மணம் போட்டு எதிரே உள்ளதைப் பார்க்கத் துவங்கியது. எதிரேயுள்ள சங்கரய்யரை உற்றுப் பார்த்தது. சங்கரய்யருக்கு உள்ளுக்குள்ளே இருப்பது யார். இந்த உடம்புக்குள்ளே இருப்பது என்ன என்பதை வெகு எளிதாக அந்த உள்மனம் கவனித்தது. அதைப் புரிந்துகொண்டது. அதன் தொடர்பாய் பேசத் துவங்கியது.



வெளியே, எங்கும் பிரகாசமாக இருப்பதே அவருக்குள் இருப்பதை ராஜாராமன் பார்த்தான். உலகம் முழுவதும் பிரகாசமயத்தில் தவித்துக் கொண்டிருக்க, அந்தப் பிரகாசம் சங்கரய்யரின் நெஞ்சுக்குள்ளும் இருந்தது. சங்கரய்யரின் நெஞ்சுக்குள் இருக்கின்ற பிரகாசத்தைப் பார்த்துவிட்டு, அதோடுதான் எனக்குத் தொடர்பு, அதோடுதான் எனக்குப் பரிச்சயம். அதற்கு வெளியே சுற்றிக் கொண்டிருக்கின்ற உடம்பைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இல்லை என்று ராஜாராமன் முடிவு

செய்தான்.

அந்த முடிவை அவன் உள்மனம் எடுத்தது.

'நீர்தானய்யா அது. அதுதானய்யா நீர்' என்று மிகப் பணிவோடும், அன்போடும் குதூகலத்தோடும் சொன்னது அது. சகலத்தையும் கண்டுபிடித்த குதூகலம்.

அப்படிப்பட்ட குதூகலத்தை ராஜாராமன் அனுபவித்ததே இல்லை.

சங்கரய்யருக்குள் தெரிந்த பிரகாசத்தைப் பார்த்து அதிலிருந்து கண் எடுக்க முடியாமல் ராஜாராமன் கிடக்க, 'உங்க அண்ணன் என்ன பேசறான் பார்' என்பது போல சுபத்ராவை சங்கரய்யர் பார்த்து, மறுபடியும் ராஜாராமனுக்கு வர, ராஜாராமன் சங்கரய்யர் செய்த அதே விஷயத்தை தானும் செய்ய முயன்று சுபத்ராவைப் பார்த்தான்.

சுபத்ராவுக்குள்ளும் அந்தப் பிரகாசம் தெரிந்தது. அவன் ஆச்சரியப்பட்டுப் போனான்.

'இது வேறல்லவோ, சுபத்ரா அல்லவோ. சுபத்ராவுக்குள் இப்படியொரு பிரகாசமா - சுபத்ரா இதுதானா' என்று தவிக்க ஆரம்பித்தான்.

சங்கரய்யருடைய பிரகாசம் வேறு மாதிரி இருந்தது. சுபத்ராவின் பிரகாசம் வேறு மாதிரி இருந்தது.

சங்கரய்யர் என்பது ஒரு பாதரசத்தை பளீரென்று அடித்தது போல நாலா பக்கமும் சிதறி இருக்கின்ற பிரகாசம். உள்ளிருந்து அலை அலையாய் வெளியே அன்பை வீசிக் கொண்டிருக்கிற பிரகாசம். சுபத்ராவோ ஒரு சின்ன குத்துவிளக்குச் சுடர் போலத் தெரிந்தாள். மிக அழகாக, அமைதியாக இருந்தாள். அவளுக்குள் எந்தத் தீர்மானமும், எந்த லட்சியமும், எந்த குணங்களும் இல்லாமல் வெறுமனே வெறும் விளக்கு வெளிச்சமாக இருந்தாள். அவளைப் பார்த்து ராஜாராமன் மிகப் பணிவாகக் கும்பிட்டான்.

'நீதானா... நீதான் சுபத்ராவா' என்பது போல் பார்த்தான். 'நல்லது, நல்லது' என்று தலையாட்டினான். கூப்பிய கையைச் சற்று இறக்கி சிரம் தாழ்த்தி அவளை மிகப் பணிவாக, ஒரு பெரிய மனுஷியை வணங்குவது போல் வணங்கினான்.

அருகே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்த ராதாகிருஷ்ணனுக்கு அந்தப் பணிவு ஆச்சரியமாக இருந்தது.

"ஒண்ணாம் நம்பர் குரங்கன். ஒரு வால்தான் பாக்கி. இந்த மாடிலேர்ந்து அந்த மாடிக்குத் தாவற பைத்தியம். தாவறதுக்கு முன்னாடி ஏதாவது வசனம் சொல்லிட்டுத் தான் தாவுவான். பார்க்கறபோதெல்லாம் இவன் எங்கயோ அடிபட்டுச் சாகப் போறான் அப்படின்னுதான் எனக்குத் தோணும்" என்று ரேவதியிடம் சொல்லியிருக்கிறார்.

ரேவதி அவசரமாக அவர் வாயைப் பொத்தி, "நம்ம குழந்தைய நாம அப்படி பேசவே வேண்டாம். ஒரு கால கட்டத்துல சரியாப் போகும் சும்மா இருங்கோ" என்று கண்டித்திருக்கிறாள்.

இப்பவும் அவனுடைய ஆட்டபாட்டங்கள்தான் ஞாபகம் வந்தது. இப்படிக் குனிந்து நமஸ்காரம் செய்வது ஆச்சரியமாக இருந்தது.

சுபத்ராவைப் பார்த்தியோ என்று சொல்வதற்குப் பதிலாக சங்கரய்யர் ஒரேயொரு வார்த்தையாய் 'சுபத்ரா' என்று சொல்லி நிறுத்தினார்.

**"நான் போனதுக்குப் பிறகு போலீஸ் ஸ்டேஷன் போவியா?"**
**"மாட்டேன்...! மாட்டேன்...!"**
**"பயந்துக்கிட்டுச் சொல்லாதேய்யா... பேரனா இந்த மாமூல் பணத்தை அவுங்ககிட்ட கொடுக்கச் சொல்லலாமேன்னு கேட்டேன்."**
**- சீர்காழி வி. ரேவதி**

அவன் மறுபடியும் சங்கரய்யரைப் பார்த்தான்.

'ஆமாம் சுபத்ரா' என்று தலையாட்டிச் சொன்னான்.

மறுபடியும் சங்கரய்யர் 'சுபத்ரா' என்று சொன்னார். 'சுபத்ராவைப் பார்' என்ற உத்தரவு அதில் இருந்தது.

ஆமாம். சுபத்ரா என்று சொல்லிவிட்டு மறுபடியும் சுபத்ராவைப் பார்த்தான்.

சுபத்ராவுக்கும் அவனுக்கும் பல ஜென்மத் தொடர்புகள் இருந்தன. சுபத்ராவை அவன் உள்ளங் கையில் வைத்துக் கொண்டாடியிருப்பதுபோல் தோன்றியது. சுபத்ரா சட்டென்று அவன் கண்களுக்கு ஒரு பசுங்கன்று போல காட்சியளித்தாள். அவளுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு ராஜாராமன் கொஞ்சினான்.

தான் எப்போதோ கொண்டாடிய பசுங்கன்றே தனக்கு இப்பொழுது தங்கை என்பதாய்ப் புரிந்துகொண்டான். அதே ஆச்சரியத்

துடன் சங்கரய்யரைப் பார்த்தான்.

சங்கரய்யருக்கு அவன் என்ன நினைக்கிறான் என்பது புரிந்தது. அவரும் ஆம் என்று தலையாட்டினார்.

ராஜாராமனின் ஆச்சரியம் இப்பொழுது சங்கரய்யர் மீது பரவிவிட்டது. இதெல்லாம் காண்பிக்க முடியுமா உம்மால் என்பது போல் வியப்பு தோன்றியது.

'நீர்தான் ஓய் அவர். அவர்தான் ஓய் நீர்' என்ற வாக்கியத்தை மறுபடியும் அவர் மீது தூவினான்.

சங்கரய்யர் மிகச் சாதாரணமாக அந்த வாக்கியத்தை எடுத்துக்கொண்டார். 'மேற்கொண்டு பேசு' என்பது போல் அவனையே பார்த்தார்.

"சில சமயம் பூமியிலேயே ஆகாசத் தாமரை பூக்கிறது."

அடுத்த வாக்கியத்திற்கு ராஜாராமன் தாவினான்.

"ஆனா, ஆகாசத் தாமரை பூத்திருக்கிறது



பூமியில இருக்கறவாளுக்குத் தெரியலை."

ஒரு நாடக நடிகன் போலக் கூடுதலான பாவனையோடு சங்கரய்யரைப் பார்த்துச் சொன்னான்.

சங்கரய்யர் 'ஆமாம்' என்று தலையாட்டினார்.

சங்கரய்யரிடமிருந்து பார்வையை விலக்கி சுபத்ராவை நோக்கிச் செலுத்தினான். சுபத்ரா எதுவும் தெரியாதவளாய் உட்கார்ந்திருந்தாள்.

'இவளுக்குச் சொல்லி பிரயோஜனம் இல்லை' என்பது போல் சற்று நகர்ந்து நாற்காலியில் அமர்ந்திருக்கின்ற மாமியைப் பார்த்துச் சிரித்தான். மாமியும் பதிலுக்குச் சிரித்தாள்.

அவள் இந்த மாதிரி பல காட்சிகளை கண்டிருப்பாள் போலிருக்கிறது. எந்தப் பதற்றமுமில்லாமல் அவனைப் பார்த்தவாறே உட்கார்ந்திருந்தாள்.

"இவர் ஆகாசத் தாமரை, உங்களுக்குத் தெரியுமோ" என்று ராஜாராமன் சங்கரய்யரைச் சுட்டிக்காட்டி கேட்டான்.

மாமி 'தெரியும்' என்பதுபோல் தலையசைத்தாள்.

"நீங்க நிறைய தாமரையில பூஜை பண்ணியிருக்கேள். அதனாலதான் உங்களுக்குத் தாமரையே கிடைச்சுருக்கு. ஆகாசத் தாமரை" என்று மறுபடி சொல்ல மாமி சரியென்று தலையசைத்தாள்.

ராஜாராமன் பயமின்றி இருந்தான். ஆனால், மெல்லியதாய் சங்கரய்யரின் பிடி அவன் மீது இருந்தது. அவனுக்கு உடுப்புகளையெல்லாம் கழட்டி விட வேண்டும் என்ற ஆசை இருந்தது. குத்துக்காலிட்டு உட்கார்ந்துகொள்ள வேண்டும் போல் தோன்றியது. ஆனால், இந்த உடுப்புகளோடு குத்துக்காலிட்டு உட்கார்ந்து கொள்ள முடியாது. கோமணம் மட்டுமே கட்டிக் கொண்டிருந்தால்தான் அம் மாதிரி உட்காருவதற்கு முடியும். கோமணம் மட்டுமே கட்டிக் கொண்டிருப்பது என்பது மிகச் சுதந்திரமான ஒரு நிலைமை. சந்தோஷமான ஒரு ஸ்திதி ஆரோக்கியமான ஓர் உணர்வு. உடுப்புகள்தான் மிகப் பெரிய சுமை. நாகரிகம் மிகப் பெரிய அவஸ்தை. கடமைகள் எல்லாமே கைகால்களில் கட்டப்பட்ட சங்கிலி. மொழி என்பது மூளைக்குள் சொருகப்பட்ட துருப்பிடித்த ஆணி. தெய்வம் என்கிற நினைப்பும், அதைத் தொழுதலும் வேதனையான இடம். தொழுதல் என்பது வீண் வேலை. எவ்வளவு காலம் ஒருவன் தொழுது கொண்டிருப்பது. அது எத்தனை அயர்ச்சியான விஷயம். தொழுதலை ச்சி.. என்று வேகமாக உதறிவிட வேண்டும். அது எப்பொழுது முடியும்.

நானே தொழப்பட வேண்டியவனாக மாறிவிட்டால்தான் முடியும். தானே தெய்வமாக நின்றுவிட்டால்தான் முடியும். அவனுக்குள் அப்படித்தான் ஒரு சந்தோஷம் பரவிக்கிடந்தது. அப்படித்தான் ஒரு கம்பீரம் நிற்கிறது. அப்படித்தான் உற்சாகம் கொப்பளிக்கிறது. அப்படித்தான் ஒரு விஸ்வரூபம் மனம் எடுத்திருக்கிறது. எல்லாவற்றையும் கனிவோடு, ஒரே பார்வையாய், வெறும் பார்வையாய், எந்தப் பிரிதலும் இல்லாத பார்வையாய், எந்தப் பிளவுப்படலும் இல்லாத பார்வையாய் வேண்டும்; வேண்டாம் என்ற விருப்பு வெறுப்பில்லாத பார்வையாய் மனம் ஏங்கத் துவங்கிவிட்டது.

## பதினாறு அடி...?

ஆஸ்கர் விருது பெற்ற ஸ்பீல்பெர்க்கின் மூத்த மகன் மேக்ஸ் ஸ்பீல்ஸ்பெர்க், அப்பாவின் காலடியைப் பின்பற்றப் போகிறார். 'ஸ்னாப் ஷாட்' என்றொரு திரில்லர் படத்தை எடுத்திருக்கிறார் இவர். நியூயார்க் பிலிம் அகாடமி நடத்திய பயிற்சிக்காக, எடுக்கப் பட்டிருக்கும் படத்தை வெளியிடப் போவதில்லையாம்.



- ஜி

அடேய்... இப்படியும் ஓர் இயக்கம் எனக்குள் இருக்கிறதா...!

ஆச்சரியமாக இருந்தது.

அவன் இயங்கினான். அவன் இயங்குவதை வேடிக்கையும் பார்த்தான்.

இதுவல்லவோ தொழுதல்! இது ஏன் இதுவரை இல்லாமல் போயிற்று. இது ஏன் புரியாமல் போயிற்று!

அவன் வியந்தான்.

அடாடா... அடாடா... என்று தனக்குத் தானே உள்ளுக்குள் பார்த்து வியந்தான்.

''என்ன' மறுபடியும் சங்கரய்யர் கேட்டார்.

''சகலமும் சரி. எல்லாம் சரி. இங்கு நடப்பது அத்தனையும் சரி. நல்ல வெயில் ரொம்ப அவசியம். அப்போதான் நல்ல மழை பெய்யும். துன்பம் ரொம்ப அவசியம். அப்போதான் இன்பம் என்னன்னு தெரியும். கோபம், ஆத்திரம், அருவை ரொம்ப அவசியம். அப்போதான் நல்லது என்னன்னு புரியும். பேய், பிசாசுகள் முக்கியம். அப்போ தான் தெய்வத்தின் அருமை தெரியும்.

உலகம் இரண்டானது. இரண்டான விஷயங்கள் ஒன்றாவதுதான் வாழ்க்கை. அதுதான் லட்சியம். அதற்குத்தான் நடந்து கொண்டிருக்கிறோம். தனித் தனியாய், தனித் தனியாய் எந்த சம்பந்தமுமின்றி, கும்பல் கும்பலாய் நடந்து கொண்டிருக்கிறோம்.''

ராதாகிருஷ்ணன் ஆச்சரியப்பட்டார்.

''ஏதோ பேச்செல்லாம் உளறலாக இருக்கும். எந்தக் கேள்வி கேட்டாலும் சொதப்பலாகத்தான் பதில் சொல்வான். அவன் இப்படிப் பேசுகிறானே. இது என்ன நல்ல விஷயமா, இல்லை. இதுவும் இன்னொரு சொதப்பலா. இன்னொரு குழப்படி கேஸா?''

அவர் வியப்போடும், கவலையோடும் மகனைப் பார்த்தார்.

அவர் பார்ப்பது அவனுக்குத் தெரிந்து விட்டது போல அவன் மெல்ல, திரும்பி அவரைப் பார்த்தான். பிறகு சங்கரய்யரைப் பார்த்தான். உதடு பிதுக்கினான்.

'என்ன' மறுபடியும் சங்கரய்யர் கேட்டார்.

''பூர்வஜென்ம கர்மா'' என்று சொன்னான்.

''என்ன?'' மறுபடியும் கேட்டார்.

'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். போன ஜென்மத்துல பண்ணது இந்த ஜென்மத்துல வரும். இந்த ஜென்மத்துல பண்றது அடுத்த ஜென்மத்துக்குப் போகும். அடுத்த ஜென்மத்துல பண்றது அதுக்கு அடுத்த ஜென்மம் போகும். ஆஹா.. எங்க போய் நிக்கப் போறோம். என்னிக்கு நிக்கப் போறோம்.''

அவன் கவலையோடு தலை குனிந்து கொண்டான்.

அவன் கண்கள் கலங்கியிருந்தன.

ரேவதி கண்ணீர் வடித்தாள்.

''என் புள்ள என்னென்னமோ பேசறதே, பகவானே போறும்டா இந்த ஆட்டம். அது குழந்தையாவே இருக்கட்டுமடா. அவனை எதுக்கு இப்படி ஆட்டி வைக்கற'' என்று எல்லாம் வல்ல இறைவனை நோக்கிக் கை கூப்பினாள்.

சங்கரய்யர் அவளை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தார்.

சுபத்ரா வியப்போடு அண்ணனை கவனித்துக்கொண்டிருந்தாள்.

அவளுக்குள் அண்ணாவின் செய்கைகள் மெல்லிய சிரிப்பைக் கொடுத்தன.

(தொடரும்)




திருவள்ளூர் நகரை விட்டு ஐந்து கிலோ மீட்டர் தள்ளியே அமைந்திருக்கிறது திருவள்ளூர் ஆட்சியர் அலுவலகம். புதிதாக உருவான மாவட்டம் என்பதால், புதிய கட்டடத்தில் அமைதியாக பைல்களைப் புரட்டிக் கொண்டிருந்தார் ஆட்சியர் சிவசங்கரன். "புதிதாக உருவான மாவட்டம் என்பதால், துவக்கத்தில் பிரச்னைகள் ஏதும் இருந்ததா?"

"இல்லை" என்றார் ஆட்சியர். "பெரிய மாவட்டங்களைப் பிரித்து நிர்வாகத்தை மேற்கொள்ளும்போது, சில பயன்கள் கூடுதலாகவே கிடைக்கின்றன. எல்லைகள் குறுகும்போது, மக்கள் குறைகளை நேரடியாகப் பார்க்க வாய்ப்பு அதிகமாகிறது. மக்களும் குறைகளை முன் வந்து தெரிவிக்க வாய்ப்பு ஏற்படுகிறது. நாமும் அடிக்கடி கவனம் செலுத்த முடிகிறது."

சென்னையை அடுத்த அம்பத்தூர், ஆவடி, பூந்தமல்லி எல்லாம் கூட திருவள்ளூர் மாவட்ட ஆட்சியரின் கீழேதான் வருகின்றன. "539 கிராமங்கள். 14 ஒன்றியங்கள் என்று தமிழ்நாட்டிலேயே பெரிய நகராட்சியாக இருப்பது அம்பத்தூர்" என்கிறார் சிவசங்கரன்.

"போரூர் பேரூராட்சியிலும், திருவள்ளூர் நகராட்சியிலும் மக்கும் பொருள் _ மக்காப் பொருள் என்று வீடுகள் அளவிலேயே குப்பை – கழிவுப் பொருட்களைப் பிரித்து விடும் முறையை அமலாக்கி இருக்கிறோம். மக்கும் பொருட்களை உரமாகத் தயாரிக்கும் பணியை, போரூரில் பரிசோதனை அடிப்படையில் துவங்கி இருக்கிறோம்."


• சிவசங்கரன்




• டான்வா சிறப்புப் பயிற்சி

மாவட்டம் சுற்றுச் சூழல் நிர்வாகத்தில் வெற்றி காண வேண்டுமானால், திடக் கழிவுகள் நிர்வாகம் ஒவ்வொரு நகருக்கும் ஒரு பிரச்னையாக இருத்தல் கூடாது. அதைச் சாமர்த்தியமாகச் சமாளிக்க, நகராட்சிகள் போதிய அக்கறை காண்பிக்கும்போது தலைமை அதற்கு உறுதுணையாக இருந்து செயல்பட வேண்டும் என்ற கருத்து வெளிப் பட்டது.

**“ச**ட்டம் – ஒழுங்கு இங்கு ஒரு பிரச் னையாக இல்லை. அந்த வகையில் இது அமைதியான மாவட்டம். மணல் திருட்டு அதிகம் இருந்தது. அது இப்போது ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டு விட்டது. பதினோரு கோடி ரூபாயில், திருவள்ளூர் நகருக்குக் குடிநீர்த் திட்டம் செயல்படுத்தி வருகிறோம். இருபது வருடத்துக்கான தொலை நோக்குத் திட்டமாக இதை அமைத்திருக்கிறோம். திருத்தணி நகரில் நாலு கோடி ரூபாய் மதிப்புள்ள குடிநீர்த் திட்டம் ஒன்றை முடித் திருக்கிறோம்.

“மற்ற மாவட்டங்களைப் போல நதிகள் இங்கே கிடையாது. நிலத்தடி நீர்தான். குடிநீர், விவசாயம் எல்லாவற்றுக்கும் ஏரித் தண்ணீர்தான். 3000க்கு மேற்பட்ட ஏரிகள் இங்கே இருக்கின்றன. மழை நீர் சேமிப்பு முறையைப் பல இடங்களில் அறி முகப்படுத்தி வருகிறோம். இந்த அலுவலகக் கட்டடம் தொடங்கி, அரசுக் கட்டடங்கள் பலவற்றி லும், மழை நீர் சேமிப்புக்கான வழிவகைகளை அமல்படுத்தி இருக்கிறோம். புதிய கட்டடங் களுக்கு பிளான் சாங்ஷன் கொடுக்கும்போது, மழை நீர் சேமிப்புக்கு வழிவகை செய் திருக்க வேண்டும் என்று விதிகள் கொண்டு வந்திருக்கிறோம்.”

**ப**யோ காஸ் தவிர, சூளா அடுப்பு முறையைப் பிரபலப் படுத்தியதற்காக, ஊரக வளர்ச்சித் துறை இயக்குநர் எழுதியிருக்கும் தனிப்பட்ட கடிதம், கலெக்டரின் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி யைப் பாராட்டுகிற வகையில் இருக்கிறது:

“2001 – 2002ஆம் ஆண்டில் 20அம்சத் திட்டங்களில் ஒன்றான மேம் படுத்தப்பட்ட சூளா திட்டத்தில், மார்ச் 2002 முடிய மாவட்டம் தோறும் பெற்ற முன் னேற்ற அறிக்கைகளை ஆய்வு செய்ததில், தங்கள் மாவட்டம் சிறப்பாகக் குறியீட்டு இலக்கினை அடைந்திருக்கிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளு கிறேன். சிறந்த முறையில் பணியாற்றி, ஒத் துழைப்பு வழங்கியமைக்கும், 100 சதவிகித இலக்கை அடைந்திட்டமைக்கும் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள் கிறேன்.”

“சமூகக் காடு வளர்ப்புத் திட்டத்தில் 5000 பனை மரங்கள் நட்டிருக்கிறோம். இந்த அலுவலக வளாகத்தை ஒட்டியே நிறைய வைத்திருக்கிறோம்” என்றார் ஆட்சியர்.

இரண்டு சுய உதவிக் குழுக்களில், கம்ப்யூட்டர் பயிற்சி மையம் தொடங்கி யிருக்கிறார்கள். 1351 குடும்பங்களுக்குச் சுய தொழில் செய்ய 3.90லட்சம் ரூபாய் கடன் வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். 152 சுய

• நெல் பூஞ்சாள விதை நேர்த்தி



உதவிக் குழுக்களின் சுழல்நிதி இப்போது 132 கோடி ரூபாயை எட்டி விட்டது.

"மகளிர் சுய உதவிக் குழுக்கள் எல்லா மாவட்டங்களிலும் இப்போது சிறப்பாக இயங்கி வருகின்றன. சமீப காலத்தில் ஏற்பட்ட முக்கியத் திருப்பம் இது. கூடுமானவரை, குடும்பங்களை வறுமைக் கோட்டுக்குக் கீழேயிருந்து விடுவிக்க, அந்தந்தப் பகுதி மக்களின் ஆர்வத்துக்கு அரசு அளித்து வரும் ஆதரவும், அங்கீகாரமும் இதில் பெரும் பங்கு வகிக்கிறது. மாவட்டத்தைப் பொறுத்து இவற்றின் அளவும், வெற்றியும் அமைகின்றன.

"பள்ளிப்பட்டு, புதுட்டூர்பேட்டை மகளிர் சுய உதவிக் குழுக்கள் நேரிடையாக ஆவின் பண்ணைக்கு நாள் தோறும் 500 லிட்டர் பால் கொடுக்கிறார்கள். கடம்பத்தூர் ஒன்றியத்தில் 20 ஏக்கர் தரிசு நிலத்தைக் கால்நடைத் தீவனம் வளர்க்க, சுய உதவிக் குழுக்களிடம் ஒப்படைத்து, மாடுகள் வாங்கவும் ஏற்பாடு செய்திருக்கிறோம்" என்றார் கலெக்டர் சிவசங்கரன்.

ஆனால் இவை எல்லாவற்றையும்விட, 'டான்வா' திட்டத்தின் கீழ், நிலங்கள் வைத்திருக்கும் பெண்கள் நவீன விவசாயத்தைக் கையாளுவது எப்படி என்று பயிற்சிகள் கொடுத்து வருவது வெற்றி தேடித் தந்திருக்கிறது.

"எப்படிச் செய்கிறீர்கள் இதை?"

"குழுக்களை நாங்கள் தேர்ந்தெடுத்து விட்டு, பிறகு தேவையான பயிற்சிகள் கொடுக்கிறோம்."

கைவினைப் பொருட்கள், பேப்பர் கப், சணல் பொருட்கள் என்று, மகளிர் குழுக்களின் தயாரிப்புகளை விற்பனை செய்ய, அங்காடி வளாகம் ஒன்று கட்டப்பட்டு வருகிறது. இந்த ஆண்டு கட்டடம் முடிந்து விடுமாம்.

குறைதீர்க்கும் நாளன்று சுமார் ஐந்நூறு முதல் எழுநூறு விண்ணப்பங்கள் வரை ஆட்சியருக்கு வருகின்றன. திங்களன்றுதான் என்றில்லை. குறைகளைத்தெரிவிக்க எல்லா நாட்களிலுமே ஆட்சியரை வந்து பார்க்கிறார்கள். பார்ப்பதோடு நின்று விடுவதில் லை. உரிமையோடு கேட்கிறார்களாம். அடிப்படை வசதி, வங்கிக் கடன், தொகுப்பு வீடுகள் என்று பெரும்பாலான வேண்டுகோள்கள் அமைகின்றன.



• மண் மாதிரி எடுத்தல்...

"பலரையும் நேர்முகப் பேட்டிக்கு வரச் சொல்லுகிறோம். தொழில் தொடங்குவதாக இருக்கும்பட்சத்தில், தகுதி இருந்தால் மட்டுமே, வங்கிகளுக்குப் பரிந்துரை செய்கிறோம்" என்கிறார் சிவசங்கரன்.

வாரா வாரம், எல்லாத் துறைகளையும் சேர்ந்த அதிகாரிகளைக் கூட்டம் கூட்டி, சந்திக்கிறார் ஆட்சியர். நிலுவையில் ஏதேனும் திட்டங்கள் இருந்தால் அவற்றை முடித்தாக வேண்டும் என்று வற்புறுத்துகிறார். சிக்கலான பிரச்னைகளில், விதி மீறல்களாக எதையும் செய்துவிடுவதில்லை என்பதில் குறியாக இருக்கிறார்...

பழவேற்காடு ஏரி, இந்த மாவட்டத்தில் வனத்துறையின் பராமரிப்பில் இருக்கிறது. சுற்றுலாத்தலமாக இதை உருவாக்க ஆட்சியர் முயற்சிகள் மேற்கொண்டு வருகிறார்.

"மாவட்ட அளவில், அரசாங்கத்தின் பிரதிநிதி அல்லது அரசின் முகம் – ஆட்சியர்தான். உங்களைப் பொறுத்தவரை, இந்தப் பதவியை எப்படிப் பார்க்கிறீர்கள்?"

"மக்கள் சிரமப்படக் கூடாது. அதிகாரிகளை மக்கள் எளிதில் வந்து பார்க்க உதவ வேண்டும். மாவட்ட நிர்வாகம் என்பது அனைத்து மக்களுக்கும் பயன்படும் அளவில், வாய்ப்புகள் உருவாக உதவ வேண்டும். அதுதான் சிறந்த நிர்வாகம். அரசாங்கம் தன்னுடைய வாயில்களைத் திறந்து வைத்திருக்க வேண்டும்!" என்கிறார் திருவள்ளூர் கலெக்டர் சிவசங்கரன்.

சந்திப்பு: சாருகேசி

28

வாஸந்தி

# பொய்யில் பூத்த நிஜம்

“அப்புறம் என்ன ஆச்சு ?” என்றாள் சகுந்தலா கொட்டாவியை அடக்கியபடி. பரத்திடமிருந்து எந்த ஒலியும் வரவில்லை. அவளுடைய தலையணையில் முகத்தைக் கவிழ்த்து உறங்கியிருந்தான். அவனை மெள்ளத் தூக்கி அவனது கட்டிலில் கிடத்தினாள். கவிழ்ந்திருந்த கன்னம் சிவந்திருந்தது. வியர்வையில் ஒட்டியிருந்த சுருண்ட முடியை அவள் மெல்ல நகர்த்திக் குனிந்து நெற்றியில் முத்தமிட்டாள். இப்போது ரெண்டு மூன்று வார்த்தைகள் கூட்டி அவன் பேச ஆரம்பித்திருப்பது, அவளுக்கு அவளது வாழ்வில் ஏற்பட்ட மிகப் பெரிய திருப்பம்போல இருந்தது. திக்குத் தெரியாமல் நாற்சந்தியில் நிற்கையில் திடீரென்று ஒரு தோழனை சந்தித்ததுபோல. அவன் பேச்சையெல்லாம், அதற்குப் பின்னால் இருக்கும் எண்ணங்களையெல்லாம், அவள் புரிந்து கொள்வாள் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அவனுடன் இருக்கும் நேரத்தையெல்லாம் பேசித் தீர்த்தாள். நடு நடுவில், ராஜாவின் புகைப்படம் கண்ணில் படும்போது அவளைத் திருப்திபடுத்துவதற்காகவே சொல்வது போல் அவன் “அப்பா எங்கே? கா...ணும்:” என்று கை விரிக்கும்போது, ‘நான் இருக்கேன் கவலைப்படாதே’ என்று சொல்வதுபோல அவள் கற்பித்துக் கொள்வாள். சமேலியுடன் பரத் ஹிந்தி பேசினான். முன்னாவின் அறிவின் சூட்சுமத்திற்குத் தான் தான் காரணம் என்று சமேலி மார்தட்டிக் கொள்வது வேடிக்கையாக இருக்கும். ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஒன்றரை வயதில் பரத்துக்கு நிறைய பக்குவம் இருப்பதாகத் தோன்றிற்று. இரண்டு வயதிலேயே அவனைப் பள்ளிக்கு அனுப்ப வேண்டியிருக்கலாம் என்று



அவள் நினைத்துக் கொண்டாள். விண்ணப்பத் தாளில், தந்தையின் பெயர் என்னும் இடத்தில் வெற்றுக் கோடிழுத்து, ஸிங்கிள் மதர், என்று எழுத வேண்டியிருக்கும் என்று நினைத்துக் கொண்டாள். அவள் தனியாகத்தான் குழந் தையை வளர்க்கிறாள் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இதில் பாசாங்குத்தனம் எதற்கு? ஆனால் விதிமுறைகள் பாசாங்குத் தனம் நிறைந்தவை. தகப்பன் பெயர் இல்லா மல் குழந்தையைச் சேர்த்துக் கொள்ள மாட் டார்கள்.

அவள் செய்தி கேட்கும் எண்ணத்தில் டீ.வி.யை ஆன் செய்தாள். ஏதோ தமிழ் சானல் காட்சியளித்தது. ஏக நகையும் அகல ஜரிகைக் கரை கொண்ட பட்டுப் புடவையும் அணிந்த ஒரு பெண், இழைய இழையப் பாடிக் கொண் டிருந்தாள் 'மறவேன் மறவேன் என்று வேலின் மேல் ஆணையிட்ட மன்னவர் மறந்தாரோ?'

சகுந்தலா திடுக்கிட்டாள். உலகத்து எல் லாப் பெண்களுக்கும் எல்லா யுகத்திலும் அடிப்படையில் ஒரே பிரச்னை என்று தோன்றிற்று. நம்பிக்கைத் துரோகம். அறிந்தோ அறியாமலோ, நினைவிருந்தோ நினை வில்லாமலோ. புராண காலத்தி லிருந்து வரும் கதைகள், துக் கங்கள், ஏமாற்றங்கள்.

கதைகளில் எந்த மாற்றமும் இல்லை. சரித்திரம் மறுபடி மறுபடி திரும்பும் என்பதுபோல. மனிதன் மாறமாட்டான் என்ற நிச்சயத்தில். உல கத்து இதிகாசங்கள் எல்லாமே நம்பிக் கைத் துரோகம் என்ற படிமத்தைச் சுற்றியே, பொருளை ஆதாரமாகக் கொண்டே பின்னப்பட்டிருக்கின்றன, என்கிற ஞானோதயத்தில் தன் மனசில் இப்போது நிம்மதி ஏற்பட்டுவிட்டதாக அவள் நினைத்துக் கொண்டாள். ஆனால் சுலபத்தில் வராத நிம்மதி. பல இரவுகள் காம்போஸ் விழுங்கியும் வராத தூக்கம், மறுநாள் கண்ணுக்கு அடியில் தொங்கும் பைகளில் மறைந் திருக்கும்.



'மறவேன் மறவேன் என்று...' அந்தப் பெண்ணின் குரலிலிருந்த உருக்கம் அவ ளுடைய அலங்காரத்துக்குப் பொருத்த மில்லாமல் இருந்தது. சோனியாவை இரண்டு கர்நாடக சங்கீத பெண் பாடகிகளின் கச்சேரிக்கு அழைத்துச் சென்றபோது, சோனியா கேட்டாள்.

"ரொம்பப் பணக்காரர்கள் தான் கர்நாடக சங்கீதம் கற்றுக் கொள்ள முடி யுமா என்ன? அவர்களுடைய டிரெஸ் ஸைப் பார்த்தால் வர்க்க பேத பறை சாற்றல் மாதிரி இருக்கிறது."

சோனியாவின் சிந்தனைக் கோணத் தைக் கண்டு அன்று சிரிப்பு வந்தது. வைரமும் பட்டுமாக ராஜாவின் அம்மா நின்றபோது, தனக்கு அதே மாதிரி எண் ணம் எழுந்ததாக சோனியாவிடம் சொன்னபோது, அவள் "அப்படிப் பட்ட எண்ணம் உனக்கு ஏற்பட வேண் டும் என்பதுதான் அலங்காரம் செய்து

கொள்பவர்களின் எண்ணம்" என்றது குரூரமான விமர்சனமாகத் தோன்றிற்று. சமேலி அன்று பரத்தைப் பார்த்துக் கொள்ள வீட்டில் தங்கி யிருந்ததால், கச்சேரி முடிந்ததும் இருவரும் வெளியில் சாப்பிடச் சென்றார்கள். தென்னிந் திய பதார்த்தங்களை அளித்துவந்த 'கோவில்' ரெஸ்டாரன்ட் இப்போது செயல்படவில்லை என்பது சோனியாவுக்குப் பெரிய வருத்தமாக இருந்தது. அதை மறக்க இருவரும் 'காஞ்சி' ஓட்டலுக்குச் சென்றார்கள். தென்னிந்தியர் களைவிட, வட இந்தியர்கள் அங்கு அதிகமாக இருந்தது கண்டு சகுந்தலாவுக்குச் சிரிப்பு வந்தது.

"மதராஸிகள் பஞ்சாபி டாபாவுக்குப் போகிறார்கள், வடக்கத்திக்காரர்கள் இட்லியும் பிஸிபேளாவும் சாப்பிட ஆசைப்படுகிறார்கள்."

சோனியா சிரித்தாள். "சாப்பாடு மூலமாகத் தான் ஒருமைப்பாடு வரமுடியும்."

"காதலும் மலரும்" என்றாள் சகுந்தலா. "நா ராஜாவை ஒரு பஞ்சாபி டாபாவிலேதான் சந்திச்சேன் தெரியுமோ?"

சோனியா அவளைக் கூர்ந்து பார்த்தாள்.

"ராஜாவைப் பத்தி ஏதேனும் தகவல் உண்டா? உன்னோடு தொடர்பு வெச் சிருக்கானா?"

சகுந்தலா உதட்டைப் பிதுக்கினாள். "தொடர்பு இருக்கக்கூடாதுன்னு தானே இங்கேயிருந்து பயந்து கொண்டு ஓடினான்?" என்றாள் மெல்லிய சீற்றத்துடன். "தொடர்பு இனிமேயும் இருக்கக்கூடாது என்கிற முயற்சி கள் நடக்கிற மாதிரி இருக்கு."

"எப்படிச் சொல்றே?"

"அவனுக்குக் கல்யாணம் பண்ண முயற்சி கள் நடக்கிறதாம்."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"எப்படியோ தெரியும் போயேன்!" என் றாள் சகுந்தலா அலுப்புடன்.

"கல்யாணம் நடந்தாலும் நான் என்ன செய்ய முடியும்? சட்டப்படி அவன் குற்ற வாளி இல்லே."

"அவனுக்கு அப்ப நினைவே திரும்பல் லேன்னு அர்த்தம். நினைவு திரும்பியிருந்தா அப்படிச் செய்யமாட்டான் சக்கு!"

"எனக்குத் தெரியாது. எதை நம்பறதுன்னு புரியல்லே. எனக்குச் சில சமயம் அர்த்த மில்லாம அந்த டாக்டர் சென் குப்தா மேலக் கோபம் வருது. ஞாபகம் மெல்ல மெல்லத் திரும்பும்னார். திரும்பாவிட்டாலும், மறுபடி காதல் மலர வாய்ப்பிருக்குன்னு ஜோக் அடிச் சார். இப்ப பரத்தே சொல்ல ஆரம்பிச்சுட் டான், 'அப்பா காணும்'னு. நான் அன்னிக்கு சொல்லல்லே, நா ராஜாவைக் காணாம போக் கிட்டேன். ஐ ஹாவ் லாஸ்ட் ஹிம்."

இப்போதெல்லாம் கண்களிலிருந்து நீர் பெருகாதது அவளுடைய தனிப்பட்ட வெற்றி

"பீச்சுல ரொம்ப நாளா காதலிச்சு இன் னிக்குக் கல்யாணம் பண்ணிக்கிற ஜோடி இது... தெரியுமா?"

"ஆசீர்வாதத்துக்கு அட்சதைக்குப் பதிலா சுண்டலை விநியோகிச்சபோதே அப்படித் தான் இருக்கும்னு நினைச்சேன்!"

- அம்பை தேவா

போல் இருந்தது. மனசு மோன நிலையை எட்டிவிட்டது போலிருந்தது.

"பரத் இப்பல்லாம் புதுசு புதுசா வார்த்தை கள் பேசும்போது எப்படியிருக்கு தெரியுமா சோனியா? அது என்னுடைய சாதனைபோல இருக்கு. மகாபாரதத்திலே சகுந்தலை சொன்ன மாதிரி, ராஜாவுடைய ஃபோட்டோவைப் பார்த்துச் சொல்றேன்." என்று சகுந்தலா நாட கப் பாணியில் ஆங்கிலத்தில் சொன்னாள் - "நீயில்லாமலே துஷ்யந்தா, என் மகன் இப் புவியை ஆள்வான்!"

இருவரும் வாய்விட்டுச் சிரித்தபோது சோனியாவின் கண்களில் நீர் நிறைந்திருந்தது.

சோனியா அவள் கைகளை ஆதரவாகப் பற்றினாள். "ராஜா கல்யாணம் செய்து கொண் டால், உன் குழந்தை மூலமே நீ சட்டப்படி கேள்வி எழுப்பலாம் சக்கு!"

"எதுக்கு?" என்றாள் சகுந்தலா ஆத்திரத் துடன். "பணத்துக்கும், சொத்துக்குமா? நா செய்யமாட்டேன் அதை. அவன்தான் தகப் பன்னு நிரூபிக்க டி.என்.ஏ. டெஸ்ட் பண்ணச் சொல்வார்கள். நா எந்த ஆதாயத்தையும் எதிர் பார்த்து அவன்மேல் காதல் கொள்ளல்லே. என்னையே நான் கேவலப்படுத்திக்க மாட் டேன். நா கோர்ட்டுக்குப் போனா, அது ராஜாவையும் கேவலப்படுத்தற மாதிரி. அவன் கல்யாணம் செய்துக்கற பெண்ணுக்கு ஆயுசு முழுக்க தண்டனை கொடுக்கற மாதிரி - அவ செய்யாத தப்புக்கு! நா மாட்டேன் சோனியா - என்னாலே என் பிள்ளையை வளர்க்க முடியும் - யாருடைய உதவியும் இல்லாம."

பிறகு இலேசாகப் புன்னகைத்தபடி - 'நீ இல்லாமலே துஷ்யந்தா' என்று ஆரம்பித்தாள்.

அன்றுதான் சோனியா அவளுக்கு தியானத்தைப் பற்றிச் சொன்னாள். 'தியானம் பழகு. அலைபாயும் மனசு நிர்மலமாகும்' என் றாள். "பதினைந்து நிமிஷங்கள் புருவ மத்தியில் கவனத்தைக் கூட்டி மனதை ஒருமித்து, பீட்டா எண்ண அலை வட்டத்திலிருந்து ஆல்ஃபா எண்ண அலைச் சுழலுக்கு வரும்போது, மனம் உன் வசப்படும், நினைத்தது நடக்கும்."

தனக்கும் தியானத்துக்கும் கொடுப்பினை இல்லை என்று சகுந்தலா விரைவிலேயே முடி வுக்கு வந்தாள். ஐந்து நிமிஷம் தியானத்துக்குள் மனசு குரங்காட்டம் ஆடிற்று. அதுவரை நினைவில் வராத விஷயங்களைத் தாவிப்



பிடிக்க ஓடிற்று. கைக்குப் பிடிபடாத விளையாட்டுச் சிறுவனைப் பிடித்து வருவதுபோல், மனத்தின் பின்னால் ஓடி இழுத்து வருவதற்குள் களைத்துப் போயிற்று. 'தியானத்தினால் என் வாழ்வு மாறப் போவதில்லை, இங்கே என்ன எழுதியிருக்கோ அதுதான் நடக்கும், என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் பாட்டியின் சாயலில்.

விவேக்குடன் பேசி வெகுநாள் ஆகிவிட்டது என்கிற நினைப்பில் அவள் அவனது தொலைபேசி எண்ணைத் தட்டினாள். அவளுடைய குரலைக் கேட்டதும், "சொல்லு எப்படியிருக்கே? ரொம்ப நாள் ஆச்சுப் பேசியே" என்றான்.

"நீயேன் பேசல்லே?"

"நா டூர் போயிருந்தேன். ஸாரி. இன்னிக்குக் காலையிலேதான் வந்தேன்."

"எந்த ஊருக்கு?"

"கொல்கத்தா."

அவன் சென்னை என்று சொல்லாதது அவளுக்கு அசட்டுத்தனமான நிம்மதியை அளித்தது.

"சென்னையிலேந்து ஏதாவது தகவல் உண்டா? கல்யாணக் கடிதாசு வந்ததா?"

அவன் சிரித்தான். "இல்லை சக்கு" என்றான். 'வந்தா என்னுடைய வேலை சுலபமாகும்' என்று நினைத்துக் கொண்டான். ராஜாவுக்குத் தான் புகைப்படங்கள் அனுப்பியது பற்றியோ, மறுதபாலில் ராஜா அவற்றைத் திருப்பி அனுப்பியது பற்றியோ அவளிடம் சொன்னால் தன்னை அவள் மன்னிக்க மாட்டாள் என்று அவனுக்குத் தெரியும்.

"கல்யாணக் கடுதாசிக்காகக் காத்திருக்கியா என்ன?"

"ஒருவகையில் அது நிம்மதி அளிக்கும். அத்தியாயம் முடிந்தது என்கிற மாதிரி."

"யூ மஸ்ட் பீ க்ரேஸி" என்றான் அவன்.

அலுவலக வேலையை முடிக்கும் தருவாயில் மீராவிடமிருந்து போன் வந்தது. குரலைக் கேட்டதும் வழக்கம்போல் உற்சாகம் ஏற்பட்டது. ஆனால் அன்று சுதாகர் கடற்கரையில் அமர்ந்து அந்தரங்கமாக, மீராவை நீ கல்யாணம் செய்து கொண்டால் நான் சந்தோஷப்படுவேன்' என்று சொன்னதிலிருந்து இனம்புரியாத தயக்கம் ஏற்பட்டது. "ஏய் என்ன ஆச்சு உங்களுக்கு, முன்ன மாதிரி ஏன் பேசறதில்லே?" என்ற அவளது கேள்விக்கு ராஜா ஏதோ சொல்லி சமாளித்தான். அவனிடம் அவளைப் பற்றிப்பேசியதையோ, பிறகு அவளுடைய பெற்றோர்கள் அவனது பெற்றோர்களைச் சந்தித்தது பற்றியோ, சுதாகர் தன் தங்கையிடம் சொல்லவில்லை என்று அவனுக்குத் தெரியும். சுதாகர் அவசரப்படுகிறான் என்று ராஜாவுக்கே எரிச்சல் ஏற்பட்டது. தன் பெற்றோர்களை ஒரு ஞாயிறன்று எதேச்சையாக அழைத்து வருவதுபோல, அவன் ராஜாவும் மீராவும் ஒரு ஆங்கில நாடகத்தைப் பார்க்கச் சென்ற அன்று அழைத்து வந்தது அன்று இரவு வீட்டிற்குச் சென்றபோதுதான் தெரிந்தது. வெளியில் டிபன் சாப்பிட்டிருந்தாலும் இரவுச் சாப்பாடு வேண்டாமென்றால் அம்மா சந்தேகப்படுவாள், என்று. அவன் சாப்பிட அமர்ந்தபோது, "எங்கே போயிருந்தே நீ?" என்றாள் அம்மா.

"ஒரு நாடகத்துக்கு."

"நீ யாரோட போறியோ, எங்கிட்ட சொல்லிட்டு எங்கே போறே?"

"ஏன் சொல்லணும்? என் வயசுக்காரங்களோட போறேன். அது தப்பா?"

அம்மா வார்த்தையை அளப்பதுபோலச் சொன்னாள். "ஏற்கனவே ஒரு தப்பைப் பண்ணிட்டு ஆண்டவன் புண்ணியத்திலே தப்பிச்சுக்கிட்டு வந்திருக்கே. மறுபடி அந்த மாதிரி ஒரு தப்பு நடக்கப்படாது. நா நடக்க விடமாட்டேன்."

அவனுக்குச் சுரீரென்று கோபம் வந்தது.

"இப்ப எதுக்காக இத்தனை பீடிகைப் போடறீங்க?"

"மீரா மீரான்னு ஒரு பொண்ணு அடிக்கடி ஃபோன் பண்ணுதே. அதோட அப்பா அம்மா, அண்ணன் எல்லாரும் வந்திருந்தாங்க."

அவன் இதை எதிர்பார்க்கவில்லை. சுதாகர் ஒரு மடையன் என்று கோபம் வந்தது. "சரி அதனாலென்ன?"

"பெண் குடுக்க இஷ்டப்படறாங்க போலிருக்கு."

"சரி, உங்களைப் பார்க்கறது மரியாதைன்னு தானே வந்திருக்காங்க?"

"அவங்க நம்ம ஜனம் இல்லே," என்றாள் காமாட்சி விறைப்புடன்.

அவனுக்குக் கோபத்தில் சிரிப்பு வந்தது. வீம்புக்குப் பேச வேண்டும் போல் இருந்தது.

"எனக்குப் பிடிச்சிருக்கு அந்தக் குடும்பம்."

"அப்ப அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கறதா முடிவு பண்ணிட்டியா?"

"நீங்கதான், நா பழசை மறந்துடணும், எனக்குன்னு ஒரு வாழ்க்கை அமைச்சுக்கணும்னீங்க"

"சொன்னேன். நம்ம ஜனத்திலேயே

நிறையப் பெண்கள் இருக்காங்க."

"அம்மா தயவுசெய்து இதுலே தலையிடாதீங்க. என் மனசுக்குப் பிடிச்சவளைத்தான் நா கல்யாணம் செஞ்சுக்க முடியும்."

காமாட்சி கண்ணீர் விட்டாள். "நீ ரொம்ப மாறிட்டே" என்றாள்.

"நீங்க மாறாததுதான் பிரச்னை" என்றபடி அவன் வெளியே சென்றான். வர வர, தனக்குப் பொறுமை குறைந்து வருவதை அவன் உணர்ந்தான். தனது பலவீனத்தை, இயலாமையை மற்றவர்கள் உபயோகிக்கப் பார்ப்பதாக அவன் சந்தேகித்தான். விவேக் குப்தாவிடமிருந்து சகுந்தலாவின், குழந்தை பிறந்த நாளின் புகைப்படங்கள் வந்தபோது அப்படித்தான் கோபம் வந்தது. பழைய ஞாபகங்களும் நெருக்கமும் வந்திருந்தால் நானே திரும்பிச் செல்லமாட்டேனா? இவர்களால் ஏன் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்று கோபம் வந்தது. இதற்குப் பின்னால் சகுந்தலாவின் தூண்டுதல் இருக்குமோ என்று அவன் யோசித்தான். 'நான் இதை அனுப்புவது சகுந்தலாவுக்குத் தெரியாது' என்று விவேக் அடிக்கோடிட்டிருந்தான். ஆனால் புகைப்படங்களை மறுபடி பார்க்கக் கூசியவன் போல, மறுநாள் தபாலிலேயே தான் திருப்பி அனுப்பியது தேவையற்றது என்று பிறகு தோன்றிற்று. புதிய வாழ்க்கையை இனிமேல் நீ அமைத்துக் கொள்ள வேண்டும் என்று சுதாகர் அன்று சமிக்ஞை காட்டியது தனது வேகத்துக்குக் காரணமாக இருக்கலாம்.

'மீராவுக்கும் உன்னைப் பிடித்திருக்கிறது' அதற்கு என்ன அர்த்தம் என்று புரியவில்லை. பிடித்திருக்கிறது என்றால் விரும்புகிறாள் என்று அர்த்தமா? திருமணம் செய்து கொள்ள சம்மதம் என்று சொல்லியிருப்பாளா? 'உன்னைப் பிடித்திருக்கிறது' அந்த வார்த்தைகள் அவனை பயமுறுத்தின. ஆனால் விசித்திரமாக சுய பலத்தைத் தந்தன. உணர்வுபூர்வமான ஓர் உறவின் சாத்தியத்தைத் தெரிவித்தன. செத்துப் போன ஓர் உறவைப் பற்றின குற்ற உணர்விலிருந்து விடுபடும் சாத்தியக் கூறு. அவனது விடுதலைக்கான வாய்ப்பு.

தொலைபேசியின் மறுமுனையில் அவள் இன்னும் காத்திருந்தாள். "ஏன் இப்பல்லாம் பேசறதில்லே? இன்னும் ரெண்டு நாளிலே நா புனேக்குத் திரும்பறேன்."

"தெரியும்" என்றான் அவன் மென்மையாக. "உங்களோடு பேசணும் எனக்கு. நாளைக்கு லஞ்சுக்கு சந்திக்கலாமா?"

"கண்டிப்பா!" என்றாள் அவள் உற்சாகமாக. வழக்கம்போல் அவளுடைய உற்சாகம் அவனைத் தொற்றிக் கொண்டது. அவள் அவனது பிரச்னையைப் புரிந்து கொள்வாள். புதிய உறவு ஏற்படுத்திக் கொள்வது, அவனுக்குத் தேவைப்படும் தெரப்பி என்று உணர்ந்து கொள்வாள். என் மனப்புண்ணை ஆற்றுவதில் உன் மனப்புண்ணும் ஆறும். உற்சாகமாக இருப்பது போன்ற பாவனையே உண்மையாகி விடுவதுபோல. வீட்டை நோக்கிப் பயணிக்கையில் அவளிடம் தன் மனத்தைத் திறந்து விட்டதாக நிம்மதி அவனுக்கு ஏற்பட்டது.

இன்று பழனிக்கு உடம்பு சரியில்லை என்று வேலைக்கு வரவில்லை. மகனை வண்டியோட்ட காமாட்சி அனுமதிக்காததால் காலையில் டாக்ஸியில் ராஜா அலுவலகம் சென்றான். வீட்டிற்குத் திரும்புகையில் வீட்டிற்கு அருகில் இருக்கும் ஒரு கடையின் முன்பு இறங்கிக் கொண்டான். கடையில் அவனுக்கு வேண்டியிருந்த ஷேவிங் க்ரீமை வாங்கிக் கொண்டு வீட்டிற்கு நிதானமாக நடந்து சென்றான். வாசல் கதவு ஒருக்களித்தாற்போல திறந்திருந்தது. அப்பாவின் அறையிலிருந்து கோபமாக வார்த்தைகள் வந்தன.

"உனக்குப் பொறாமை" என்றார் சண்முகம். "பெத்த பிள்ளையைக் கண்டே அசூயை."

"அசூயை உங்களுக்கா எனக்கா? அது தானே உங்களை நாக்கிலே நரம்பில்லாம பேச வெச்சது? அவனை வெறுத்துப் போயி ஓட வெச்சது?"

ராஜா நின்றான். ஓசைப்படாமல் தன் அறைக்குச் செல்ல நினைத்தவன், இருண்ட வெளித் தாழ்வாரத்தில் இருந்த பெஞ்சின் மூலையில் அமர்ந்தான்.

"எல்லாத்துக்கும் நீதான் காரணம்" என்றார் சண்முகம்.

"எங்கே மறுபடியும் சொல்லுங்க பார்க்கலாம்?" என்றாள் காமாட்சி ரௌத்திரத்துடன்.

பதிலுக்கு சரவணன் பேச ஆரம்பித்தார். உயர்ந்த குரலில். பிரபஞ்சத்தின் பிரக்ஞையே இல்லாதவர் போல.

(தொடரும்)





# மகிழ்வித்து மகிழுங்கள்

## நவராத்திரி, தீபாவளி
## நல்வாழ்த்துக்கள்



*பிறந்த நாட்களில், திருமண நாட்களில், பணிவாய்ப்பு கிடைத்த நாட்களில், பெரியோர்களை நினைக்கும் நாட்களில், ஊதியம் பெறும் நாட்களில், எப்போது வேண்டுமானாலும்...*



நிறுவனர்
அமரர். சர்தார்.
**வேதரத்னம்**
தபால்தலை

- கல்விக்கண் திறந்து வைக்க விரும்புகிறேன்.
- பெண் குழந்தைகளுக்கு உதவ விரும்புகிறேன்.
- படிக்கும் பெண் குழந்தைகளுக்கு உணவளிக்க விரும்புகிறேன்.
- சாதிவெறியில்லாத சமுதாயத்திற்கு உதவ விரும்புகிறேன்.
- கிராமப்புற சிறுமியருக்கு கஷ்டம் அதிகம் அவர்களுக்கு உதவ விரும்புகிறேன்.
- எட்டுப்படிப்புடன் கைத்தொழில் கற்றுத்தர உதவ விரும்புகிறேன்.
- நோய்வாய்ப்பட்ட சிறுமியருக்கு மருந்தளிக்க விரும்புகிறேன்.
- சிறுமியருக்கு நல்வாழ்க்கை அமைய உதவ விரும்புகிறேன்.
- முகம் தெரியாத, யாரும் இல்லாத சிறுமியருக்கு உதவ விரும்புகிறேன்...
- உடை தானமளிக்க, புத்தகம் தானமளிக்க விரும்புகிறேன்.
- நீண்டகாலமாக அன்னதானம் செய்துவரும் நிலையத்திற்கு உதவ விரும்புகிறேன்...
- பசுக்களைப் பராமரிக்க விரும்புகிறேன்.
- சிறுமியர், கவாசினிகள் எளப்படுவதால் அவர்களுக்கு நவராத்திரி சமயத்தில் உதவ விரும்புகிறேன்.

என்று நினைக்கும் உங்களுக்கு அன்னதானம், ஔஷததானம், அபயதானம், சாஸ்திரதானம், போன்ற பல வாய்ப்பினை அளித்து, மகிழ்வித்து மகிழ வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் இந்த வேண்டுகோளை வைக்கிறது.

கல்வி பயிலும் ஏழை எளிய ஏதிலிச் சிறுமியருக்கு உதவுங்கள். கிராமப்புற சிறுமியருக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம், கல்வி, பதினொறு தொழிற்பயிற்சிகள் ஆகியன தந்து 55 ஆண்டுகளாக ஆதரிக்கும் தேசிய விருது பெற்ற குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவு தாருங்கள். நன்கொடைகளைப் பொருளாகவோ தொகையாகவோ அனுப்பி உதவுங்கள்.

**முகவரி : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்**

**தேசிய விருது பெற்ற மகளிர் தொண்டு நிறுவனம், த.பெ.எண். 2. வேதாரண்யம் – 614 810.**
**நாகப்பட்டினம் மாவட்டம். தமிழ்நாடு. போன் : (04369) 250227, 250027, 250011**
**தந்தி: *GURUKULAM. VEDARANIAM - 614 810***

*கொடுத்தால் வரும். தர்மம் தலைகாக்கும்.*

---

# உலக இதய நாள் விழா -15.9.2002

## (World Heart Day Celebration)
## Bharathi Rajaa Hospital, Chennai - 17



Dr. C.நடேசன் M.D.
இயக்குநர்
பாரதிராஜா
மருத்துவமனை

15.9.2002 அன்று காலை **Dr. C.நடேசன் M.D.** இயக்குநர் பாரதிராஜா மருத்துவமனை அவர்களின் பெருமுயற்சியால் தி. நகர், GRT Grand Days ஓட்டலில் உலக இதய நாள் கொண்டாடப்பட்டது. திரு. T. இராதா கிருஷ்ணன் I.P.S. I.G. of Police Tamil Nadu. அவர்கள் சிறப்பு உரையாற்றினார்கள். விழாவையொட்டி நடந்த 'இதய மருத்துவர்கள் – பொதுமக்கள் கலந்துரையாடல் பேராசிரியர் **Dr. S.வைத்தியநாதன்** (எ) டாக்டர். சுவை அவர்கள் தலைமையில் சுமார் மூன்று மணி நேரம் நடந்தது. பொதுமக்களின் கேள்விகளுக்கு முன்னாள் சென்னை மருத்துவ கல்லூரி இருதய அறுவை சிகிச்சை நிபுணரும் தற்போது அப்பலோ மருத்துவமனையில் பணிபுரியும் Dr. C.S. விஜய சங்கர், சென்னை மருத்துவக்கல்லூரி பேராசிரியர்கள், Dr. P. முத்துசாமி, Dr. V. ஜெகநாதன், Dr. S. இளங்கோவன், Dr. அனுராதா, Dr.மோகன முருகன், Dr. மூர்த்தி, Dr. மீனாக்ஷி, முன்னாள் பேராசிரியர் Dr. N. சிவகடாட்சம், அனைவரும் விளக்கி விடையளித்தனர். நல்லிதயம் கொண்ட இதய பேராசிரியர்களுக்கும், உற்சாகத்தோடு கலந்துகொண்டு சிறப்பித்த, பொது மக்களுக்கும் எங்கள் இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.



பேராசிரியர்
S.வைத்தியநாதன்
(எ) Dr. சுவை
இதய மருத்துவர்
பாரதிராஜா
மருத்துவனை

**Management of Bharathi Rajaa Hospital, T. Nagar**

*எங்கள் மருத்துவமனையில் அவசர சிகிச்சைக்குத் தேவையான அனைத்து வசதிகளும் உள்ளன. பல்வேறு துறையை சார்ந்த சிறப்பு மருத்துவத்துவர்களின் மேற்பார்வையில் மருத்துவம் செய்து கொள்ளலாம்.*

# பத்தாவதாய் ஒரு பிள்ளை!

சூரியனைச் சுற்றி வருகிற புதன், வெள்ளி முதலான கோள்களைச் சூரியனின் பிள்ளைகள் என்றும், பூமியின் சந்திரன், செவ்வாயின் போபாஸ், டெய்மாஸ், வியாழனின் யூரோப்பா, கானிமீட், கால்லிஸ்டோ போன்ற துணைக் கோள்களைப் பேரன் பேத்திகள் என்றும் சொல்வதுண்டு! அந்த வகையில் சூரியக் குடும்பத்தின் கடைசிப் பிள்ளை என்று நேற்று வரை கருதப்பட்டு வந்த புளூட்டோவுக்கும் 'சரோன்' என்கிற பெயரில் ஒரு சந்திரன் உண்டு.

இப்போது சூரியக் குடும்பத்தில் புதிதாக ஒரு 'பிள்ளை'யைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதற்குக் 'க்வா-வார்' என்று பெயரும் சூட்டி விட்டார்கள் நாஸா விஞ்ஞானிகள். இந்தப் பத்தாவது பிள்ளை புளூட்டோவின் பாதியளவே உள்ளதாய் (1280 கி.மீ குறுக்களவு) கணக்கிட்டிருக்கிறார்கள். சூரியனிலிருந்து பூமி உள்ள தொலைவைப் போல் 48 மடங்கு - அதாவது 7460 மில்லியன் கி.மீ தொலைவில் உள்ளது க்வா - வார்! முதலில் தரைக் கட்டுப்பாட்டுத் தொலைநோக்கி மூலமே இந்தப் பத்தாவது கோளைக் கண்டார்கள். விண்வெளியில் சுழன்று வருகிற 'ஹப்பின்' விண்வெளித் தொலைநோக்கிக்குக் கட்டளைகள் தந்து, இந்தப் புதிய கோளை நோக்கி, அது கண்காணிக்கும்படி சொன்னார்கள். கடந்த 72 ஆண்டுகளில் நிகழ்ந்துள்ள மிகப் பெரிய கண்டுபிடிப்பு இது. இந்த 'க்வா-வார்' கோளுக்கு ஏதேனும் 'குவா - குவா' இருக்கிறதா என்பது இனிமேல்தான் தெரியும். சூரியனுக்கு மிக அருகில் உள்ள புதனுக்கும், வெள்ளிக்கும்தான் துணைக் கோள்கள் கிடையாது.




'க்வா-வார்' - பூமி, நிலாவுடன் ஒப்பு நோக்கிய வடிவம்

'க்வா - வார்' தான் சூரியனின் கடைசிப் பிள்ளை என்கிற 'உண்மை' கூட இந்த நூற்றாண்டின் முடிவுக்குள் பொய்யாய்ப் போய், பதினோராவது கோள் கண்டறியப்பட்டாலும் வியப்பதற்கில்லை!

— யெஸ்பால்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

11

# குறையொன்றுமில்லை

இரவில் பிச்சை கேட்டு வருவோருக்கு விசேஷமாக உபசரணை செய்ய வேண்டும் என்கிறது வேதம். அதே சமயம் 'ராத்திரியிலே பிச்சை கேட்கப் போகாதே' என்றும் சொல்கிறது. அவ்வாறு கேட்பது மகா பாபம்; கேட்போருக்குக் கொடுக்காமல் இருப்பதும் பாபம் என்கிறது.

'பாபம் என்று சொல்வதற்குத்தான் வேதம் வந்ததா?' என்று நமக்குச் சந்தேகம் வரும்.

ஆனால் இதற்குப் பொருள் என்ன...? 'உன்னைப் போன்ற ஒரு மனிதனை நீ வாழ்கின்ற ஒரு சமூகத்திலே பிச்சையெடுக்கும்படியாகப் பண்ணிவிட்டு, அவன் பிச்சையெடுப்பதைப் பார்த்துக் கொண்டு நீ வெறுமே இராதே! அதிலும் ராத்திரி பிச்சையெடுப்பதற்கு ஒரு நாளும் விடாதே. அவ்வாறு எடுக்காமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்கிறது வேதம்.

அந்த அளவுக்கு, ராத்திரிப் பிச்சை கேட்டுக் கொண்டு வராமல் இருக்கும்படியாக, சமூகத்திலே எல்லோரும் நிறைவாளர்களாக இருக்க வேண்டும் என்கிறது வேதம்.

அதிதி உபசரணை என்பது அவ்வளவு முக்கியம். வீட்டுக்கு வரக்கூடிய அதிதியினிடத்திலே பரமாத்மா இருக்கிறான். வைகுண்டத்திலே மட்டும்தான் அவன் உட்கார்ந்து கொண்டிருக்கிறான் என்று பார்த்தால், வேதம் இப்படி என்னவெல்லாம் சொல்கிறது பாருங்கள்...

மனிதனுக்குள்ளே அந்தர்யாமியாய் பரமாத்மா உட்கார்ந்திருக்கிறான். மனித வர்க்கம் மட்டுமின்றி சகல சராசரங்களிலேயும் எழுந்தருளியிருக்கிறான்.

எல்லா தேவதைகளுக்குள்ளும் அவனே அந்தர்யாமியாக இருக்கிறான். சமஸ்த தேவதைகளுக்கும் அவனே சிகரமாய் இருக்கிறான் என்பதை மகான்களான பாஷ்யாதிகாரிகள் திரும்பத் திரும்ப எடுத்துக் காட்டுகிறார்கள் : சமஸ்த தேவதாந்தர்யாமி!

ருதமாகவும் இருக்கிறான் பரமாத்மா; அவனே ஸ்தயமாகவும் இருக்கிறான். இதைக் குறிக்கவே ஒரு வேதமந்திரம் இருக்கிறது. கல்யாணக் காலத்திலே அந்த மந்திரத்தைச் சொல்லுவார்கள். கிருஹப்பிரவேசத்தின் போது தம்பதி உட்கார்ந்து சொல்லும்படியான விஷயமாக அது அமையும்.



அதன் அர்த்தம் என்ன...?

ருதம் என்பதாலேதான் அந்தரிக்ஷ லோகம், ஆதித்ய மண்டலம் நிற்கிறது. ஸத்யத்தினாலே இந்த பூமண்டலம் நிற்கிறது என்கிறது வேதம்.

ருதம் என்றால், பார்த்ததைப் பார்த்தவண்ணம், கேட்டதைக் கேட்டவண்ணம் அப்படியே மாற்றாமல் சொல்வது.

ஸத்யம் என்றால் சமதர்மம் - இடம், பொருள், ஏவல் இவற்றைப் பார்த்துச் சொல்ல வேண்டும்.

எல்லா இடத்திலும் ஒரே மாதிரி உண்மையைச் சொல்லக்கூடாது என்கிறது சாஸ்திரம். கேட்கிறவர்கள் கஷ்டப்படுவார்கள் என்றால் அப்படியே உண்மையைச் சொல்லக்கூடாது.

'ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத்' என்பது மிகப் பிரஸித்தமான வாசகம்.

இதரர்கள் கொண்டாடுவார்கள் என்பதற்காக ஏகமாக ஒரு விஷயத்தில் பொய் சொல்லலாமா...? இதரர்கள் ரொம்பக் கஷ்டப்பட்டு நிலைகுலைந்து போய்விடுவார்கள் என்றால், கொஞ்சம் உண்மை இருந்தாலும் குறைத்துத்தான் சொல்ல வேண்டும்.

பொய்மையும் வாய்மையிடத்து என்ற திருக்குறள் ரொம்ப அழகான குறள்:

இதரர்களை வருத்தாத பொய்யாயிருந்தாலும் அது உண்மைதான்; இதரர்களுக்குச் சிரமம் ஏற்படுத்தும் என்றால், அது உண்மையாயிருந்தாலும் பொய்தான்! - என்கிறது

சாஸ்திரம்.

ரொம்ப ஜாக்கிரதையாக மகான்களிடத்திலே பழகி, பெரியோர்களிடத்திலே பழகித்தான் இதை அனுபவம் மூலமாக நாம் தெரிந்து கொள்ள முடியும்.

சில இடத்திலே பொய்யே சொல்லலாம் என்று மனு. ஸ்ம்ருதியிலே எடுத்துக் கொடுத்திருக்கிறது :

விவாஹ காலே....

கல்யாணம் நடந்து கொண்டேயிருக்கிறது. கூரைப் புடைவை உடுத்திக் கொள்ள உள்ளே போயிருக்கிறாள். அதற்குள்ளே சம்பந்திகளிடையிலே சண்டை - யாரோ கிளப்பி விடுகிறார்கள். கல்யாணமே நின்று போய் விடும்போலிருக்கிறது. அப்போது என்ன பண்ண வேண்டும்...? 'வந்திருக்கிற எல்லோருமே அங்கே ஆயிரம் பொய்யைச் சொல்லியாவது கல்யாணத்தை நடத்தி வைக்கலாம்' என்கிறார் மனு!

அதற்காக ஜாதகத்தைக் கொடுக்க ஆரம்பித்ததிலிருந்தே பொய்யெல்லாம் ஆரம்பிக்கக் கூடாது. 'ஆயிரம் பொய் சொல்லிக் கல்யாணம் பண்ணலாம்' என்றால் இப்படி மனிதர்களை ஏமாற்றலாம் என்று அர்த்தம் இல்லை. ஒரு கல்யாணத்தைக் காப்பாற்ற பொய் சொல்லலாம் - அவ்வளவுதான் அனுமதி. அவ்வாறு கல்யாணத்தைக் காப்பாற்றவும் குடும்பத்தை நிர்வாகம் பண்ணவும் பொய் சொன்னால் அது பொய் ஆகாது என்கிறது சாஸ்திரம்.

அதே போல் ஒரு பிரும்ம வித்து... அவர் நடுத்தெருவிலே நின்று போய் விடுவார் என்கிற கஷ்ட நிலைமையிலே - அவரைக் காப்பாற்ற நாம் பொய் சொல்லலாம் என்கிறது சாஸ்திரம்.

ஆஞ்சனேயன் அசோக வனத்தையே துவம்ஸம் பண்ணி விட்டான். மயங்கிக் கீழே விழுந்தவர்களெல்லாம் எழுந்து சீதையைப் பார்த்து, "இது யார்?" என்று கேட்கிறார்கள்...

அப்போது சீதை ரொம்ப அழகாகப் பொய் சொல்கிறாள்! என்ன சொல்கிறாள் பாருங்கள்...

ஏற்கெனவே ஆஞ்சனேயனிடத்திலே அங்குலியத்தை வாங்கிக் கொண்டிருக்கிறாள்; உயர்ந்த சூடாமணியைக் கொடுத்திருக்கிறாள், 'ராமனிடத்திலேயிருந்து வந்திருக்கிறேன்' என்று அவனும் சொல்லியிருக்கிறான். இவ்வளவும் பண்ணிய பிறகு, அவர்கள் கேட்கிறபோது சீதை என்ன சொல்கிறாள்...?

"என்னைப் பார்த்துக் கேட்கிறீர்களே! எனக்கென்ன தெரியும்! பாம்பின் கால் பாம்பறியும். இப்படி துவம்ஸம் பணணியவன் உங்களில் ஒருவனாய்த்தான் இருக்கக்கூடும். எனக்கென்ன தெரியும்!" என்று சொல்லி விடுகிறாள்.

ஆஞ்சனேயன் என்கிற உத்தம ஆத்மாவை ரக்ஷிப்பதற்காகப் பொய்யையே சொல்கிறாள் சீதாபிராட்டி!

இதையெல்லாம் நாம் கவனித்துப் பார்த்தோமானால் ருதம் என்கிறதிலேயும் ஸத்யம் என்பதிலேயும் - உண்மையிலேயும் உண்மையின் மறைவிலேயும் எம்பெருமானே காட்சியளிக்கிறான் என்பது தெளிவாகிறது.

## வேறெங்கு காட்சி அளிக்கிறான்...?

பரமாகாசம் - தெளிவிசும்பு என்கிறார்களே ஆழ்வார்கள்... அதிலே காட்சியளிக்கிறான். புரம் அது. - பட்டிணம். 'அயோத்யா, அபராஜிதா' என்று பெயர் அதற்கு. யாரும் உள்ளே நுழைந்துவிட முடியாது. மற்றவர்களால் ஜெயிக்க முடியாத உத்தமமான ஸ்தானம் அது.

பகவத் கைங்கர்யம் பண்ணி, உத்தமமான அந்த லோகத்தை அடைகிறார்கள்.

அந்தத் தெளிவிசும்பிலே, பரமாகாசத்திலே,

> *''உன் நண்பன் ராமசாமி சரியான டுபாக்கூர் பார்ட்டின்னு எதை வச்சு சொல்றே.''*
>
> *''அவனுடைய முன்னோர்கள் தலை சீவுறதுக்கு ஒளரங்க 'சீப்'பைதான் பயன் படுத்தினாங்கன்னு சொல்றானே!''*
>
> *— ஜி. சுந்தரராஜன்*

வைகுண்டத்திலே வாஸம் பண்ணுகிறான் பரமாத்மா!

வேறு எங்கெல்லாம் இருக்கிறான்...?

அப்ஜா, கோஜா, ருதஜா, அத்ரிஜா... என்று பட்டியல் சொல்லப்படுகிறது.

அப்ஜா என்றால், அபு அல்லது தீர்த்தத்திலே வாஸம் பண்ணுகிறவன். அந்த தீர்த்தத்தையே பாவனமாக்குகிறானாம் அவன்.

ஸ்நானம் பண்ணுகிறபோது கோவிந்தா, அச்சுதா, நாராயணா என்று சொல்லிக் கொண்டே பண்ணுகிறதுண்டு. அதனால் தீர்த்தத்துக்கே பாவனம் ஏற்படுகிறது.

அப்படிப்பட்ட தீர்த்தத்திலே பரமாத்மா நித்யவாஸம் பண்ணுகிறான். அதனால்தான் நாராயணன் என்றே அவனுக்குப் பெயர்.

தீர்த்தத்துக்கு நாரங்கள் என்று பெயர். சித்அசித்துக்கும் நாரங்கள் என்று பெயர். நாரங்கள் என்ற தீர்த்தத்திலே எவன் படுத்திருக்கிறானோ, அவனுக்கு நாராயணன் என்று பெயர். நாராயணன் என்கிற திருநாமம் இப்படித்தான் வந்தது.

நாராயண சப்தத்துக்குக் கிடைக்கக்கூடிய பெருமை வேறு சப்தத்துக்குக் கிடைக்காது.

எல்லாவற்றுக்குள்ளும் அவன்; எல்லாம் அவனுக்குள்ளே. நாராயண சப்தமானது இப்படி விசேஷமாய் ஒலிக்கிறது.

அதே மாதிரி கோஜா - பசுக்களிடத்திலேயும் பரமாத்மா வாஸம் பண்ணுகிறான்.

பசுவின் திருமேனியிலே பதினான்கு லோகங்களும் இருக்கின்றன. அதனால்தான் கிருஹப்பிரவேச காலத்திலே, ஒரு ஸத்கர்மா நடக்கிறபோது, பசுவை அந்த கிருஹத்திலே நடக்க வைக்கிறார்கள். அந்த கிருஹம் உயர்ந்து நிற்கும். பசுவின் பாதம் அதிலே பட்டால், உயர்ந்து நிற்கும். பிரும்ம வித்துக்கள் வேதம் சொல்லிக்கொண்டு போக வேண்டும்; தீர்த்தம், எம்பெருமானின் படம் முதலியவற்றை எடுத்துக் கொண்டு அந்த கிருஹத்துக்கு உடையவன் பின்னால் வரவேண்டும். முன்னால் பசுதான் போக வேண்டும்!



'கோ ப்ராம்மணேப்ய சுபமஸ்து நித்யம்
லோகா சமஸ்தா சுகினோ பவந்து'
என்று சுலோகம் வருகிறது.

இதற்கு என்ன அர்த்தம்?... 'பசுவும் பிராமணர்களும் சந்தோஷமாய் இருந்தால் போதுமா? மற்றவர்களையெல்லாம் சொல்லவேயில்லையே!' என்று கேட்கலாம்.

பசு என்பது சாத்விகமான பிராணி; அதே போல் பிராமணனும் ஆயுதம் ஏந்தத் தெரியாதவன். இத்தகைய நிராயுதர்களுக்கு - சாத்விகர்களுக்குக் கேடு வருகிறபோது உலகிலே அமைதி தொலைந்து விட்டது என்று ஆகிறது. அப்போது எதுவுமே நிலைத்து நிற்காது. அதனால்தான் 'கோப்ராமணேப்ய சுபமஸ்து நித்யம்' என்றது. அந்த சுபம் - சுபிட்சம் - உலகத்துடைய மொத்த சுபிட்சத்தின் - அமைதியின் அடையாளம்.

பசுவின் திருமேனியிலே பதினான்கு லோகங்களும் உள்ளன என்றேன். கோ பிரதக்ஷிணம் பண்ணினால் பூ பிரதக்ஷிணம் பண்ணிய பலன் உண்டாகும் என்று பகவானே சொல்வதாக வருகிறது.

கோவின் பிருஷ்ட பாகத்திலே மஹாலக்ஷ்மி இருக்கிறாள். நித்ய வாஸம் பண்ணுகிறாள். அவளே பேசுகிறாள் : "நான் எங்கெங்கே இருக்கிறேன்..." என்று சொல்கிறபோது, "பசுவினுடைய பிருஷ்ட பாகத்திலே இருக்கிறேன், வீணை ஒலியிலே இருக்கிறேன்; கோயில் மணி ஓசையிலே இருக்கிறேன், பிரும்ம வித்துக்களெல்லாம் வேதம் சொல்லுகிறார்களே, அந்த வேத ஒலியிலே இருக்கிறேன்..." என்கிறாள்.

அதனால்தான் கிருஹத்திலே மஹாலக்ஷ்மி ஸ்வரூபமாக பசுக்களை வளர்க்கிறது.

கல்யாணக் காலத்திலே ஸப்தபதி மந்திரத்தின் போது, ஐந்தாவது அடி வைப்பிலே 'நீ பால் பாக்யம் உடையவளாக இருக்க வேண்டும்' என்று மணப்பெண்ணைப் பார்த்துச் சொல்லப்படுகிறது. அப்படியென்றால் என்ன பொருள்...? பசு சம்ரக்ஷணம் பண்ணி, வருகிறவர்கள் எல்லோருக்கும் பால், தயிர் கொடுக்க வேண்டும் என்கிறது மந்திரம்.

ஆகவே, பகவான் பசுவினிடத்திலே நித்ய வாஸம் பண்ணுகிறான்.

அதே போல் பர்வதங்களிலேயும் அவன் நித்யவாஸம் பண்ணுகிறான். பர்வதானாம் அதிபதி - பர்வதங்களுக்கெல்லாம் அதிபதி அந்த மஹாவிஷ்ணு.

பர்வதத்தைப் பார்த்தாலே, மொத்தமும் பகவத் ஸ்வரூபம்! 'கிரி' என்றே பகவானுக்குப் பெயர்.

அதற்கும் மேலே, உயர்ந்த உண்மையிலே பகவான் நித்யவாஸம் பண்ணுகிறான் - ருதமாகவும் இருக்கிறான் ஸத்யமாகவும் இருக்கிறான். வேதமானது விசேஷமாகச் சொல்கிறது இதை; உபநிஷத்களும் சம்ஹிதைகளும் சொல்கின்றன. கர்மகாண்டத்திலும் ஞானகாண்டத்திலும் வருகிறது.

இப்படி உயர்ந்த ரீதியிலே பகவான் சகல ஸ்தானங்களிலும் இருப்பதனாலேதான், அந்தந்த ஸ்தானத்துக்கும் கௌரவம் ஏற்படுகிறது. அவ்வாறு அந்தந்த ஸ்தானத்துக்கு ஏற்படுகிற கௌரவமும் அவனுடையதுதான்!

புவனம் முழுவதும் அவன் நிறைந்து சகலத்துக்கும் அழகைத் தருகிறான். அதனால் 'புவன சுந்தரா!' என்று அவனை அழைத்தாள் ருக்மிணி. அப்படிப்பட்ட பரமாத்மா நமக்குள்ளேயும் இருக்கிறான். நமக்குள் அவன் இருப்பதனாலேதான் நம்மையே நாம் நேசிக்கிறோம்!

(வளரும்)



# யுனிவர்சிடி



அவனுக்குத் தெரியும் தனது காதல் தேவதை யாரென்று. ஆனால் அவளுக்குத் தெரியாது, அடிக்கடித் தன்னைக் கடந்து போகிற அவன் தான் தனது ராஜகுமாரன் என்று. இந்தக் காதல் கண்ணாமூச்சி விளையாட்டு ஆரம்பித்தது காதல் கோட்டை படத்தில்.

ஏதோ ஒரு தைரியத்தில் இத்தனை தாமதமாய் இதே கதையில் மறுபடியும் கை வைத்திருக்கிறார்கள். ஆனால் திரைக்கதை, காட்சி அமைப்புகளில் கவனமாய் இருந்து, ரசிகன் எழுந்து ஓடி விடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு சில வார்த்தைகள் மட்டுமே பேசுகிற, தாழ்வு மனப்பான்மையுள்ள கதாநாயகன் காந்தி பாத்திரப்படைப்பு ஓ.கே. காந்தியாக வரும் புதுமுக நடிகர் ஜீவனின் நடிப்பில் ஜீவனே இல்லை என்று சொல்லும்படியாக முகத்தில் உணர்ச்சிகளையே காட்ட மறுக்கிறார்.

தற்கொலை செய்து கொள்ளப் போகும் கடைசி மணித்துளியில் ராங்நம்பர் தொலைபேசியாக வந்து, உயிரைக் காத்த காதலனைத் தேடி அலையும் ஷண்மதியாக கஜாலா கலக்கல்.

ஆல் தோட்ட பூபதி பாத்திரத்தில் பாபா ரஜினியை கிலோ கணக்கில் கிண்டலடித்திருக்கும் விவேக், என்னதான் ஜனங்களின் கலைஞன் என்றாலும், சீரியஸான க்ளைமாக்ஸ் காட்சியில்கூட உள்ளே புகுந்து கலாட்டா பண்வது ரொம்ப ஓவர்.

கதை, திரைக்கதை, இயக்கம் என்ற மட்டத்தோடு நிறுத்திக்கொண்டு, நகைச்சுவைப் பகுதிக்கு வசனம் எழுதிய பிரசன்னகுமாரிடமே படத்திற்கான முழு வசனப் பொறுப்பையும் ஒப்படைத்திருக்கலாம். குறிப்பாக காதலைப் பற்றி உளவியல் பேராசிரியர் ரகுவரன் அரற்றும்போது, காதுக்குள் கட்டெறும்பு கடிப்பதுபோல அத்தனை வேதனை. வளரும் இசையமைப்பாளர் ரமேஷ் விநாயகத்தின் மெட்டுக்கள், பின்னணி இசை இரண்டுமே பிரமாதம். எடிட்டர் வி.டி. விஜயனின் கத்திரிக்கோல் புகுந்து விளையாடி, படத்தைக் காப்பாற்றியிருப்பது, கண்கூடாகத் தெரிவதால் யூனிவர்சிடி படக் குழு அவருக்கொரு டாக்டர் பட்டமே தரலாம். ஆனால், சிலபஸ்தான் மிகப் மிகப் பழசு, என்பதால் பாஸ் மார்க் எடுக்கும் புண்ணியம் இல்லையே!

— விஷுவல்தாசன்

● ஆவரேஜ்



# சினிமாக்காரர்கள் போராட்டத்தால் காவிரிப் பிரச்னை தீருமா...?

● இரா. சக்கரபாணி, மதுரை - 7.

*? டான்ஸி நிலத்தை மீண்டும் அரசுக்கே ஒப்படைக்க விரும்பிய ஜெ, வழக்கு சிறப்பு நீதிமன்றத்தில் இருந்தபோது அதைச் செய்யாதது ஏன்...?*

! அப்போது அவர் முதல்வராக இல்லையே; அந்தப் பதவிக்கு அபாயமும் ஏற்படவில்லையே!



● அன்றும்... இன்றும்...!

● கே. கணேசன், சென்னை - 16.

*? அமைதிக்கான நோபல் பரிசுக்குப் பிரதமர் வாஜ்பாயின் பெயரை சர்வதேச விழிப்புணர்வு மையம் பரிந்துரை செய்துள்ளது பற்றி...?*

! எத்தகைய பாதக சூழலிலும் அமைதியாக ஒருவர் இருப்பது வேறு, அமைதிக்காக முயற்சி எடுத்துப் பாடுபடுவது வேறு என்ற விழிப்புணர்வு சர்வதேச விழிப்புணர்வு மையத்துக்கு ஏற்பட வேண்டும்!

● பி.ஆர். பார்த்தசாரதி, ஸ்ரீரங்கம்

*? ரயில்வே இணை அமைச்சர் ஏ.கே. மூர்த்தியின் செயல்பாடுகள் தமிழகத்தில் ரயில்வேக்கு முன்னேற்றத்தை ஏற்படுத்துகிறதா...?*

! அவர் பாட்டுக்கு, வெறுங் கையை முழம் போடுவதுபோல் திட்டங்களை அறிவித்து வருகிறார்... நிறைவேற்றத்தான் நிதியைக் காணோம் என்கிறது ரயில்வே நிர்வாகம்.

● ஆர். ராஜா ரஹ்மான், கம்பம்.

*? தமிழக அரசால் இலவச மின்சாரம் ரத்து செய்யப்படும் மறுநிமிடமே தமிழகம் முழுவதும் போராட்டம் வெடிக்கும் என்று அரசுக்கு தி.மு.க விவசாய அணிச் செயலாளர் கே.பி ராமலிங்கம் எச்சரிக்கை செய்திருப்பது பற்றி...?*

! பருவமழை, காவிரி நீர் பற்றிய கவலை இன்றி, ஆழ் துளை கிணறு இறக்கி, பம்பு செட் வைத்து, முப்போகம் பயிர் செய்யும் விவசாயி பரம ஏழையாக இருக்க முடியாது. இந்தை உணர்ந்திருந்தும் அரசியல் நோக்கில் நடத்தப்படும் போராட்டம். அதேசமயம் குடிசைக்கு ஒரு மின்விளக்கு திட்டம் கைவிடப்படக் கூடாது.

● எம். ரேவதி, மன்னார்குடி

*? இந்தியாவின் ஈடு இணையற்ற மனிதர் என்று யாரைக் கூறுவீர்கள்...?*






● விருதும் விழிப்புணர்வும்! ● வாஸ்துவும் வரிப்பணமும் ● வீம்பும் விபரீதமும் ● தகுதியும் தாராதரமும்

! இன்றைய தேதியில், ஆசிய விளையாட்டில் அகலம் தாண்டுதலில் தங்கப்பதக்கம் பெற்றுள்ள அஞ்சு பாபி ஜார்ஜ், அவர் கணவரும் பயிற்சியாளருமான பாபி ஜார்ஜ். அஞ்சுவுக்கு இதுவே முதல் ஆசிய விளையாட்டு முயற்சி.

● கே.வி. ராமன், சென்னை - 73.

**? அன்னை தெரஸாவின் அருள் பெற்றதால் மோனிகா பெஸரா என்ற பெண்ணுக்குப் புற்றுநோய் குணமாயிற்றாம். இதைக் காரணம் காட்டி அன்னைக்குப் 'புனிதர்' (saint) அந்தஸ்து அளிக்க வாடிகன் முன்வந்துள்ளதே?**

! மோனிகாவுக்குச் சிகிச்சை அளித்த மருத்துவர்கள், அவர் குணமானதற்கு மருத்துவம் முக்கியக் காரணம் என்று சுட்டிக்காட்டி சர்ச்சை கிளப்பியுள்ளார்கள்! எது எப்படியானாலும், அன்னை தெரஸாவின் பணிகளும் தியாகமுமே அவரைப் 'புனிதர்' என்ற நிலைக்கு உயர்த்தப் போதுமானவை.

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

**? வாஸ்து என்ற பெயரால் மத்திய அமைச்சர் சத்ருகன் சின்ஹாவின் அலுவலகம் பல லட்சம் ரூபாய் அரசு செலவில் புதுப்பிக்கப்படுவது குறித்து...?**

! அமைச்சரின் மனைவி வைத்ததுதான் அவர் அலுவலகத்தில் சட்டமாம்! அவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது வரிப்பணத்தின் அருமை! வரிகட்டும் நமக்குத்தான் வயிறு பற்றி எரிகிறது.

● வி. விஜய், சென்னை - 4 ★

**? சினிமாக்காரர்களின் போராட்டத்தினால் காவிரிப் பிரச்னைக்குத் தீர்வு கண்டுவிட முடியுமா?**

! கர்நாடக கலைஞர்கள்போல இதோ நாங்களும் போராட்டத்தில் குதிக்கிறோம் என்று மக்களிடம் நல்ல பெயர் சம்பாதிக்கலாம். ஆனால் பிரச்னை தீர உதவாது. அதிலும் கர்நாடகத்துக்கு மின் சப்ளையை நிறுத்துமாறு நடத்தும் போராட்டம் அபத்தமானது; நடைமுறை சாத்தியமற்றது. அதனால் தமிழகம்தான் அதிகம் பாதிக்கப்படும்.

● சுப. அண்ணாமலை, ஒட்டன்சத்திரம்.

**? நம் நாட்டில் உள்ள பெரும்பாலான துறைகளைத் தனியாருக்கு விற்றுவிட்டால் அப்புறம் அரசாங்கத்துக்கு என்ன வேலை...?**

! தொழிலும் வியாபாரமும் அரசின் பணி அல்ல. அரசின் வேலை அரசாள்வதுதான். அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் கவனமும் நிதியும் திருப்பிவிடப்படுமானால் வளமான தொழில், வர்த்தகச் சூழல் உருவாகும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை -1 ❑

**? அரசியல்வாதிகள் தீர்க்க விரும்பாத குறை எது? அவர்களால் தீர்க்க முடியாத குறை எது?**

! தீர்க்க விரும்பாதது கல்வியின்மையை. அதைத் தீர்த்துவிட்டால் மக்கள் சிந்தித்து வாக்களிக்கக் கற்றுக் கொண்டு விடுவார்கள்; அப்புறம் நாலாந்தர அரசியல்வாதிகளுக்கு கல்தா கிடைத்து விடுமே! தீர்க்க முடியாதது... கல்விப் பிரச்னையைத் தீர்க்க விரும்பாததால் நாட்டில் நிலவும் வேறு பல பிரச்னைகளையும் தீர்க்க இயலாது.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

**? 'ஜெயலலிதா மிகவும் அனுபவம் உள்ளவர், நானோ மிகவும் சிறியவன்' என்று எஸ்.எம். கிருஷ்ணா கூறுகிறாரே...?**

! சின்னவரோ இல்லையோ, உச்சநீதி மன்ற ஆணையை மதிக்காமல் நடந்துகொள்வது சின்னத்தனம்தான். அதனால் ஏற்படக்கூடிய பின் விளைவுகள் விபரீதமானவை.

● எம். ராஜேந்திரன், லால்குடி.

**? பல படங்களில் நடித்து, உயர்ந்த இடத்தை அடைந்ததற்காக மாநில முதல்வராக ஆக நினைப்பது தவறு என்று டைரக்டர் சேரன் சொல்கிறாரே...?**

! வேறு தகுதிகள் இல்லாமல், சினிமாவில் நடித்த ஒரே தகுதிக்காக மாநில முதல்வராக நினைப்பது தவறுதான். ஆனால் நமது அரசியல் சாசனத்தின் அடிப்படையில் குற்றமல்ல. வோட்டுப் போடும் மக்கள்தான் விழிப்புணர்வுடன் செயல்பட வேண்டும். எங்கே, 'குறைந்த பட்ச கல்வித் தகுதி, சொத்து விவரம் சொல்லி தேர்தலில் நில்லுங்கள்' என்று உச்சநீதிமன்றமும் தேர்தல் ஆணையமும் கட்டளை இட்டால், அதைக்கூட அரசியல்வாதிகள் அமுல்படுத்த மறுக்கிறார்களே!

❑ ரூ.100 பரிசு பெறுபவர்:
என்.பாலகிருஷ்ணன், இந்தியன் வங்கி,
டவுன்ஹால் ரோடு கிளை, மேலமாசி வீதி,
மதுரை - 625001.

★ ரூ. 50 பரிசு பெறுபவர்:
வி.விஜய், ஏ 9, சாந்தி அபார்ட்மென்ட்ஸ்,
4, அப்பு தெரு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.





# ஆட்டம் கொண்டாட்டம்

"எங்கள் அணியில் லாரா இல்லையென்று யாரும் அலட்சியமாக இருந்து விட வேண்டாம்; இந்த ஆண்டு துவக்கத்தில் மேற்கிந்திய தீவில் நடந்த டெஸ்ட் போட்டியில் லாரா பங்கில்லாமலேயே இந்தியாவை இரண்டுக்கு ஒன்று என்ற கணக்கில் தோற்கடித்ததை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று விவியன் ரிச்சர்ட்ஸ் விடுத்த எச்சரிக்கைக்கு முதல் டெஸ்டின் முதல் இன்னிங்ஸில் அதிரடி ஆட்டம் நடத்தி, பதிலளித்திருக்கிறார் ஷேவாக்.

''உலகின் சிறந்த ஆட்டக்காரர்களென்றாலும்கூட குறிப்பிட்ட சில ஓவர்களிலேயே அவர்களின் விக்கெட்டை என்னால் வீழ்த்த முடியும்'' என்ற மேற்கிந்திய தீவுகளின் வேகப்பந்து வீச்சாளர் மெர்வின் தில்லானின் கனவையும் அடித்து நொறுக்கியிருக்கிறது இந்திய அணி.



இருந்தாலும் மேற்கிந்திய தீவுகள் அணியின் கேப்டன் கூப்பரும் துணைக் கேப்டன் சந்தர்பாலும் தூண்களாக இருப்பார்கள் என்பதை மறுப்பதற்கில்லை. இளம் ஆட்டக்காரர் சர்வான், வேவல் ஹிண்ட்ஸ், கிறிஸ் கெய்ல், பந்து வீச்சாளர் கபி போன்றோரின் திறமையைக் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது.

இந்தக் குழுவுக்கு ஈடு கொடுக்க இந்திய அணியிலும் ஷேவாக், லக்ஷ்மண், டிராவிட், சச்சின் என்று ஒரு பேட்டிங் பட்டாளமே இருக்கிறது. போதாக் குறைக்கு, 'போஷாக் பிள்ளை'யான ஆஸ்திரேலியாவை மண்ணைக் கவ்வ வைத்த ஹர்பஜன் சிங்கும் இருக்கிறார். பிறகென்ன... இவர்கள் மோதலில் ரசிகர்கள் சிலிர்க்கலாம்!



# சென்னை பாய்!


• நாகமுத்து

மேற்கிந்திய தீவு அணிகளின் இளம் ஆட்டக்காரர்களான ராம்நரேஷ் சர்வானும், மகேந்திரவீரன் நாகமுத்துவும் இந்தியாவைப் பூர்விகமாகக் கொண்டவர்கள். ''அவர் ரொம்ப அழகு இல்ல...'' என்று ஏகத்துக்கு சர்வான் பெருமூச்சு விட்டது ஐஸ்வர்யாராய் படம் பார்த்து. ''நான் நிறைய ஹிந்தி படம் பார்ப்பேன். அமிதாப், ஷாருக்கெல்லாம் எனக்கு ரொம்ப பிடிக்கும். அதுக்காக இந்தி தெரியுமானெல்லாம் கேட்காதீங்க; சுத்தமா தெரியாது. எங்க நாட்டுல படம் பார்க்கும்போது கீழே போடும் சப்டைட்டில் பார்த்துப் புரிஞ்சுப்பேன்'' என்றவரிடம் ''ஐஸ்வர்யாராயைச் சந்திப்பீங்களா?'' என்றால், ''ஏனில்லை; அமிதாப், ஷாருக்கைக் கூட சந்திக்கலாமனு இருக்கேன்'' என்கிறார் சர்வான்.


• சர்வான்

நாகமுத்துக்குப் பூர்வீகம் சென்னை. அட! தமிழர்! ''முன்னோர்கள் எப்பவோ இங்க வந்து செட்டில் ஆயிட்டதால சென்னையில எங்கன்னு எனக்குத் தெரியலை; ஆனா நானும் சர்வானும் இந்துக்கள். இப்பவும் தீபாவளி பண்டிகையை வெடி வெடித்துக் கொண்டாடுகிறோம்'' என்கிறார் இந்த சென்னை பாய்!




ராம்நாராயண்

தமிழ்நாட்டின் கிரிக்கெட் வரலாறு புத்தகமாகியிருக்கிறது. 'Mosquitos and Other Jolly Rovers - The story of Tamil Nadu Cricket என்ற ஜாலியான தலைப்பு!

ரஞ்சி ஆட்டக்காரரும் கிரிக்கெட் எழுத்தாளருமான வி. ராம்நாராயண் எழுதியுள்ள இப்புத்தகம் அக்.19 அன்று வெளியிடப்படுகிறது. தமிழ்நாட்டின் முதல்தர கிரிக்கெட் மட்டுமின்றி 'லீக்' ஆட்டங்கள், ஆட்டக்காரர்கள், மெட்ராஸ் கிரிக்கெட் அசோசியேஷன் தொடங்கி இத்துறையில் பல கிரிக்கெட் அமைப்புகளின் பங்கு, கிரிக்கெட் வளரவும் தழைக்கவும் தனியார் நிறுவனங்கள் வழங்கிய உதவி, தமிழர்களின் ரத்தத்தில் கிரிக்கெட் ஊறிப்போன கதை; இனிய நினைவுகள், சுவையான சம்பவங்கள், பழம்பெரும் கிரிக்கெட் விமர்சகர்களின் பசுமையான எழுத்துக்கள் என்று பல கனமான நயமான விஷயங்களின் தொகுப்பு இந்நூல். மிகச் சரியான நபரைக் கொண்டு இதை எழுதப் பணித்து, பதிப்பித்து வெளியிடும் சன்மார் நிறுவனத்துக்கு... வேறென்ன, சபாஷ்க்கு சபாஷ்!

# செகண்ட் சச்சின்!

இரண்டாவது சச்சின் என்கிறார்கள் ஷேவாக்கை. முதல் டெஸ்டில் முதல் இன்னிங்ஸில் 147 ரன்களை எடுத்து அவுட்டான பின், ''இது ஒரு சந்தோஷமான விஷயமில்லை; நான் பூரா தான் பேட் பண்ணணும்; வெளிய வரவே கூடாது; ஓபனிங் பேட்ஸ்மேன் நிலைச்சு நின்னாதான் அணியின் வெற்றிக்கு வலு சேர்க்கும்'' என்கிறார் ஷேவாக்.

தென்னாப்பிரிக்க போட்டிக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட போது மணிக்கு நூற்றி ஐம்பது கி.மீ. வேகத்தில் வீசும் பௌலிங் மெஷினுடன் பேட்டிங் செய்து பயிற்சி செய்தாராம் ஷேவாக், இந்தியாவில் அந்த வேகத்தில் பந்து வீச யாருமில்லை. பீல்டிங், பந்து வீச்சு என்று கலக்கும் இவரை வரப் போகும் உலகக் கோப்பை உச்சத்துக்குத் தூக்கும் என்கிறார்கள். – **ஏக், விஸ்வக்**

## அக்டோபர் 16 முதல் 22 வரை

## அக்னிசர்மா பக்கம்



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** இந்த வாரம் உங்களுக்கு யோக வாரம். துணிச்சல் தன்னம்பிக்கை உயரும். பண வசதி தாராளமா இருக்கும். எடுத்தக் காரியங்களை எப்பாடுபட்டாவது நிறைவேற்றிடுவீங்க. குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரும். வாரப் பின்பகுதியில் பெண்கள் உடல் நலன்ல கவனம் தேவை. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு மாமூல் பலன் தடைபடாது. அலுவலகத்தில் எல்லோரோட அரவணைப்பும் அன்பும் கிடைக்கும். எதிர்பார்த்திருந்த நல்ல விஷயங்கள் இப்ப நிறைவேறும். வேலை விஷயமா வெளிநாடு போக வாய்ப்பிருக்கு.

**ரிஷபம் :** புது முயற்சியில இறங்கவா வேண்டாமான்னு தவிச்சிக்கிட்டிருந்த நீங்க இனி தாராளமா இறங்கலாம். அதுக்கான நல்ல காலம் வந்தாச்சு. போட்டி, பொறாமை விலகி தொழிலதிபர்களுக்கு வெளிச்சம் கிடைக்கும். எரிச்சலடைய வைத்த பொருளாதாரப் பிரச்னைகள் விலகி சந்தோஷம் ஏற்படப் போகுது. சினிமாத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் வரலாம். ஆத்திரப்பட்டு எதுவும் பேச வேண்டாம். எல்லோரிடமும் சுமுகமா பழகி வருவது நல்லது. பெண்கள் சுப விஷேசங்கள்ல பங்கு கொள்ள சந்தர்ப்பம் வரும்.

**மிதுனம் :** எந்தக் காரியத்தையும் சாமர்த்தியமாகவும், சமயோசிதமாகவும் நிறைவேற்றிடுவீங்க. முகவசீகரம் கூடும். அடிக்கடி நீங்களே கண்ணாடியைப் பார்த்து ரசிச்சிக்குவீங்க. பேச்சில் நீங்களே பொறாமைப்படற மாதிரி கவர்ச்சி இருக்கும். அலுவலகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். சிக்கலான காரியத்தையும் உங்கள் திறமையால எளிதா முடிப்பீங்க. இதனால பெயர், புகழ் கிடைக்கும். மனசுல அமைதி நிலவும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து சேரும்.

**கடகம் :** இந்த வாரம் தெய்வ பலம் உங்களுக்கு உண்டு. இதனால மனசுல புது தெம்பும், தன்னம்பிக்கையும் உண்டாகும். அலுவலகத்தில் உற்சாகமான சூழ்நிலை நிலவும். சிலருக்கு பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கலாம். எதிர்ப்புகள் மறையும். புதிய வேலை முயற்சிகள்ல வெற்றி உண்டு. வேலை விஷயமாக சிலர் வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. மனை, நிலம் சம்பந்தமாக லாபம் உண்டு. சிலருக்கு புது வீடு கட்டும் யோகம் இருக்கிறது. பெண்களுக்கு இது உற்சாகமான வாரம். அறிமுகமில்லாதவங்ககிட்ட அதிகம் பழக வேண்டாம்.

**சிம்மம் :** உங்களை டென்ஷன் படுத்திக் கொண்டிருந்த மறைமுக, நேர்முக எதிர்ப்புகள்

மறையும். இதனால மனகல சந்தோஷம் நிலவும். பண வசதிக்குப் பஞ்சமில்லை. அரசியல்வாதிகள், ஆசிரியர்கள், மதபோதகர்கள் முன்னணிக்கு உயருவாங்க. புதிய முயற்சிகள் கைகூடும். ஏற்றுமதி இறக்குமதி, கொடுக்கல், வாங்கல்ல லாபம் உண்டு. பெண்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவாங்க. குடும்பத்தில் எதிர்பாராத புதிய செலவுகள் வந்து இம்சை பண்ணும். கலைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு உண்டு.

**கன்னி** : இந்த வாரம் கிரக சஞ்சாரம் உங்கள் ராசிநாதன் ஆட்சியில் உச்சம் பெற்று இருப்பதால் தெய்வ பலம் ஏற்படும். மனகல துணிவு தன்னம்பிக்கைப் பிறக்கும். எல்லா காரியங்களிலும் வெற்றி கிடைக்கும். அலுவலகத்தில் இதுவரை இருந்த கருத்து வேறுபாடுகள் மறைந்து நல்ல உறவு ஏற்படும். உங்கள் திறமைக்கேற்ப புகழ், பாராட்டுக் கிடைக்கும். உத்தியோக சம்பந்தமாக வெளியூர், வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு இது அதிர்ஷ்டமான வாரம்.

**துலாம்** : இந்த வாரம் புதிய முயற்சிகள் உங்களுக்குச் சாதகமா இருக்கும். நிர்வாக நிறுவனத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு உழைப்பு, திறமை பளிச்சிடும். மேலதிகாரிகள் பாராட்டுக் கிடைக்கும். சிறு சிறு பிரச்னைகள் அப்பப்ப தலை தூக்கினாலும் உடனே சுமூகமாயிடும். இதுக்காகக் கவலைப்பட வேண்டாம். கொடுக்கல் வாங்கல், சமயத்தில் கைகொடுக்கும். குடும்பத்தில் உறவினர்கள் நண்பர்கள் வருகை இருக்கும். இதனால சந்தோஷமா இருப்பீங்க. பெண்களுக்கு உற்சாகமானப் பலன்கள் கிடைக்கும். வியாபாரிகள், சுயமா தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம்.

**விருச்சிகம்** : இந்த வாரம் உங்க திறமை, அறிவாற்றல் பளிச்சிடும். இதனால புகழ் பாராட்டு உண்டு. அலுவலகத்தில் புதிய பொறுப்புகள் வந்து சேரும். பதவி உயர்வு, இடமாற்றமும் கிடைக்கலாம். வேலை இல்லாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும். குடும்பத்தில் அமைதி நிலவும். பெண்கள் புதிய நகை வாங்க வாய்ப்பு இருக்கு. கலைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு மாமூல் பலன் தடைபடாது. சட்டம், காவல், இராணுவம் ஆகியத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவாங்க.

**தனுசு** : இந்த வாரம் எதிர்பாராத பயணம் உண்டு. ஜாலியா அனுபவிங்க. மனகல தெளிவும் தன்னம்பிக்கையும் பிறக்கும். அலுவலகத்தில் மத்தவங்க ஆச்சரியப்படும்படியா

## கன்னிராசிக்காரரான அக்னிசர்மாவுக்கு மனத்தில் தன்னம்பிக்கை பிறக்குமாம்.



சாதனை பண்ணப் போறீங்க. கொடுக்கல் வாங்கல் சுமூகமா இருக்கும். ரொம்ப நாளா வராம இழுத்தடிச்சுட்டிருந்த பணம் இப்ப வந்து சந்தோஷப்படுத்தும். கடன் தொல்லைக் குறையும். குடும்பத்துல புதிய பொருள் சேர்க்கை நிகழும். வெளியூரிலிருந்து எதிர்பார்த்த நல்ல செய்தி வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப்புகழ், பாராட்டு உண்டு.

**மகரம்** : இந்த வாரம் சனி 6ம் இடத்தில் உலவுவதால் தெளிவான மனநிலை இருக்கும். தெய்வ அனுகிரகம், சரளமான பண வசதி ஏற்படும். புதிய உத்யோக முயற்சி அனுகூலம் தரும். சிறு தொழிலதிபர்கள் முன்னேற்றம் அடைவார்கள். குடும்பத்தில் ஒற்றுமை உண்டு. திருமணம் போன்ற சுபகாரியம் நடக்கும். மனை, நிலம், வீடு ஆகிய இனங்கள் அனுகூலம் தரும். குடும்பத்தில் இதுவரை இருந்த கருத்து வேறுபாடுகள் நீங்கி, நல்ல திருப்பம் உண்டாகும்.

**கும்பம்** : இந்த வாரம் நீங்கள் எடுக்கும் புதிய தொழில்கள் யாவும் வெற்றிகள் குவிக்கும். உங்கள் ராசிநாதன் பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் அமர்ந்து, அந்த வீட்டின் அதிபதியான புதன் ஆட்சி உச்சம் பெற்று இருப்பதனால், தெய்வ பலம் ஏற்படும். இயந்திரம், வாகனம், ஜவுளி, ஆயத்த ஆடைகள், பொன், வெள்ளி, ஆபரணம் ஆகியவை ஆதாயம் கொண்டு வரும். தொழில் சம்பந்தமாகப் பயணம் மேற்கொள்ள வேண்டி வரலாம். கலைத் துறை, சினிமா, நாடகம், நாட்டியம், சிற்பம், சங்கீதம் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்கள் முன்னேற்றம் காண்பார்கள்.

**மீனம்** : குரு பலம் பூரணமாக நிறைந்திருப்பதால், புதுமனை புகு விழா, திருமணம் போன்ற சுபகாரிய முயற்சியில் இறங்கலாம். குல தெய்வ பிரார்த்தனை, ஸ்தல யாத்திரை ஆகியன, திட்டமிட்டபடி நிறைவேறும். சுய தொழில் செய்பவர்கள் மேன்மை அடைவார்கள். ஹோட்டல், உணவு வகை, மருத்துவம், கெமிக்கல், ஆயத்த ஆடைகள், ஃபர்னீச்சர், தோல் பொருள் ஏற்றுமதி இறக்குமதி ஆகிய துறைகளைச் சார்ந்தவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். ஒரு சிலருக்கு, உயர் கல்விக்காக வெளிநாடு போகும் யோகம் அமையும்.

# டான்ஸ் ராஜா!

'புன்னகைப் பூவே' படத்திற்காக முதன்முதலாக ஒரு பாடலைப் பாடி, நடனமாடியிருக்கிறார் இசையமைப்பாளர் யுவன் சங்கர் ராஜா!

"இசை ஓர் அனுபவம். என் கனவுக்கு அப்பாலும் ஒரு மெல்லிய ராகம் மனத்தை வருடிட்டே இருக்கும். அந்த ராகத்தை இசையாக்கணும்னு அப்பப்ப நினைப்பேன். அந்த வருடலில் உருவான ஒரு பாப் இசை ரொம்பப் பிடிச்சிருந்தது. இயக்குனர் சபா சாரும், கலைப்புலி தாணு சாரும் இந்தப் பாட்டுக்கு நீங்களே முகங்காட்டுங்களேன்'னாங்க; நான் மறுக்கலை" என்கிறார் இந்த இசைப் புயல்! வழக்கமான பாடல்கள் போலில்லாமல் வித்தியாசமான பாப் இசையைப் பார்க்கலாமாம் இதில்!

"சபா ஸார் காட்சியமைப்பில் கலக்குபவர், தாணு சார் விளம்பரத்தில் கலக்குபவர். இவர்கள் படத்தில் முகங்காட்டுவது மகிழ்ச்சியானதுதானே" என்று சொல்லும் யுவன், இந்தப் பாடலுக்கு நடனமாடியதன் மூலம் நடிப்பு எவ்வளவு கஷ்டம் என்று தெரிந்து கொண்டாராம்.

"நான் ரூம்ல இருந்து இசை கம்போஸ் பண்றவன். வெளியில போய் கேமரா முன்னால மணிக்கணக்கா நின்னு டான்ஸ் பண்ணறதும் நடிக்கறதும் கஷ்டமாத் தான் தெரிந்தது" என்கிறார். இதற்கு இசைஞானி என்ன சொன்னாராம்?

"நல்லா பண்ணுடா!" — ஏக்ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

Heinz

Trust • Taste • Nutrition

# என்னையே நம்பி இருக்கும் என் குழந்தையின் ஊட்டசத்துக்கு நான் யாரை நம்புவது?




என் குழந்தைதான் எனக்கு ஒப்பற்ற செல்வம். அவன் என்னையே நம்பியிருப்பதால், கொஞ்சம் கவலைப்படுவது இயற்கைதான். பெரும்பாலான தாய்மார்கள், 'அவனுக்கு சரியான ஊட்டசத்து கிடைக்கிறதா, சரியான முறையில் வளர்ச்சி இருக்கிறதா?' என்றெல்லாம் கவலைப்படுகிறார்கள். ஆனால் எனக்கு அந்த கவலை இல்லை. ஏனெனில், ஃபாரெக்ஸ்இருக்கிறதே! ஃபாரெக்ஸை எளிதில் தயார் செய்ய முடியும். எனவே, குழந்தைக்கு பசி எடுத்தவுடனேயே ஊட்டலாம். அதுமட்டுமா? ஃபாரெக்ஸ்ஒருவிசேஷமுறையில்தயாரிக்கப் படுவதால் எளிதில் செரிக்கக் கூடியது. மற்றும், பால், கோதுமை, அரிசி, பழங்கள் மற்றும் காய்கறிகளின் இயற்கையான நற்குணங்கள் அதிசிறப்பாக அப்படியே இருக்கும். மேலும், ஃபாரெக்ஸ் என் குழந்தைக்கு புரோட்டீன்ஸ், கார்போஹைட்ரேட்ஸ், விட்டமின்ஸ் மற்றும் மினரல்ஸின் சரியான கலவை அடங்கிய சமச்சீர் ஊட்டசத்து அளிக்கிறது. எனவே, என் குழந்தையின் சரியான வளர்ச்சிக்கு வீட்டில் தயார் செய்த ஆகாரங்களுடன், நான் நம்புவது ஃபாரெக்ஸைதான்.

எனவே, 50 ஆண்டுகளுக்கும் மேலாக, பல தலைமுறைகளாக தாய்மார்கள் ஃபாரெக்ஸை நம்புவதில் ஆச்சரியம் இல்லை. ஒவ்வொரு முறையும் என் குழந்தை சிரிக்கும் போது, 'நன்றி, ஃபாரெக்ஸ் அம்மா!' என்று கூறுவது போல் இருக்கும்.



**ஃபாரெக்ஸ்®**

**வளர்ச்சிக்கு சிறந்த வழி**

6 ருசிகரமான சுவைகளில்



ரைஸ், வீட், வீட் வெஜிடபிள், வீட் மிக்ஸ்டு ஃப்ரூட்ஸ், வீட் ஆப்பிள்

வீட் எக்

இலவச குழந்தை பராமரிப்பு புத்தகத்திற்கு, குழந்தையின் பெயர்/பிறந்த தேதியுடன் எங்களுக்கு எழுதுங்கள்: ஹைன்ஸ் இண்டியா பி. லிட், த. பெ. எண் : 1907, மும்பை - 400 001.

IMPORTANT NOTICE: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY, INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.

महत्वपूर्ण सूचनाः माँ का दूध आपके बच्चे के लिये सर्वोत्तम है. ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें.

CONTRACT.FRX.2479TM

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka